# முத்தி நிச்சயம்

## மூலமும் சிற்றுரையும்

திருக்கயிலாயபரம்பரைத் திருத்தருமபுரவாதீனம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

---

திருக்கயிலாய பரம்பரைத்

தருமபுர வாதீன முதற்குரவராகிய

ஞானசம்பந்த தேசிக சுவாமிகள்

அருளிச்செய்த

# முத்திநிச்சய மூலமும்

ஷை யாதீன அடியார் குழாத்துள் ஒருவராகிய

வெள்ளியம்பலவாண முனிவர்

இயற்றியருளிய

## சிற்றுரையும்

ஷை யாதீன வித்துவான்

ப. மூ. சோமசுந்தரம் பிள்ளை M.A., L.T.

செய்த

ஆங்கில மொழி பெயர்ப்பும்.

இவை

ஷை யாதீனத்து 24-வது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ. சண்முகதேசிக பரமாசாரிய சுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

ஷை யாதீன வித்துவசிகாமணி

சுவாமிநாத பண்டிதர் அவர்களால்

பரிசோதிக்கப்பட்டு,

சென்னை

புரோகிரஸிவ் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

*Copyright*] 1934 [*500 Copies*

# PREFACE

The paths of Karma and Bhakti chalked out in the Vedas and the ways of Charya, Kriya and Yoga marked off in the Saiva Agamas are various, suited as they are to the different stages of spiritual maturity of the persons striving for realization. But the substance realized by following the path of Jnana must be one and the same in the true experience of all the great souls who have attained the fourth or tivra-tara stage of Saktinipata, that is, the fullest descent of the Grace of God. Hence the unanimity in what the Santanacharyas, the line of holy preceptors, and the Samayacharyas, the noble singers of the sublime songs, have proclaimed about the condition of the soul in final liberation.

The doctrine of Mukti conclusively ascertained by the great Saiva Siddhantins is stated clearly in the Sivajnana Siddhiyar as follows:—"As magnet attracts iron, so does God draw the soul to Himself. Just as fire transforms iron, so does He change the soul into His own form. As the fire burns away the dross, so does He destroy the mala in the soul. As salt dissolves in water and gives its properties to it, so does God unite with the soul through and through and endow it with His qualities. As the alchemist's stone removes the dirt from copper and transmutes it into gold, while never manifesting any quality of the gold in itself, so does God subject and control, transmute and transcend the soul. He remains united with the soul as indistinguishably and in such supreme sweetness as the taste in a blend of syrup, honey, milk, fruit-juice and candy"—Through these analogies and

illustrations an attempt is made to express the inexpressible, namely, Siva-bhoga. At the same time objections of the opponents are met and their opinions are refuted. This idea of Mukti includes the seven stages in the process of liberation as given in the Matanga Agama. It comprises the five states of pure wakefulness when the soul is made changeless, of pure drowsiness when it is transformed into God's own form, of pure sleep when it is made equal to Himself, of pure abstraction when it is completely subjugated, and of pure oblivion when it is placed in perfect enjoyment of supreme bliss. In it is also comprehended the ascent of the soul through Siva-rupa, Siva-darsana and Siva-yoga to the final bliss or Siva-bhoga. Such in brief is the conception of Bliss according to the Saiva Siddhantin who bases his authority on the Vedas, the Agamas, the experiences of the holy teachers and the sacred words of the saintly hymnologists.

Saint Guru Jnana Sambandha Desika, the founder of the Dharmapuram Mutt gave fresh utterance to this conception in his book called **Mukti-nischayam** taking opportunity of an occasion when he had to discuss the matter with a certain Kankatti Maraijnana Pandaram, an Atmanandavadin. His purpose in writing this book was that the teachers of Saiva Mutts who came after the great religious teachers to preserve and propogate the Saiva religion might not come to have differences of opinion regarding final liberation or fall into conflict with one another.

Two points are crucial in the conception of Mukti stated above, and differences of opinion exist about them. One is regarding the nature of ananda that is experienced and the other is regarding the nature of the equality with the Supreme Being. There are two important schools of thought which hold views different from those of the Saiva Siddhantin.

One is the atmanandavada which says that the ananda experienced by the soul is a quality of the soul itself; it is inherent in the soul; it is an atma-guna hidden by the malas and becoming apparent after their removal. The author of Mukti-nischayam examines this position in seventeen of the twenty-two stanzas which the book contains and concludes that the ananda is the quality of God. His arguments may be summarized thus. The very authorities, namely, the Vedas and Agamas, on which the Atmanandavadin relies, do not admit that the soul has any quality of ananda in its nature. If there be any passage where such a statement is made, it is a figurative, not a literal usage, to denote, by some kind of metonymy, the thoroughly indistinguishable condition in which the soul and the Supreme Being stand. Suppose that this ananda is merely the quality of the soul, where is the charm in one loving oneself and trying to enjoy oneself? What a waste it is to perform severe austerities through many lives if it simply ends in the perception of the Ego? If the joy were a quality of the soul, then how can there be all the travail of births and deaths? When one has a circumstantial perception that one is feeling the joy, one is certainly not in a condition of liberation; one is still in bondage. Joy is of two kinds, worldly joy and supreme bliss. The former is simply the fruit of some subtle form of Karma. The joy that is experienced without any idea of the perceiver, the perceived and perception, as during Samadhi, is the form of God dwelling in the soul and illuminating it. The nature of the soul is like that of a crystal.

The other school of thought, called Sivasamavada, holds that in Mukti the soul becomes absolutely equal to the Supreme Being. If the Sivasamavadin says that both are Sat, Chit and Ananda and therefore they are equal, it has

been shown that ananda is not a quality of the soul. If he admits this conclusion and proceeds to say that God is only Sat and Chit like the soul and therefore they are equal, he is going against all sacred authority which maintains that God is ananda. Even if it is admitted for the sake of argument that both God and the soul are forms only of Sat and Chit, his position that both are therefore equal cannot be maintained. The eye and the sun are both forms of light. They are not equal at all on that account. The appearance of equality is due to the thorough union of the Supreme Being with the crystal-like soul.

If either of them holds that the removal of the malas is itself Mukti, they are not to be considered Saiva Siddhantins.

The author concludes by stating that Mukti is the condition of the soul when, with its impurity removed, it experiences the swelling flood of Sivananda and becomes indistinguishably united with the Supreme Being.

There are two commentaries on this work written by Sri Velliambala Tampiran, one of the munivars of the Mutt, a contemporary and teacher of Sri Sivaprakasa Swamigal the author of Prabhulinga-leela. One of them is very elaborate. A briefer exposition based on the elaborate commentary is also extant. This latter has been carefully revised and edited by M. R. Ry. Swaminatha Pandithar Avergal, Vidva Sikamani of the Dharmapuram Mutt. This commentary has been brought out after careful comparison with the original manuscripts in the possession of the holy Mutt, and also in the hands of M. R. Ry. Vidvan Sadasiva Mudaliar Avergal, Shiyali; and my father Vidva Sikamani M. R. Ry. P. A. Muthuthandavaraya Pillai Avl. of the Dharmapuram Mutt. I am thankful to Messrs C. K. Subramania Mudaliar Avl. B. A., of Coimbatore and K. Subra-

mania Pillai Avl. M.A. M.L., of Tinnevelly for their valuable suggestions and to M. R. Ry., Vidvan S. Kannuswami Pillai Avl. B. A. of Shiyali for his help in correcting the proofs and seeing the book through the press.

May Sivajnana be the heritage of the whole world is the solicitous thought that prompts His Holiness Sri La Sri Subramanya Desika Paramacharya Swamigal * the Adhinakartha of the Dharmapuram Mutt, twenty third in descent from the author of Mukti-Nischayam, to bring to light many a rare and important work treasured in the archives of the Mutt.

"Sing Ye of Kudal- Alavai of the Lord with the victorious bull.
Desire after it in your hearts and live in felicity"

Shiyali
2-5-1932.

P. M. SOMASUNDARAN.

* His Holiness has since attained Mukthi on the 26-6-33. Hallowed be his name! His successor Sri la sri Shanmuka Desika Paramacharya Swamigal, twenty-fourth in decent, evinces the same keen interest in the advancement ofSaiva Siddhanta Philosophy. May he live long and carry out the cherished desires of his predecessor!

## பொருளடக்கம்

சிவமயம்

# நான்முகம்

## பிள்ளையார் காப்பு

வெண்பாட்டு.

நான்முகத்தைக் கூறமுத னான்முகத்தி னேரெழுத்தாம்
*நான்முகத்தன் முன்னிற்கு நாடியதை—வான்முகத்தார்
சீர்த்தி செறிந்துதிகழ் தேஞ்சுப் பிரமணிய
மூர்த்தி யுவந்துநிற்கு முன்.

## குருவணக்கம்

அகவற்பாட்டு

முப்புரம் பொடித்த வப்பர னுருக்கொள்
சுப்பிர மணிய திப்பிய குருமணி
நற்பத மிறைஞ்சுது நலனுறற் பொருட்டே.

## நான்முக வாரம்பம்

†அண்டசஞ் சுவேத சங்க ளுற்பிச்சஞ் சராயு சத்தோ
டெண்டரு நாலெண் பத்து நான்குநூ ருயி ரத்தா
யுண்டுபல் யோனி யெல்லா மொழித்துமா னுடத்து தித்தல்
கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரியங் காண்.

என்று "அருட்பெருங் கடலுட் டிளைத்துந் தேக்கியு" நின்ற அருணந்திசிவம் சித்தியுட் டிருவாய் மலர்ந்தருளிய

---

* நான்முகத்தன் என்பதில் முகம் ஆகுபெயர். † இக்கருத்துப் பற்றியே புறமதத்தரும், தமது நூலுள் "பரவை வெண்டிரை வடகடற் படுநுகத்துளை யுட் - டிரைசெய் தெண்கட லிட்டதோர் நோன்கழி சிவணி - அரசவத் துளை யகவயிற் செறிந்தென வரிதாற் - பெரிய யோனிகள் பிழைத்திவண் மானிடம் பெறலே" என்று கூறுதல் காண்க.

வண்ணம், ஆன்மாக்கள் எண்பத்துநான்கு நூறாயிர யோனி பேதங்களி னின்றும் விரிந்த பலவகைப் பிறவி பேதங்களை, அநுபவமுகத்தானும் பிராயச்சித்தவாயிலானும் ஒழித்து மானிடப்பிறப்பில் வருதல், ஒருவன் பெரும் புறக்கடலைத் துணையின்றித் தன்கையால் நீந்திக் கரையேறினாற் போலும் அருமைத்தாம் என்க.

இத்துணை யருமைத்தாய மானிடப் பிறப்பை எடுத்தோர் அடையவேண்டிய உறுதிப் பொருள்கள், அறம் பொருள் இன்பம் வீடு என நால்வகைத்தாம். அவற்றுள் அறம் வீட்டுக்குப் பரம்பரா காரணமாதலன்றி நேரே வாயிலாகாமையானும், பொருளும் இன்பமும் இம்மைக்கண்ணன வாய்த் துன்பத்தொடு விரவியனவாய் அழியுமாலைய வாகலானும், அவைபோலன்றி, வீடு துன்பத்தோடு விரவாததும் அழியாமாலைத்ததாயு முள்ள பேரின்பத்தைப் பயத்தலின், அவ்வீடே மக்களுயிர்க்குச் சிறந்த உறுதி பயப்பதெனஉயர்ந்தோரான் எடுத்துக்கொள்ளப்பட்டது.

அம்முத்திநிலை, பல சமயத்தாரானும் பலவகை நிலையாற் கூறப்படும். அவையும் பசுபத முத்திகளாய்ச் சிற்றின்ப முத்திகளாய்த் துன்பத்துடன் விரவியனவாய் அழிதன்மாலையவா யிருத்தலின், முடிவாகிய முத்திகள் எனப் படா. ஆகலான், *ஆன்மானந்தவாதம் சிவசமவாதம் என்னும் இரு மத முத்திகளை மறுக்குமுகத்தான், ஏனை மத முத்திகளையும் மறுத்தமை குறிப்பாற் காட்டிப் பிறப்பிறப்புட் படுத்துத் துன்புறுத்தாத முடிந்த பேரின்பமாகிய முத்தி யிதுவென

---

* ஆன்மானந்தவாதம்—ஆன்மாவிற்கு இயற்கையாக ஆனந்தம் உண்டென்றும் அது மலத்தாற் றடைப்பட்ட தென்றும் அம்மல நீங்க அவ்வானந்தம் வெளிப்பட்டுத் தோன்ற அதனை ஆன்மா அநுபவிக்கும் என்றுங் கூறும் மதம். வாதம் - கூறுதல், தர்க்கித்தலுமாம்.

உணர்த்தி உலகுக்குபகரிப்பான் பெருங்கருணை மிகுதிப் பாட்டினாலே வேணவாக் கொண்ட * ஞானமூர்த்தி யொருவர், சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல் என்னும் வனப்பு மிக்குத் தோன்ற "முத்திநிச்சயம்" எனப் பெயரிய இவ்வரிய நூலை இருபத்திரண்டு வெண்பாக்களி னமைத்தியற்றி யருளினார்.

இங்ஙனம் இதனை இயற்றி யருளிய ஞானமூர்த்தியார், திருக்கைலாச பரம்பரைத் திவ்விய மெய்கண்ட சந்தான தருமபுர வாதீன நிலையத்தை ஆதிக்கண் நிறீஇ யருளிய தலைமைப்பாட்டினை யுடையராய், அதனால் அவ்வாதீன நிலையத் திருமடாலய மகா ஞானபீடத்து முதற்குரவராய் எழுந்தருளினவரும், "சம்பிரதாய தீபம்" என்னு நூலிலே "குருமரபு சம்பிரதாயம்" என்னும் பகுதியிலே யுள்ள

"அருவு முருவு மருவுருவு மல்லா
வொருவ னுயிர்க்குயிரா யோங்கித்—திருவார்
கமலைவரு ஞானப்ர காசனென வந்தே
யமலபதந் தந்தெனையாண் டான்."

"ஆரறிவார் நீதிவழி யாரறிவார் சித்திமுத்தி
யாரறிவார் நற்றவங்க ளன்பனைத்தும்—பாரெவர்க்குங்
கர்த்தன் கமலையில்வாழ் ஞானப்ர காசனெனு
மத்தனென்போல் வந்திலனே னல்."

* இம்மகாமூர்த்தி காலத்திற்றான் ஆன்மானந்தவாத மதம் உண்டாயிற்றென்பது இந்நூற் பாயிரவுரையிற் காண்க. சிவசமவாதம் அக்காலத்துத் தலையெடுத்தோங்கிற்று என்பது 'அண்ணலைப்போலானந்த மான்மாவிற் குண்டாகில்—எண்ணில் பிறப்பிறப்பை யெய்திடுமோ" எனக்கூறி ஆன்மானந்தவாதியை மறுத்தமையி னமையாது, "ஆனந்த மின்றி யரன் சமதை முத்தியெனில்—தானந்த வேதாகமஞ் சாற்று" எனவும் "சிவசமமே முத்தி எனிற் சித்தாந்த மன்றாம்" எனவும் இந்நூலுட் கூறி மறுத்தலான் நன்கு விளங்குகின்றது.

"அரிய யற்கு மூன்ன்ற ளடிமுடியுங் காணப்
பெரியவனே வந்து பிறந்து—துரியம்
பெருக்கின்றான் ஞானப் பிரகாச ஞகி
யிருக்கின்ற ஞரூரி லின்று."

என்று மூன்று வெண்பாக்களினாலும் வியந்து கூறப் பெற்ற கமலை * ஞானப்பிரகாசர் என்னும் தீக்ஷா நாம முடைய ஞாஞசாரியரிடம் †ஞானோபதேசம் பெற்றவரும் "ஞானசம்பந்த தேசிகர் சமுகமாலை" "தாலாட்டு" திருப் பள்ளி யெழுச்சி" என்னும் சிறந்த பிரபந்தங்களாற் போற் றப் பெற்றவரும், "சோடசகலாப் பிரசாதசட்கம்" திரி பதார்த்த ரூபாதி தசகாரிய வகவல், சிவபோகசாரம், சொக்க நாத வெண்பா, பரமானந்த விளக்கம், சொக்கநாதக் கலித் துறை, பண்டாரக் கலித்துறை என்னும் மிகச் சிறந்த சித் தாந்த சாத்திரங்களை அருளிச் செய்தவரும் ஆகிய ஞான சம்பந்த குரவராவார்.

இஞ்ஞான தேசிகர் வேதாகம முதலிய சகல சாஸ்திரங் களிலும் வல்லுநர் என்பது "எந்தமுத்தி சித்தாந்த சைவத்

---

* இவர் இயற்பெயர் சிதம்பரநாதர் என்பது, " சீர்மேவு சிதம் பரநாதனெனும்—பேர்மேவு ஞானப்பிரகாசன் " என்னு மிந்நூன் முதற்செய்யுளா லுணர்க. † இவரிடத்து ஞானோபதேசம் பெற்றமை "கமலை உறையு ஞானப்பிர காசனென் றொருவன் திருவடியே தின மிறைஞ்சும்—தருமை ஞானசம்பந்த தேசிகனே" என இந்நூல் பாயிரத்துள்ளும், "ஞானப் பிரகாசன் தார்மேவு சேவடிகள் போற்றி" என இந்நூலினுள்ளும் "ஆரூரின் ஞானப்ர காசன் றருந்தருமெழிற் —கமலா புரந்தங்கி வருஞானசம்பந்த கருணாகரன்" என ஞான சம்பந்தர் சமுகமாலையுள்ளும் "கமலைவாழ் ஞானப்ரகாச னருளால் யானும்—விமலமுறக் கூடலிலே மிக்குதயஞ் செய்தானே" என ஞானசம்பந்த தேசிகர் தாலாட்டுள்ளும் "நற்கமலை யாதியெனு ஞான ப்ரகாசனருள் ஞானசம்பந்த குருவே" என " ஞானசம்பந்த தேசிகர் திருப்பள்ளி யெழுச்சி " யுள்ளும் கூறப்படுதலான் உணர்க.

தில்" எனவும், "வேதாகமத்தின் விதித்த முத்தி" எனவும் "தன்பிரம கீதைவே தாந்தஞ் சிவாகமநூல்" எனவும் "இன்ப முயிர்க்குண்டென்ற தேதோ வுபநிடதம்—துன்பில் பிரம கீதை" எனவும் "தானந்த வேதா கமஞ்சாற்று" எனவும் இந்நூலினுட் கூறலானும், மேலே சுட்டிய அவர் செய்த நூல்களானும், "வேதாந்த வேதகா போதாந்த போதகா மிக்கசித் தாந்த விகிர்தா—நாதாந்த நாயகா ஞானசம் பந்தகுரு நாதனே பள்ளி யுணராய்" என "ஞானசம்பந்த தேசிகர் திருப்பள்ளி யெழுச்சி" யுள்ளும் கூறப்படுதலானும் விளங்கும். அம்மட்டோ! கவிபாடும் மதுகையின் மிக்கார் என்பதும் இந்நூலானும், "கற்றவர் சினத்தரு வனத்தையு மலைக்குமொரு கவிதையாளன்" என்னு "ஞானசம்பந்தர் சமுகமாலை" யானும் நன்றாகத் தெரிகின்றது.

தருமையம்பதிக்கணுள்ள இம்மூர்த்தியின் சமாதிக் கோயில் மற்றைச் சமாதிக் கோயில் போலாது பெரிய சிவா லயங்கள் போலப் பரிவார தேவர்கள் எழுந்தருளியிருக்கும் மண்டபக் கோயிலோடு பெரிதாகக் கட்டப்பட்டுத் துசத் தம்பம் நிறுவப்பெற்று, நித்திய நைமித்தியங்களாகிய பூசையும் விழாவும் அவற்றிற்கென அரசர் முதலியோரால் விடப்பட்ட இறையிலி நிலங்களின் வருவாய் கொண்டு விதி பிறழாது இன்றும் நடத்தப்பட்டு வருவதால் இஞ்ஞானமூர்த் தியின் மகிமை தமிழுலகமெங்கும் பரக்கப் பெற்றிருத்தலா னும் யாவரும் இலகுவில் அறியலாம்.

ஒருகாலத்திலே சோழதேயத்தை யாண்ட அரச னொருவன், காவேரி சங்கம•தீர்த்த விசேடத்தைப் பல்லாற் றானு முணர்ந்து அதில் ஸ்நானம் செய்ய விரும்பி அப்பட்டி னம் நோக்கிச் செல்லும்போது மார்க்கத்தின் மத்தியிலுள்ள தருமையம்பதியைக் குறுகி, அங்குள்ள சிவத்துவேஷிகள்

கருத்துக் கிசைந்து இக்கோயிலை இடிக்கும்படி ஆக்ஞை செய்ய, ஏவலாளர் இருப்புக்கோல் கொண்டு குத்தப்பட்ட இடங்களெல்லாம் இரத்தம் பிலிற்ற அவர்கள் மூர்ச்சை யடைந்தனர். அரசனும் குருடனாயினன். சிவத்துவேஷிக ளும் ஊமைகளாயினர். அவற்றை அறிந்த அரசன், அக்காலத் துத் தருமையாதீன மடாலயத்தில் எழுந்தருளியிருந்த திருவம்பல தேசிக மூர்த்திகள் திருவடிகளை வணங்கித் தாம் செய்த சிவத்துரோகத்தை விண்ணப்பஞ்செய்து அதனை நீக்கிப் பார்வை தந்தருளவேண்டு மென்று பிரார்த்தித்துக் கொள்ள, அவர், தாம் அடைந்திருந்த திருவருள் வலத்தால் அங்ஙனம் செய்தருளினர். கண்பெற்ற அரசன் தேசிக மூர்த்திகளோடு ஞானசம்பந்தர் கோயிலுக்குச் சென்று அவ ரைத் தரிசித்து ஆலயத்தை வலம் வரும்பொழுது மூர்ச்சை யடைந்து கிடக்கும் ஏவலாளர்களை அவ்வரசன் கண்டு தேசிக மூர்த்திகளை இவர்களை எழுப்பித்தரல் வேண்டு மென்று பிரார்த்திக்க, அவர்கள் மீது விபூதி தெறித்து எழுப்பியருளி னர். ஊமைகளான சிவத்துவேஷிகளுக்கும் அரசன் வேண்டு கோளுக் கிணங்கி ஊமை தீர்த்தருளினர். இச் சரிதத்தாலும் இம் முத்திநிச்சய நூல் ஆக்கியருளிய கருத்தாவாகிய ஞான சம்பந்ததேசிகர் பிரபாவம் நன்கு விளங்கும். அதனை இன் னும் விரிப்பிற் பின்னும் பெருகுமாகலான் "ஞானசம்பந்தர் சரித்திரம்" என்னும் நூலுட் காண்க.

திருக்கைலாச பரம்பரைப் புறச்சந்தானத்து முதற்கண் வைத் தெண்ணப்படும் பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவர் காலந்தொடங்கிக் கமலை ஞானப்பிரகாச குரவர் காலம் வரை, தருமபுரவாதீன நிலையம் தாபிக்கப்படவில்லை. ஆகலான், அவ்வாதீனத்துப் பிற்றை ஞான்றுக் குரவர்கள், அதனைத் தாபித்தருளிய ஞானசம்பந்ததேசிக மூர்த்திகளை

அந்நிலைய ஞானபீடாதிபதியாகிய முதற்குரவாக வைத்தெண்ணி வழிபட்டு வருகின்றனர்.

இத்துணை அற்புதமும் மகிமையும் வாய்ந்த ஞானதேசிக சிகாமணியாகிய தருமை ஞானசம்பந்ததேசிக முதற்குரவர் அருளிச்செய்த தந்நிகரில்லாச் சைவசித்தாந்தமாகிய "முத்தி நிச்சய" மென்னும் இந்நூலுக்குச் சிற்றுரையும் பேருரையாகிய மாபாடியமும் இயற்றியருளிய முனிவர்பெருமான் வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகளாவார். இம் முனிவர் இவ்வுரைகளே யன்றிச் சிவஞான சித்தியாருக்கு * "ஞானாவரணவிளக்க" மெனப் பெயரிய மாபாடியமொன்றும் செய்தருளினார். இவ்வுரைகளை உற்று நோக்குவார்களுக்கு இம்முனிவரர் வேதாகமமுதலிய சமஸ்த சாஸ்திரங்களினும், இலக்கண இலக்கிய தருக்க மீமாஞ்சை முதலிய நூல்களினும் மிக மேலாகிய பாண்டித்தியமுடையவ ரென்பதும், வடமொழிக் கடலும் தென்மொழிக் கடலும் நிலைகண்டுணர்ந்தவ ரென்பதும் வெள்ளிடை மலைபோற் றெள்ளிதிற் புலப்படும். இவ்வுரைகளே யன்றிப் பலநூல்களையும் செய்தருளினார் என்பதும் அவ்வாதீனத்து அடியார் குழாத்தினர் கர்ணபரம்பரையால் தெரியவருகின்றது. அவற்றுள் இப்போது † "மிருகேந்திரம்" என்னும் நூல் ஒன்று கிடைத்திருக்கின்றது.

---

* † இம்மாபாடியமும், முத்திநிச்சய மாபாடியமும், மிருகேந்திரமும் தருமபுர வாதீன குருபீடத்தில் இருபத்து மூன்றாம் சிகாமணியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக மகா சந்நிதானத்தாலும் இதுபோது இருபத்துநாலாவது குருமூர்த்தியாக எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக மகா சந்நிதானத்தாலும் உலோகோபகாரமாய் அச்சுவாகன மேற்றிப் பவனி வருவித்தற்பொருட்டு எழுதுவிக்கப்படுகின்றது.

இம்முனிவரரே "ஞானசம்பந்ததேசிகர் சமுகமாலை" "தாலாட்டு" "திருப்பள்ளியெழுச்சி" முதலிய சிறந்த பிரபந் தங்களை இயற்றி யருளிய கவிவாணருமாவர். தேவாரப் பதிகங்களைப்போல் இவர்பாடிய சில பதிகங்களும், சில தனிப் பாடல்களும் தேவாரத்துள்ளும் பெரியபுராணத்துள்ளும் சேர்க்கப்பட்டமையே இம்முனிவரரைக் கவிவாணர் கவிச் சக்கரவர்த்தி என்று கூறுவதற்குப் போதிய சான்றாகும். தருமையாதீன குருபீடத்து நான்காவது குருமூர்த்தியாக வீற்றிருந்தருளிய மாசிலாமணித் தேசிகோத்த மரிடத்தில் இருவகைத் தீக்ஷையும் சைவ சந்நியாசமும் பெற்றவர். ஐந்துவயது வரையும் மூங்கைப்பிள்ளையாயிருந்து திருச் செந்தூர் முருகக்கடவுளருளால் அது தீர்ந்து அப்பொழுதே அவரது வரப்பிரசாதத்தினால் "பூமேவு செங்கமலப்புத்தேள்" என்பதை முதலாக வுடைய கந்தர்கலி வெண்பா என்னும் அரிய பிரபந்தத்தையும் பின்னர் "மீனாக்ஷியம்மை பிள்ளைத் தமிழ்" "முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்" "சிதம்பரம் செய்யுட் கோவை" முதலிய அநேக அற்புதம் பயக்கும் பிரபந்தங்களையும் இயற்றியருளிய குமரகுருபர சுவாமி களிடத்தும் காசி க்ஷேத்திர மடைந்து கல்வி கற்றவர் என்ப.

மேற்படி ஆதின குருபீடத்தில் ஐந்தாவது குருமூர்த்தி யாக வீற்றிருந்தருளிய ஞான தேசிகரிடத்தில் ஞானவதி தீக்ஷைபெற்று அவர் சந்நிதியில் மெய்கண்ட சாத்திரம் பண்டார சாத்திரம் என்னும் சித்தாந்த சாத்திரங்களை ஐயம், திரிபு, அறியாமை என்னு முக்குற்றமு நீங்கக் கற்றுணர்ந் தவர். திருக்குறளுக்குத் தெளிபொருள் விளக்கப் பதவுரை, திருவள்ளுவமாலைக்கு விசேடஉரையோடு கூடிய பதவுரை, நைடதத்துக்கு விருத்தியுரை முதலிய சிறந்த உரைகள் செய்த வரும் திருக்காளத்தி புராணம் முதலிய பல புராணங்களும்

பிரபுலிங்க லீலையும் அத்துவித வெண்பா என்னும் வேதாந்த நூலும் திருவெங்கைக் கோவை முதலிய இருபத்திரண்டு பிரபந்தங்களும் இயற்றிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளுக்கும் அவர்கள் சகோதரர்களாகிய வேலைய சுவாமிகளுக்கும் கருணைப்பிரகாச சுவாமிகளுக்கும் பேரிலக்கணம் கற்பித்த போதகாசிரியரும் இம்முனிவரே.

இன்னும், இம்முனிவரர் செய்த நூலுரைகளால் ஈசுவரனிடத்தும் உயர்ந்தோரிடத்தும் பற்றுதலாகிய பத்தியும், உயிர்களுக்குள்ள துக்கத்தை மாற்ற விரும்பலாகிய கருணையும், புண்ணியம் செய்வோரிடத்துச் சிநேகமாகிய மைத்திரமும், சுகிகளிடத் துவகையாகிய முதிதையும், பாவிகளிடத்தில் வெறுப்பாகிய உபேக்ஷையும், பலரும் சுகமடைய நடத்தும் முறையாகிய நீதியும், பிறர் செய்த தீமையை மாறு செய்யாது சகித்தலாகிய பொறையும், குலம் கல்வி செல்வம் அதிகாரம் இளமை முதலிய வற்றால் உயர்வு பெற்றிருந்தாலும் செருக்கற்றுத் தன்னைக் கீழ்ப்படுத்தலாகிய அடக்கமும், பிறரை உபசரித்தலாகிய ஆதரமும், தகாதகாரிய முயற்சியிலே மனதைச் சுருக்கலும், பழிக்கப்பட்ட செய்கையின் விலகுதலுமாகிய இலச்சையும், ஆராயப்பட்ட பொருளிலே இஃது இப்படியே யன்றிப் பிறிதுபடி யன்று என நிகழும் நிச்சய புத்தியாகிய சிரத்தையும், உயிரை உடம்பின் நீக்காமையாகிய கொல்லாமையும், உள்ளதை உள்ளபடி கூறுதலாகிய மெய்மையும், பிறர் பொருளை அநுமதியன்றி மறைவாகக் கவராமையாகிய கள்ளாமையும், புணர்ச்சி விரும்பாமையாகிய காமியாமையும், மண் சலம் முதலிய வற்றாற் சுத்தி செய்தலாகிய சௌசமும், நன்கு தியானிக்கப்படும் கடவுளை நியதகாலத்திலே வழிபடலாகிய சந்தியாவந்தனமும், ஈசுவரனை விம்பத்திலே பாவித்து உபசரித்து உபாசித்தலாகிய

பூசையும், வாச்சியப் பொருளாகிய ஈசுவரனை எதிர்முகமாக்கு தற்பொருட்டு வாசகமாகிய மந்திரத்தை உச்சரித்தலாகிய செபமும், மனம் இந்திரிய விஷயத்திற் செல்லாமல் ஈசுவர விஷயத்திலே நிற்றற் பொருட்டு உணவைக் குறைத்து உடம்பை ஒறுத்தலாகிய தவமும், நீதி வழியாற் பெற்ற பொருளைப் பிரதியுபகாரங் குறியாது சற்பாத்திரத் திற்கு அன்போடு கொடுத்தலாகிய தானமும், நல்லறிவு உதித்தற் பொருட்டு மெய்ந்நூற் படித்தலாகிய ஓதலும் முதலாகிய இப்புண்ணியங்கள் இம்முனிவரிடத்திற் குடி கொண்டிருந்தன வென்பதும், கடவுளை நிந்தித்தலும், கடவுளுக்குப் பிழை செய்தலும், கடவுளிற் பற்றின்மையும், கடவுளாணையைக் கடத்தலுமாகிய ஈசுவர தூஷணமும், சீவர்களிடத்திற் பகை செய்தலாகிய சீவவிரோதமும், பிறரைக் கெடுக்க விரும்பலாகிய துரோகமும், தகாதகாரியத்தில் விரும்பலாகிய காமமும், அநியாயமாகப் பிறர் பொருளில் விரும்பலாகிய உலோபமும், உசிதகாரியத்திற் செலவிடாது பொருளைக்காக்க விரும்பலாகிய கார்ப்பணியமும், பிற ருடைய நன்மையைத்தடுக்க விரும்பலாகிய மற்சரமும், உள் ளதை மறைத்து இல்லதைக் காட்டலாகிய வஞ்சகமும், செருக்கும், தன்னினில்லாத குணங்களை ஏற்றித் தன்னு யர்ச்சி கருதலுமாகிய மதமும், பிறரை அவமதித்தலும் பிறர் மேற் பற்றின்மையுமாகிய அஹங்காரமும், வேண்டப்பட்டது தடைப்பட்ட இடத்துத் தோன்றுகின்ற மனக்குழப்பமும் அதற்குவந்த தடையிலே முரணுதலுமாகிய கோபமும், பிற ருடைய குணத்திலே குற்ற மேற்றலாகிய அசூயையும், இல் லதுகூறலாகிய பொய்யும், கோட் சொல்லலும், காணாதவழி பிறரை இகழ்ந்து கூறலுமாகிய குறளையும், நெட்டூர வசன மாகிய கடுஞ்சொல்லும் முதலிய பாவங்கள் சொப்பனத்தி

லும் அணுகப்பெற்றிலர் என்பதும், புண்ணியங்களுக்கு மூல மாகிய மெய்யறிவே சொரூபமாகவுள்ளவர், சகல பாவங்களுக் கும் மூலமாகிய விபரீத அறிவு அணுத்துணையும் அணுகப் பெறாதவர் என்பதும் நன்கு விளங்குமாறு காண்க.

இன்னும் இம்முனிவரர் சிவபத்தி மிகுதிப் பாட்டால் சேதுமுதல் காசிவரை யாத்திரை செய்ய விரும்பிச் சென்ற காலத்தில் திருச்செந்தூர், திருநெல்வேலிச் சிந்துபூந்துறை, மதுரை, திருச்சிராப்பள்ளி, திருவாரூர், வைத்தீஸ்வரன் கோயில், திருவெண்காடு, சிதம்பரம், திருப்பாதிரிப்புலியூர், திருவதிகை வீரட்டானம், திருவண்ணாமலை, திருக்கழுக் குன்றம், காஞ்சிபுரம், திருமயிலாப்பூர், திருவான்மியூர், திருவொற்றியூர், காசி என்னும் ஸ்தலங்களில் நீட்டித்த காலம் வாசஞ் செய்தார்களென்பதும், அக்காலங்களில் அங்கங்கேயுள்ள வடமொழி தென்மொழி கற்க விரும்பிய பல மாணாக்கர்களுக்கு அவற்றைக் கற்பித்தாரென்பதும், ஆதிசைவப் பிராமணர்களுக்குச் சிவாகமங்களையும் சித்தாந்த சாத்திரங்களையும் ஓதுவித்தாரென்பதும், வைத்தீசுவரன் கோயிலிலும் குருமாணக்குடி என வழங்குகின்ற திருக்கண் ணார் கோயிலிலும் தாமே சில திருப்பணிகளைச் செய்வித்தா ரென்பதும், காசியிலே கேதார கட்டத்திலே கேதாரேசுவர சுவாமிக்கு குமாரகுருபரசுவாமிகள் ஆக்ஞைப்படி அவரோடு கூடவிருந்து திருப்பணி செய்வித்தாரென்பதும், திருவெண் காட்டிலே நடேச மூர்த்திக்குச் சபை கட்டுவித்து முடித்தா ரென்பதும் அவ்வாதீனத் திருக்கூட்டத்தார் கர்ணபரம்பரை யாகத் தெரிகின்றது.

இம்முனிவரர் இவ்வாறே தம்காலத்தையும் கருத்தை யும் பொருளையும் சிவஸ்தலயாத்திரை செய்தலினும், நன்

மாணுக்கர்களுக்கு வித்தை கற்பித்தலினும், நூலுரை செய்த லினும், பிரசங்கவாயிலாகச் சைவஸ்தாபனம் செய்தலினும் வீழ்நாள் படாமற்போக்கி இறுதியிலே உபநிடதத்தாலும் புகழப் பெற்ற சிதம்பரஸ்தலத்தில் வந்து நடேசமூர்த்தியின் குஞ்சிதபாததரிசனம் செய்து சிவயோகத்தமர்ந்து பரிபூரண தசையை யடைந்தருளினுர். அம்முனிவருடைய சமாதிக் கோயில் அங்கே தருமையாதீன மடாலயத்தைச் சேர்ந்த நிலத்திலே கட்டப்பட்டு இன்றும் அம்மூர்த்திக்குப் பூசை நடந்து வருகின்றது.

இந்நூலாசிரியர் மகிமை உரையாசிரியர் மகிமைகள் இத்துணைப் பெரிதாமாயின் அவர்கள் செய்த நூற் பெருமையும் உரைப்பெருமையும் இத்துணைப் பெருமையுடையன வென்பது நாம் சொல்லவும் வேண்டுமா! ஆகலான் இந்நூலுரைகளை உண்மை முத்தியடைய விரும்பும் சைவசமயி கள் யாவரும் தமக்கு இன்றியமையாத ஈடும் எடுப்புமில்லா இரத்தினுபரணமாகக்கொண்டு தாம் தரித்துக்கோடற்குரிய மகாமகிமையுடையனவென்று கடைப்பிடிப்பார்களாக.

பன்னூலுங் கற்றுப் பரந்த அறிவினையுடைய மிகச் சிறந்த மகத்துவமிக்க வித்துவான்களாற் பரிசோதித்தற் குரிய இத்துணைப் பெருஞ்சிறப்பினவாகிய நூலுரைகளை தருமையாதீன மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் சின்னூலுங் கல்லாத சிற்றறிவுடையேனைப் பரி சோதிக்கும்படி கட்டளையிட்டருளினுர்கள். அங்ஙனஞ் செய்தற்கு அடியேன் ஒருசிறிதும் அருகனல்லனுயினும், "*மூத்தோர் சொன்ன வார்த்தை யமிர்தம்" என்னும் ஆப்த

---

*மூத்தோர் அறிவானுன்ற மகத்துக்கள் ; வயதான் மூத்தோரன்று.

வாக்கியம் நோக்கி அதனை மறுத்தற்கு மிகவஞ்சி அடியேன் சிற்றறிவுக்கெட்டிய பிரகாரம் ஒருவாறு பரிசோதித்து முடித்தேன். ஆகலான் மகாசந்நிதானமும் கனம்பொருந்திய ஏனை வித்துவான்களும் இவற்றிற் காணப்படும் குற்றங்களைத் தமியேன் தாமதகுணச்செயலால் நிகழ்ந்தனவெனக்கொண்டு குணங்களைத் திருவருட்செயலின் பாற்படுத்திக் குற்றங்களைந்து கோதாட்டுமாறு அவர்களை வந்தித்து மும்முறையும் வேண்டிக்கொள்ளுகின்றேன்.

"அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு"

"குற்ற மேதெரி வார்குறு மாமுனி
சொற்றபாவினு மோர்குறை சொல்வரால்"

கொச்சகப் பாட்டு

தாயனைய சற்குரவன் றன்னுளத்தி னென்னினைந்தோ
ஆயுமறி வில்லேனை யருங்கலைகள் கல்லேனை
ஏயெயென யாருமிக ழென்னையுமோர் பொருட்படுத்தி
நாய்சிவிகை யேற்றுவித்த நல்லருடா னென்னையென்னே.

சுவாமிநாத பண்டிதர்

**நூன்முக முற்றிற்று.**



திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீனம்

23-வது மகா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்ரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

சிவமயம்

# நற்குருமணி ஞானதானச் சிறப்பாதியன

## அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தப்பாட்டு

புண்ணியம் பொலிந்த தென்னப் பூதியிற் பொலிந்த மேனி
ஒண்ணுதல் பாகனென்றே யுரைத்திட வுதற்குச் சான்று
எண்ணருஞ் சடையி னேக்க மெழுந்து நின்றிசைப்ப வென்று
கண்ணுறும் சுப்ர மண்ய நற்குரு நாத போற்றி.

பலவேறு வகைப்பட்ட ஞானத்துள் தலையாய சிறந்த ஞானம் சிவஞான மொன்றுமே யாம். அச்சிவஞானம் பரஞானம் அபரஞானமென இருவகைப்படும். அவற்றுள் பரஞானம் சிவத்தோ டபின்னமாகிய திருவருள். மற்றையது சிவாகமங்களாம். திருவருள் ஞானத்தோடு சிவாகம ஞானத்தை ஒப்பவைத் தோதியது எற்றுலெனின், திருவருள் ஞானத்தைத் தெளிவாகத் தெரிவிக்குஞ் சிறப்பினு லென்க. சிவஞான மெனினும் உயர்ஞான மெனினுமொக்கும். இவற்றை யெல்லாம் "உயர்ஞான மிரண்டா மாரு மலமகல வகலாத மன்னுபோதத்—திருவருளொன் றுன்றதனைத் தெளியவோதுஞ் சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே" எனச் சிவப்பிரகாசத்துட் கூறுமாற்றுனறிக.

இச்சிறப்புப் பற்றியே சகலாகம பண்டிதரென்னும் காரணப் பெயரையுடைய அருணந்திசிவாசாரிய மூர்த்திகளும் தாம் அருளிச்செய்த சிவஞானசித்தியுள்,

"படிக்கு நூல்கள் சிவாக மம்பசு பாச மோடு பதித்திற
மெடுத்தி யம்புவ தீசன் வார்கழ லேத்தி டுந்தொழி லென்றுமே
விடுத்தி டும்பொருள் காம மாதிகள் வேண்டிடும்பொருளீண்டருள்
முடித்து மும்மலம் விட்டு நின்மல னேடு நின்றிடன் முத்தியே"

என்னும் திருவிருத்தத்திலே ஏனையவற்றை யெல்லா மொழித்துப் படிக்கு நூல்கள் சிவாகமங்கள் என்று வியந் தெடுத்துக் கூறியருளியதூஉ மென்க.

இச்சிறப்பைத் தருமையாதீன ஞானகுரு பீடத்திலும் "அடியார்க்கு மடியேன்" இருதய பீடத்திலும் பிரியா தெழுந்தருளி யிருக்கும் அருங்கலை விநோதரும் பெருங்கலை வள்ளலும் மகாசந்நிதானமுமாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள், மேலே கூறிய சிவஞானசித்தித் திருவிருத் தத்தானும் சிவதருமோத்தரத்து ஞானதான வியலானு முணர்ந்து, சிவஞான தானத்தின் மிக்க புண்ணியம் பிறி தொன்றில்லையெனத் தெளிந்து, அது செய்வான் திருவுளங் கொண்டு தமதாதீனத்து முந்தைய ஞானகுரவர்கள், ஆகம சாத்திரங்களின் சாரத்தின் சாரமாகச் செய்தருளிய "திரிபதார்த்த ரூபாதி தசகாரிய வகவல்" "சோடச கலாப் பிரசாத சட்கம்" முதலிய அநேக நூல்களை வித்துவான்களைக் கொண்டு பரிசோதிப்பித்து அச்சிடு வித்து, நெடுங்காலமாக பக்குவர்க்குத் தானஞ்செய்து வருதலும் அவ்வாயிலான் வடமொழி தென்மொழிக ளாகிய இரண்டு பாஷைகளையும் இரண்டு *ஞானக்கண்

---

* இவ்விரு பாஷைகளிலுமே மிகச்சிறந்த நூல்கள் அளவின்றி யிருத்தலான், அப்பாஷைகளாகிய ஞானக்கண்களைப் பெறாதார் அந் நூல்களை யறிந்து நற்பொருள் கண்டு பயன் கொள்ளமாட்டாராக லான், உலகப்பொருள் அறிதற்குக் கருவியாகிய ஊனக்கண்ணிழந்த குருடர் போல்வா ரென்பார், ஞானசம்பந்தப் பிள்ளையார், "ஆரியத் தொடு செந்தமிழ்ப் பயனறிகிலா அந்தகர்" எனக்கூறி யருளினார். இதனைப் பிள்ளையார் மற்றோரிடத்தில் "தமிழ்ச் சொலும் வடசொ லும் தாணிழற் சேர" எனவும், திருமூல நாயனார் "ஆரியமுந் தமிழு முடனே நல்கிக்—காரிகை யார்க்குங் கருணை செய்தானே" எனவும், பௌராணிகர் "இருமொழிக்கு முதற்குரவர் கண்ணுதலார்" என வும், கூறியிருத்தலும் அதனை வலியுறுத்தும்.

ணுகக்கொண்டு, பாதுகாத்து வளர்த்து வருதலும் இவ் *வாரிய லோகப் பிரசித்தியாம். அதனை அறியாதவர் யாவர்? அதுமட்டோ !

" இனியது கேட்கிற் றனிநெடு வேலோய்
இனிது வினிது வேகாந்த மினிது
அதனினு மினிது வாதியைத் தொழுதல்
அதனினு மினிது வறிவினர்ச் சேர்தல்
அதனினு மினிது வறிவுள் ளாரைக்
கனவினு நனவினுங் காண்பது தானே "

என ஔவையார் அருளிச்செய்த வண்ணம் கற்பவை கசடறக் கற்று அதற்குத்தக நிற்கும் நிலையினையுடைய பல வித்துவான்களைச் சுற்றமாகச் சூழச்செய்து கொண்டு;

" தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்ப ருறைவார் பதி."

என்றாங்கு அவ்வித்துவான்களோடு சல்லாபஞ் செய்து ஆனந்தமடைந்து அவர்களைக் கொண்டு புராணப் பிரசங்கஞ்

---

* ஆரியம்-நற்குணமுடையது, முறையுடையது, நல்லது, பூசிக்கப்படுவது. உலோகம் - பூமி, சனம். பிரசித்தி-பழக்கம், பயிற்சி, வெளிப்பாடு, பரந்து நிகழும் நிகழ்ச்சி. ஆரியபூமி யென்பது, ஆதி குருவாகிய கடவுளும், அவனருள் பெற்ற திவ்விய சீடகணமும், காலந்தோறும் வெளிப்பட்டருளிய நல்லிடங்களோடு கூடியதாய் ஆதியிற் றொடங்கி இடையறாது தொடர்ந்து நிகழ்கின்ற நல்லியற்கையும், நற்பொருளும், நற்சனமும், நற்சாத்திரமும், நல்லறிவும், நற்றொழிலும், நற்பயனும், என்னும் இவற்றை யுடையதாயுள்ள சுத்தபூமி.

செய்வித்துஞ் சாத்திரப் பிரசங்கஞ் செய்வித்தும் அப்பிரசங் கங்களைத் தாம் கேட்டும் பிறரைக் கேட்பித்தும் பலர்க்கும் பயன்படச் செய்து சைவத்தை வளர்த்து வந்திருக்கின் ருர்கள். அதுமட்டோ!

"திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும்" "குன்ற மெறிந்த குமாரவேளும்" தமிழ்ச் சங்கம் ஸ்தாபித்துத் தமி ழைப் பாதுகாத்து வளர்த்தமையே யன்றித் தமிழ்ப் புலவர் களையும் பாதுகாத்து வளர்த்து * அடியார் குழாத்துட் சேர்த்து அனுக்கிரகஞ் செய்ததைப் போலத் தாமும் தம் மைச் சூழ்ந்த வித்துவான்களைப் பாதுகாத்து வளர்த்தலோ டமையாது, அடியார் குழாத்துட் சேர்த்து மனுக்கிரகஞ் செய்துவருகின்ருர்கள். எங்குருமணி சடைமுடியும் விபூதி உருத்திராக்கமும் கற்றாசும் முதலிய சிவ வேடத்தினுலே சிவமாயும், திருநாமத்தினுலே முருகவேளாயும் காணப்படுத லினுல் அவ்விருவரும் ஒருங்கு திரண்டு திருவவதாரஞ் செய் தருளிய ஒரு திருமேனியென்று துணியப்படுதலால் ஆத ரித்து அடியாராக்குதற்கு உரிமை பெரிதுமுடையா ரென்பது யாரும் சொல்லாமே யமையும். அதுமட்டோ!

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் முதலிய சைவ சமய குரவர்களைப் போலத் தாமும் சிவஸ்தல யாத்திரை பன்முறை செய்து ஆங்காங்கே சிவபிரானுக்கு ஆயிரம் இரண்டாயிர மென்னும் பெருந் தொகை ரூபாக்களைச் செலவழித்து மகத் துவம் பொருந்திய அபிஷேகாராதனை நைவேத்தியங்கள் செய்வித்துச் சேவித்து அனுக்கிரகம் பெற்றுப் பிரசாதங்

---

* விரிசடைக் கடவுள், சங்கப் புலவர்களை அடியார் குழாத்துட் சேர்த்தமையாற்ருன் சுந்தரமூர்த்தி நாயனுரும் "பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்" என்று திருத்தொண்டத்தொகையுள் அடியார் குழாத்துட் சேர்த்துத் திருவாய்மலர்ந்தருளுவாராயினுர்.

களைச் சிறப்புவிதிபற்றி வைதிகர்களுக்கு வினியோகித்ததோ டமையாது பொதுவிதிபற்றி இலௌகிகர்களுக்கும் வினி யோகித்தும் மாகேஸ்வராகிய அந்தணர் முதலியவர்களுக் குப் பூரி தானம் முதலியன செய்தும் அங்கங்கேயுள்ள நல் லடியார்களுக்கு நல்லுபதேசம் பண்ணியும் வருகின்றார்கள். அதுமட்டோ!

தருமையாதீனத்து இருபத்தேழு தேவஸ்தானங்களி னும் உற்சவ காலங்களினும் பிற விசேட காலங்களினும் எழுந்தருளி அவ்விசேட விழாக்களைப் பல்லாற்றானும் சிறப் பித்து "மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் * கண்ணினா லவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்" என்றபடி அத்திரு விழாவைத் தரிசித்துப் பேரானந்தம் அனுபவித்தும், "அண் ணலா ரடியார்தமை யமுது செய்வித்தல்" என்றபடி, சிவ னடியார்களுக்கு அன்னதானஞ் செய்தும் வந்திருக்கின்றார் கள். அதுமட்டோ!

கிலமாயுள்ள † மடத்தையும் ஆலயங்களையும் புதுக்கு வித்தும், இலிங்க சேதமும் இலிங்க சலனமும் காணப்பட்

* திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணம் செ-க௦அஎ.

"மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடு
மண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்த
லுண்மை யாமெனி லுலகர்முன் வருகென வுரைப்பார்."

† மடம் முதலியவற்றின் கிலம் நீக்கினவர் அடையும் பலனை,

"மாதவர் மடங்க ளாதி வரதன்மந் திரங்க ளாதி
நாதமா மிலிங்க மாதி நளினபீட் கரணியாதி
சேதமுற் றிடின்முன் போலச் செய்துளோர்க் குறும்ப லந்தான்
ஓதுமுன் செய்தோர் தம்மி லாயிரங் குணித மோங்கும்"

என்னும் சிவபுண்ணியத் தெளிவானறிக.

டால் அவற்றை மாற்றிக் கும்பாபிஷேகஞ் செய்வித்தும் எவ்வெவ்வாலயங்களின் வாகனங்கள் கிலமடைந்தனவோ அவ்வவ்வாகனங்களைப் புதுக்குவித்தும், எவ்வெவ்வாலயங்களில் எவ்வெவ்வாகனங்களில்லையோ அவ்வவ்வாகனங்களைச் செய்வித்தும் வருகின்றார்கள். அதுமட்டோ!

இன்னும் தமது சீடர்களாகிய தம்பிரான்களைத் தமது அபிமானபுத்திரராகக் கொண்டு கல்வி கற்பித்தும், தேவஸ்தானங்களில் அவரவராற்றலுக்குத் தகுந்த கட்டளைகள் கொடுத்தும், அக்கட்டளைகளுக்குத் தகுந்த வேதனங்கள் கொடுத்தும், வேதனங்களுக்குத் தகுந்த கைங்கரியங்கள் செய்வித்து இம்மை மறுமைப் பயன்கள் அடையும்வண்ணம் செவ்வனே காப்பாற்றி வருகிறார்கள். அதனாலே, அவர்களும் நன்றியை மறவாது சுவாமிகளை விட்டுப் பிரியாமற் சூழ்ந்து போற்றி வாழ்ந்து வருகின்றார்கள். இக்காலத்திலே, குருவும் சீடரும் அநந்நியமாக அன்பும் உரிமையும் பாராட்டி இன்புற்று வாழ்தல் எவராலும் பாராட்டற்பாலது. அது மட்டோ!

*"உத்தம குணங்களெல்லா முலோபத்தால் வீயுமா போல்" என்பதை யுட்கொண்டு பிரதியுபகாரங் கருதாது ஒருவர்க்கொரு பொருளை ஈதலால் கவின்பெறு கார்முகி

---

* உத்தம குணங்கள் எல்லாம் உலோபத்தால் வீய்தலின் உறும்பயன் இஃதென்பதை,

" இரப்பவர்க் கீய வைத்தா ரீபவர்க் கருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட் கெல்லாங் கடுநர கங்கள் வைத்தார்
பரப்புநீர்க் கங்கை தன்னைப் படர்சடைப் பாகம் வைத்தார்
அரக்கனுக் கருளும் வைத்தா ரையனை யாற றாரே "

என்னும் அப்பர் தேவாரத்தானும்,

லென்பேமா, வேண்டும்பொருள் கொடுத்தலிற் கற்பகமென் பேமா, சிந்தித்த பொருள் கொடுத்தலிற் சிந்தாமணி யென் பேமா, விரும்பிய பொருள் கொடுத்தலிற் காமதேனு வென் பேமா, கொடுக்கக் கொடுக்கக் குறையாநிதி யுடைமையின் சங்கநிதி பதுமநிதி யென்பேமா, யாதென்பேம்! ஒன்றிரண் டென்றது எல்லாந்தான் என்பேம்! கற்றவர்க்கு உற்ற உசாத்துணையு மென்பேம்! என்று இங்ஙனமே புலவரெல் லாம் பாராட்டும்.பண்பினரும் எங்கள் குருமூர்த்தியே யாவர்.

" அருளறி வொழுக்க மான மாசாரம் பொறைசீ ரன்பு
தருமநன் னெறிநற் றூனஞ் சத்தியந் தவத்தோ டாண்மை
விரதநோன் பிரக்க மீசன் மெய்யருட் பத்தி யுள்ளோர்
ஒருவரை யுலகிற் காண்ப தரிதுகா ணுயர்த வத்தீர்."

என்றிங்ஙனமே கலியுக தருமம் கூறப்பட்டிருப்பவும் கலியுக தருமம் முதிர்ந்துவரு மிக்காலத்தில் இச்செய்யுளிற் சுட்டப் பட்டனவும் மேலே காட்டப்பட்டனவுமாகிய எல்லாப் புண் ணியங்களுக்கும் எல்லாப் புகழ்க்குணங்களுக்கும் ஒரு நிலைக் களமா யோங்கிய ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானத்தின் திருவவ தாரம் ஆரியப் பூமியார் செய்த அருந்தவப் பேறே யாம் என்ப தொருதலை.

இத்தகைய அருமையும் பெருமையும் பொருந்திய குரு மூர்த்திகள் அத்துவித முத்தி யடைகின்ற காலத்தில் தாம் அபிடேகஞ் செய்து தமது குரு ஸ்தானத்தில் வைத்தருளிய இருபத்து நான்காம் குருமூர்த்திகள் ஸ்ரீலஸ்ரீ சண்முக

---

" பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லைப் பிறந்து மண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை யிடை நடுவிற்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே "
என்னும் பட்டினத்துப் பிள்ளையார் பாடலானும் அறிக.

தேசிக ஞானசம்பந்த மகா சந்நிதானமும் ஆற்றலும் அறிவும், எற்றமார் அருளும், தோற்றமுஞ் செய்கொடைத் தோற்றமும், பத்தியும், எற்ற நற்குணமும், தம்பிரான்களை ஆதரித்து வருதலும், கல்விப் பிரியமும், கற்றோருவப்ப உற்றுழி உதவலும், காரியஞ் செய்வோர் களிப்புற நடத்தலும், மற்றுமெந்நலமுஞ் சுற்றமாகச் சூழ்தரத் தவராசராகுந் தன்மையின்மிக்க சால்பிற்றாகலின், தங்களுக்கு முன்னிருந்த பரமாசாரியர் அச்சிடுவித் தெஞ்சியிருந்த முத்திநிச்சயச் சிற்றுரையையும், அச்சிடக் கருதியிருந்த நூல்களையும் அச்சிடுவித்துப் புகழ் புண்ணியங்களை யடையக் கருதி முதலில் முத்திநிச்சயச் சிற்றுரையைப் பூர்த்தி செய்ய ஆரம்பித்திருக்கின்றது. இவ்வியல்பிற்றாய சித்த விருத்தி சிறந்தொளிரும் பரோபகார மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானப்பிரகாச நற்குருமணி, "உப்பும் உலகும் உள்ள வரையும்" வாழ்ந்து இன்னும் இன்னும் இப்புண்ணியங்கள் எல்லாவற்றையுஞ் செய்து உலகிற்கு வழிகாட்டி உய்விக்கும் வண்ணம் பெருங்கருணை பாலித்தருளுமாறு தேங்குநீர்ச் செஞ்சடிலந் தாங்குமோர் தேவாதி தேவனுஞ் சிவபெருமான் திருவடிகளைச் சிந்தையில் வைத்துச் சிந்திதஞ் செய்து வந்தனஞ் செய்கின்றேன்.

### கலித்துறைப் பாட்டு

முச்சங் கமும்வீழ்ந்து மூவேந்த ரும்போய் முழுத்தமிழும்
எச்சஞ் சிறிது மிலையென்னு மேல்வை யெழுப்பியதை
வைச்சு வளர்க்கும் வாசுப் பிரமண்ய மாகுரவன்
மெச்சு முயிரென்ன நிச்சலும் வாழ்கவிம் மேதினிக்கே.

சுவாமிநாத பண்டிதர்

நற்குருமணி ஞானதானச் சிறப்பாதியன முற்றிற்று

---

# ஸ்ரீலஸ்ரீ, சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் தோத்திரப்பாமாலை

---

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தப் பாட்டு

ஞானசம் பந்தர் கோயி
னலமெலா நாட வுன்னித்
தானசம் பந்த ரெல்லாஞ்
சந்ததந் தாங்க ளுற்ற
வூனசம் பந்த நாட்ட
மொருவரு மூடா வண்ண
மானசம் பந்த மிக்க
வளம்பதி தருமை மாதோ. க

அந்நகர் மடால யத்தி
னாதீன கர்த்த ரென்றோர்
தன்னிகர் குரவ ரிந்நாட்
சார்ந்தனர் தரையின் வாழ்க
மன்னிய வாழ்த்துப் பெற்றார்
மற்றவண் மன்ன வந்த
தென்னைகொல் காண மன்னார்
யாரெனி னியம்பக் கேண்மின். உ

வேறு

திருமருவு முயர்புவியிற் றிகழ்கலியின்
றிறன்மிகுதிச் செயலை நோக்கி
உருமருவு முயிர்களெலா முணர்வின்றி
யுளுற்றுபவ மொழியா தென்றே

அருமருவு மகளசிவ மன்பருளா
வறிவுநூல்க ளகிலத் தார்க்குக்
கருமருவு கவினுருவு கண்டுகொடுத்
தாட்கொள்ளக் கருத்துக் கொண்டு. ௩

மானிடத்து மறைத்தருளி வாதமறை
வலக்கரத்தை மாணக் கொண்டு
மானிடத்து மருவாது மானிடத்தின்
வந்தமகள் வரன்பேர் தாங்கி
மானிடத்து முளவுயிரு ளொன்றல்லன்
மதிமினனி மகியீ ரென்ன
மானிடத்து மலர்வேணி சிரமீது
மாறாது வயங்கத் தோன்றி. ௪

புன்னகையி னுன்மயக்கிப் புருமன்பர்
புந்தியினைப் புறம்போ காமல்
நன்னயஞ்சேர் நோக்களித்து நளினமுக
மலர்ந்தருளி சிவாய நாம
அன்னமறு வஞ்செவியிற் பின்னமற
வறைந்தருளி யழிவி லாத
இன்னருளாங் காஞ்சிரத்தி னியைவித்துக்
கதியருளு மேற்ற மிக்கு. ௫

தமிழுலகஞ் சிவஞானந் தான்பெறுமா
தக்கபெருஞ் சாத்தி ரங்கள்
அமிழ்தெனவே யறிஞரெலா மார்ப்பெடுப்ப
வனுதினமு மன்பாற் றேடிக்
குமிழியென நிலையிலதாங் கோலமழி
வதன்முன்னர்க் கோல மாக
உமிழ்நலங்கள் பலவுதவ வச்சேற்று
மொருவிளையாட் டுற்று ளானே. ௬

கலியுகத்தின் வலிதொலைச்சிக் கற்பகத்தின்
கனியளித்துக் காமுற் றோர்க்கு
வலிமிகச்சிந் தாமணியாய்ச் சிந்தித்த
வான்பொருளை வழங்கி வையத்
தொலிமிகுத்த புயலெனவே பிரதிகரு
தாதுயர்ந்தோர்க் கோவா தீந்து
நலிவகற்றி நற்றமிழும் வடமொழியும்
வளர்க்குநல நாளும் வாய்ந்து. எ

சிவசமய நலசமயஞ் செகத்திலுள
சமயமெலாஞ் சேரக் கொண்டு
நவசமய மதுவரினு நயந்ததற்கு
மிடங்கொடுத்து நாளு நாளும்
அவசமய மெனவற்றை யகற்றுமம
லங்கமென வளிக்கு மாற்றால்
தவசமய தாரகமென் றுட்கொண்டு
தழைவிப்பன் றானே சால. அ

தெற்றெனவே சிவனடியார் சேர்ந்துடங்கு
செறிந்திடினுந் தெளிந்து சித்தம்
திற்றியெலாந் துற்றியெலாஞ் சிறப்பவமைப்
பித்தவர்க டின்ன வுண்ணப்
பெற்றுமிகப் பிரியமுடன் பிரியாத
பேரன்பிற் பிணித்துப் பேணி
யுற்றசுற்ற மெனக்கொண்டே யுவகையுறு
முயர்குணந்தா னுரைக்கற் பாற்றோ. கூ

இத்திறத்தாற் குலச்சிறையா ரெனவுரைப்பே
மெங்குருக்கண் மணியை யாங்கள்
மெய்த்திறத்தான் விசுவசித்து வேணிமுடிப்
பிரானென்றே மேலா யோங்கும்

பத்தியுருப் பான்மையாய்ப் பன்னாளோ
வெந்நாளும் பழிச்சா நிற்பேம்
எத்திறத்தா லுங்குறைக ளெள்ளளவு
மிலையென்ப தெண்ணி மாதோ. க0

அருளென்று வறிவென்று வமைவென்று
வன்பென்று வாக மத்துப்
பொருளென்று புகழென்று புணியமென்று
பொறையென்று பொலிந்த வேதத்
தெருளென்று தேசென்று சீரென்று
செல்வமென்று திகழு முத்திப்
பொருளென்று மானமென்று மதியென்று
புனிதமென்று பொருந்தும் போதன். கக

வேறு

பொருவரிய முகமதியம் போற்றி போற்றி
யம்மதியம் பொழியமிர்தம் போற்றி போற்றி
பொருவரிய கொடைக்கரங்கள் போற்றி போற்றி
புணியநிலை வரைமார்பு போற்றி போற்றி
பொருவரிய மலரடிகள் போற்றி போற்றி
போதமிகச் செயுஞ்செயல்கள் போற்றி போற்றி
பொருவரிய குணவணிகள் போற்றி போற்றி
பொன்றுவீ டுதவுவலி போற்றி போற்றி. க௨

திருமுறையுஞ் சிவனருளுஞ் செகத்து வாழி
திருநீறுங் கண்டிகையுஞ் சிறந்து வாழி
பெருமறையுஞ் சிவாகமமும் பெரிது வாழி
பிணிதவிர்க்கு மாலயமும் பிறங்கி வாழி
கருமறையுஞ் சிவகதையுங் கமழ்ந்து வாழி
காதலுடன் கேட்குநருங் கனிந்து வாழி
வருமுறையுந் தவறாது மழையும் வாழி
வானவரும் கோதனமு மலிந்து வாழி. க௩

## வேறு

தெய்வமுண் டெனவே நம்புஞ்
　　செகத்துளோர் செழித்து வாழி
உய்வது கருதித் தத்த
　　மதவழி யுறுநர் வாழி
மெய்வரு மரசர் செங்கோன்
　　மேதினி பரந்து வாழி
ஐவகைக் குரவர்ப் பேணு
　　மாரியர் யாரும் வாழி. 　　கரு

அரசருங் குடியை யோம்பி
　　யகமகிழ் வுடனே வாழி
விரசுறு குடியும் வேந்தன்
　　விழைவுறக் கலந்து வாழி
திரைபுரள் கடல்சூழ் பாரிற்
　　சேருயி ரெல்லாம் வாழி
விரைசெறி கொன்றை வேந்தன்
　　விபூதியை விளக்கி வாழி. 　　கசு

சுவாமிநாத பண்டிதர்

சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் தோத்திரப் பாமாலை

முற்றிற்று.

## பிரதியளித்தோர் பெயரும் பரிசோதனைக்குக் கிடைத்த பிரதிகளும்

| | | |
|---|---|---|
| க. | தருமையாதீன மடத்துப் பிரதி | உ |
| உ. | பிரமஸ்ரீ செந்திநாதையரவர்கள் பிரதி | க |
| ௩. | வித்வான் ஸ்ரீ சோமசுந்தர தேசிகரவர்கள் பிரதி | க |
| ௪. | சிதம்பரத் தீசானிய மடத்துப் பிரதி | க |
| ௫. | சீகாழி வித்வ ஸ்ரீமான், ச. சதாசிவ முதலியாரவர்கள் பிரதி | க |
| ௬. | சீகாழி வித்வ சிகாமணி ஸ்ரீமான், ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை பிரதி | க |
| | | எ |

பெரும்பாலும் எல்லாப் பிரதிகளும் ஒத்திருந்தன வாயினும், தருமையாதீனத்துப் பிரதி ஒன்றும் தேசிகரவர்கள் பிரதியும் சிற்சில சந்தேகங்கள் ஒழிதற்குப் பெருங் கருவிகளாயின. இப்பிரதியாளர்களாகிய பெரியார் நன்றி மிகப் பாராட்டற்பாலது. இவர்கள் இவ்வாறு உலோகோபகாரர்களாய் ஆனந்த வாழ்வினராய்ப் பூரணாயுசுப் பெற்றுப் பொலியும் வண்ணம் சிவகுருநாதக் கடவுள் திருவருள் பாலிக்குமாறு, அவரடிக்கமலம் எளியேன் முடிக்கமலமாகக் கொண்டு பிரார்த்திக்கின்றேன்.

—சுவாமிநாத பண்டிதர்.

தருமபுர ஆதீனத்து ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்
முத்தி நிச்சயச் சிற்றுரையை அச்சிடுவிக்கத்
திருவுளம் பற்றியபோது அவ்வாதீனத்து
வித்துவ சிகாமணி ஆகிய

## ப. அ. முத்துத் தாண்டவராய பிள்ளையவர்கள்
## இயற்றிய துதிகள்

ஆனனமைந் துடையவர்த மருமறையின்
முடிபொருளை யடியார் காணத்
தேனனைய முத்திநிச் சயவுரையச்
சிடுவித்துச் சித்தி முத்தி
வானகத்த ருருப்பேறு சிவஞான
நிலையருளும் வள்ளல் யார்விண்
மீனணவு மாடநிறை தருமபுர
வேந்தர்யார் வியப்பால் மாந்தர் க

குரிசில்யார் மாசந்நி தானம்யார்
பலதானங் கோடி கோடி
வரிசைபெறப் புலவர்குழாம் வந்தணையத்
திகழ்சுப்ர மணிய நாம
வுரிமையுள திருவர்யார் ஆதீன
கர்த்தர்யா ருவர்தஞ் சீர்த்தி
யிரசமெனக் கவிபுனைய வெனதுள்ள
மிசைந்திடுமிங் கென்று மாதோ. உ

இப்பெரிய மகிபருவந் தளித்தமுத்தி
நிச்சயமா மிறைவ னூல்தான்
ஒப்புயர்வில் பெரும்பதமு மொன்றிரண்டென்
றுலகறிஞ ருரைக்கும் வாதம்
தப்பிலதாஞ் சுத்தாத்து விதவாய்மை
மாண்பொருளுஞ் சன்மார்க் கத்தின்
மெய்ப்பயனு நிகழ்த்துதலா லின்புலவீ
ரிதமுறுவான் விரும்பிப் பார்மின். ௩

---

திருக்கைலாய பரம்பரை தருமபுர ஆதீனத்து

உரு-வது மகா ஸந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகளை

முத்திநிச்சயச் சிற்றுரையைப் பிரகடனம் செய்யும்படி

தருமபுர ஆதீன வித்துவானும், தமுக்கூர் துரைத்தன

கலாசாலை உயிர் நூலாசிரியருமாகிய

ப. மு. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் M.A., L.T.,

செய்துகொண்ட விண்ணப்பம்

---

அருளியல்பு

பூமலி புடவி பொருந்து புங்கவர்
தாமலி சேவலஞ் சாரும் விசிட்டம்
விழுமிய சிவாத்து விதமென விளம்பு
மூவிய னெறியினு முற்படுஞ் சுத்தந்
தாவில தெனமுத்தி நிச்சயஞ் சாற்றும்
எண்ணுமிச் சுத்த மெவரு மியையக்
கண்ணுவம் அதனுல் கருதொணுக் கேவல
நீத்தமைச் சகல நிறுவினிர் தேத்துச்
சுத்தநேர் வித்தல் சுத்தநும் மாண்பால்
கமஞ்சூற் கொண்மூக் கமஞ்சார் துடவை
பன்மணி யிமைப்பப் பருதி தீண்டும்
அற்புதத் தருமைச் சிற்பா
சுப்பிர மணிய பொற்பமர் மணியே.

---

தருமபுர ஆதீன வித்துவானும், தும்கூர் துரைத்தனக் கலாசாலை உயிர்நூலாசிரியரும் ஆகிய வித்வான்

## ப. மு. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் M.A., L.T., இயற்றியது

வேதநற் கலையு மாகம முடியும்
 வியன்குரு ஞானசம் பந்தர்
விரிவுறத் தொடுத்து முத்திநிச் சயமா
 விளம்பிய சைவநூ லதனைப்
போதமார் வெள்ளி யம்பல வாணர்
 புகன்ற பிண் டப்பொழிப் புடனே
புவியுளா ருய்வா னச்சினிற் பொறித்துப்
 பூரண நன்றிசெய் புனித
நாதனார் யாவ ரெனவினை வுறினெந்
 நம்பர்மெய்ஞ் ஞானபுங் கவரா
நண்ணிய தரும புரத்தமர் கர்த்தர்
 நம்புல மாகிய வள்ளல்
ஓதவைந் தெழுத்தி னுண்மையை யுணர்த்து
 முயரிய சுப்பிர மணிய
உத்தம மாசி லாமணி யென்பர்
 ஓங்கிவர் மாண்பின் வாழியரே.

---

தருமபுர ஆதீன வித்துவான்

காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை அவர்கள் B. A.

பாடிய

# சிறப்புப் பாயிரம்

எண்சீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்

காழிவளர் பிள்ளைப்பேர் கவிஞுக் கொண்ட
கமலைவரு சம்பந்தப் பெரியோன் சொற்ற
ஊழிவளர் காலமெலா முலவா நிற்கு
மூயர்சைவத் திறன்றெரிக்கு முத்தி நூற்கே
ஆழிவளங் கொழிபாண்டி நாட்டு வெள்ளி
யம்பலவன் சொற்றவுரை யச்சி லேற்றி
மேழிவளந் திகழ்தரும புரத்தா தீன
மேன்மைபெறு குரவர்தாம் பதிப்பித் தாரே.

கலிவிருத்தம்

ஒருகுரவ ருவந்தருள வொருகுரவ ருரைமுடிக்க
ஒருகுரவ ரச்சேற்ற வொருகுரவ ராங்குய்த்தார்
பெருங்குரவர் நயந்தளித்த பெருமைபெறு மாரமிர்தைப்
பெருங்குரவ ரருள்பெறவே புவியிலுளீர் மாந்துமினே.

சிறப்புப் பாயிர முற்றிற்று.



திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீனம்
24-வது மகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

நன்றாக

திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர வாதீனத்து

இருபத்து நான்காவது மஹாஸந்நிதாநம்

# ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக பரமாசாரிய சுவாமிகள்

முத்திநிச்சயச் சிற்றுரையை வெளியிட்டருளிய

சிறப்பை வியந்து கூறியது :—

தருநிகர் வள்ளல் சண்முக தேசிகர்

தருமையாதீனத் தலைவர் சிறப்பிவை.

வேத நூல்பல வித்தக வாகம
மோது மப்பொரு ளுண்மை தெரிந்தரு
ணீதி மேன்மை நிறுவு குருபா
ராதி ஞானசம் பந்த வருட்கடல். ௧

தத்து தெண்டிரைத் தாரணி தன்னிலே
முத்தி நிச்சய முற்று மமுதினைக்
கர்த்த னென்னக் கருணையி னீந்ததற்
கொத்த நல்லுரை யொன்று வழங்கிடும். ௨

வெள்ளி யம்பல வாணர் விரித்தருள்
தெள்ளு நீர்மை தெரிக்குமச் சிற்றுரை
யுள்ள வுள்ள வுயிரறு போகத்தை
யள்ளி யீயு மருமைய தாதலின். ௩

அச்சி னிட்டிவ் வகில வுலகமு
மெச்சி யின்னுரை மேன்மே லறைந்திட
வுச்சி யான துதவி யருளிய
சச்சி தானந்தத் தாணுவிங் காரெனில். ௪

பூவின் மங்கையும் பொற்புவி மங்கையும்
நாவின் மங்கையும் நாளும் வழுத்திடச்
சேவின் மேவு சிவபெரு மானமர்
காவின் மல்கிக் கவின்தரு மைப்பதி ரு

தன்னி னோங்கித் தவத்தவர் சால்புற
முன்னி முப்பொரு ளோதி முதற்பொரு
ளன்னி யம்மில வென்ன வநுபவந்
துன்னி யார்தரு சோதி மடாலயம் சு

இன்ன நன்மடத் தெம்பர னென்னவே
யுன்னு நான்கிரு பத்துயர் பட்டத்து
மன்னு நங்குரு மாமணி ராயர்மெய்க்
கன்னி பாகர் கணித்தருண் மந்திரம். எ

தாக முற்றவர் தங்கட் கருளியவ்
யோக ஞான வுபயவி யூகமும்
பாக முற்றவர் தங்கள் பசுத்துவம்
போக மெய்ச்சிவ போக முதிப்பதும். அ

ஆக்கு மென்றிங் கருந்தமிழ் வேதமும்
பூக்கு மாகம போதமும் போதித்துக்
காக்கு மெம்பர னென்னக் களிப்பவர்
நோக்கு நிட்டை நுவலுந் தாதிபர். கூ

ஈத னல்லற மென்ன வுணர்பவர்
காத லன்பர் கருத்தை யறிபவர்
சீத நாண்மதி தேசிற் றிகழ்பவர்
நாதர் சண்முக நாயக வள்ளலே. ௰

ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முத்திநிச்சயச்சிற்றுரை.

## சிறப்புப்பாயிரம்.

மலர்தலை யுலகி னிருள்கெடத் தோன்றும்
பலர்புகழ் கதிரெனப் பழிநெறி மேற்கொள்
சிலர்மன விருள்கெடச் சிறந்த செய்கையின்
அலகில ரிதுசிவா னந்த மாமெனத்
துணிபொருள் காணத் துலங்கு மாடியின்
அணிபெறத் தொகையி னறிஞரு மறிதரக்
குறிவழி யநுபவங் குருமொழி முதனூல்
நெறிதிகழ் முத்தி நிச்சயம் பண்ணினன்
அறுமூன் றீரிரண் டானவெண் பாட்டின்
ஒழுகு நல்லறத் தொழுகலுஞ் சிறிதும்
வழுவில் கல்வியும் வாய்மையு மூதுணர்
நிலைமையு முடையோர் நின்று தாடொழூஉம்
தலைவ னெம்மனோர் தம்பொருட் டாகத்
துறவறம் பூண்ட தோன்றன் ஞானத்
திறநெறி நிறுத்துஞ் செங்கோல் வேந்தன்
முறைவழி மரபின் முதிர்ந்தமெய்ஞ் ஞானம்
நிறைதர* நிகழ்ந்த நின்மலன் கமலை
உறையுஞா னப்பிர காசனென் றொருவன்
திருவடி யேதின மிறைஞ்சும்
தருமை ஞானசம் பந்ததே சிகனே.

என்பது பாயிரம்.

---

* நிறைவுற என்றும் பாடம்.

நூல் கேட்பான் புகுந்த மாணுக்கருக்குப் பாயிர முரைப்ப தென்னை யெனின்,

* "ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே"

என அதனை நூற் கின்றியமையாத சிறப் புறுப்பாக எடுத்தோதலானும், ஒருவரை நன்கறிய வேண்டுழி, அவர்க் குச் சிறந்த வுறுப்பாகிய முகமின்றி நன்கறியப் படாதவாறு போல, நூலை நன்கறிய வேண்டின், அதற்குச் சிறந்த வுறுப் பாகிய அப்பாயிர மின்றி அது நன்கறியப் படாதென்பது போதராலானும், முன்னர்ப் பாயிர முரைத்தே பின்னர்ப் பனு வலுரைத்தல் வேண்டு மென்பது ஒருதலையாக வேண்டப்படு தலா னென்றறிக.

இக்கருத்துப்பற்றியன்றே! பாயிரத்திற்குப் பல பெய ரிருப்பவும், நன்னூலாசிரியர் அவற்றுட் பிறிதொன்றைப் பாயிரப் பெயர் கூறுஞ் சூத்திர முகத்து வைத்தோதாது, † "முகவுரை பதிகம்" என முகவுரையை முன்னர் வைத் தோதியதூஉம், அவ்வளவி னமையாது, அதனை நன்கு வலி யுறுத்துதற்கு முகவுரைப் பொருளே பயக்கும் நூன்முகம் என்பதனையும் பின்னர்க் கூறியதூஉ மென்றுணர்க.

‡ "பருப்பொருட்டாகிய பாயிரங்கேட்டார்க்கு நுண் பொருட்டாகிய நூலினிது விளங்கும்" என்றார் கருத்தும் அதுவேயாதல் நோக்குக.

---

* நன்னூல், பொதுப்பாயிரம். சூ. ருச.

† ஷை ஷை சூ. க.

‡ இது தொல்காப்பியச் சிறப்புப் பாயிர வுரையில் நச்சினார்க் கினியரால் எடுத்து ஆளப்பட்டது.

அப் *பாயிரந்தான், பொதுவுஞ் சிறப்பு மென இரு வகைப்படும். அவற்றுள் இது சிறப்புப் பாயிர மென்றுணர்க.

இதன்பொருள்.

தலை மலர் உலகின் இருள் கெடத் தோன்றும் பலர் புகழ் கதிர் என - சிரத்தானம் போலச் சிறந்த பரந்த வுலகின்கண் நிறைந்த கண்ணிருள் கெட உதயகிரியினின்றுந் தோன்றுகின்ற பல் சமயத்தாரும் புகழும் பரிதியங்கடவுளைப் போல, — பழிநெறி மேற்கொள் சிலர் மன இருள் கெட - (பெரியோரால்) பழிக்கப்படும் மார்க்கங்களை மேலாக அங்கீகரித்த பல சமயத்தாருடைய மனத் திருளாகிய அஞ்ஞானங் கெட, — சிறந்த செய்கையின் அலகு இலர் - (சரியை கிரியை யோகம் இம்மூன்று செயலினுஞ்) சிறந்த ஞானச் செயலினை யுடைமையாற் குற்றமில்லாத பெரியார், — இது சிவ ஆனந்தம் ஆம் எனத் துணி பொருள் காண - இதுவே சிவானந்தாநுபவமாகிய சித்தாந்த முத்தியெனப்படும் அத்துவித முத்திநிலையா மென்று நிச்சயித்த பொருளை (ஐய விபரீத மறச் செவ்வனே) கண்டு தெளிய, — துலங்கும் ஆடியின் - (தானே) விளங்கும் (புதிய) கண்ணாடிபோல, — குறிவழி அநுபவம் குருமொழி முதல்நூல் நெறி - அநுமானம் அநுபவம் உபதேசச்சொல் வேதம் ஆகமம் என்னும் இப் பிரமாணங்கள் வாயிலாக,—அணி பெற - அலங்காரம் பொருந்த,— ஆறு மூன்று இரண்டு இரண்டு வெண் பாட்டின் - இருபத்திரண்டு வெண்பாக்களால், — அறிஞரும் அறிதர - அறிஞரும் அவரல்லாத பிறரும் (இலகுவாக) அறிந்துகொள்ளும்

---

* நன்னூல், பொதுப்பாயிரம், சூ. உ. " பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே " என்பது நோக்குக.

பொருட்டு, — நிகழ் முத்திநிச்சயம் - விளக்கம் பொருந்திய முத்திநிச்சயம் என்னும் இந்நூலை, — தொகையின் பண்ணினன் - தொகுத்தல் யாப்பாற் செய்தருளினன்; (அவன் யாரெனின்), — ஒழுகு நல் அறத்து ஒழுகலும் - (முற்றத் துறந்தார் மேற்கொண்டு) ஒழுகும் நன்மை பயக்கும் துறவறத்தினின்று (அதற்குரிய) அறத்தில் (வழுவாது) ஒழுகலும், — சிறிதும் வழு இல் கல்வியும் வாய்மையும் நிலைமை மூது உணர்வும் உடையோர் - தினைத்துணையுங் குற்றமில்லாத கல்வியும் மெய்ம்மையும் உறுதியாகிய பேரறிவும் உடைய ஞானிகள், — நின்று தாள் தொழூஉம் தலைவன் - (தமது பக்குவத்தின் குறைவும் தலைவனுகிய தனது பக்குவத்தின் நிறைவும் நோக்கி அணிமைக்கட் செல்லக் கூசித் தூரத்தே) நின்று தன்றாளை வணங்குதற்குக் காரணமாகிய தலைமைப் பாட்டினையுடையோன், — எம் அன்னோர் தம் பொருட்டு ஆக - எம்மைப் போன்றார் (உய்தல்) காரணமாகத் (தானும்), — துறவு அறம் பூண்ட தோன்றல் - துறவையும் (அதற்குரிய) அறத்தையும் மேற்கொண்ட பெருமையிற் சிறந்தோன், — திறம் ஞான நெறி நிறுத்தும் செம் கோல் வேந்தன் - வன்மை பொருந்திய சன்மார்க்கத்தை உலகில் நிலைபெறச் செய்யும் (அருட்) செங்கோலையுடைய தவராசன், — முறை வழி மரபின் முதிர்ந்த மெய் ஞானம் நிறை தர நிறைந்த நின்மலன் - (சிவபிரானிடத்து உபதேசம் பெற்ற) கிரமத்தினை யுடைய அகச் சந்தான பரம்பரையாகிய புறச் சந்தான குரவர் (உபதேசத்தால்) மிக்க மெய்ஞ்ஞானம் பூர்த்தியுறலான் விளங்கிய தூய்மையுடையோன், — கமலை உறையும் ஞானப்பிரகாசன் என்ற ஒருவன் திரு அடியே - திருவாரூரில் வீற்றிருந்தருளிய ஞானப்பிரகாச னென்கின்ற சிறப்புத் திருநாமத்தை யுடைய ஒப்பிலாதானது திருவடியையே, — தினம் இறைஞ்

சும் - நாடோறும் வணங்கும், — தருமை ஞானசம்பந்த தேசிகன் ஏ - தருமைத் திருப்பதியில் வீற்றிருந்தருளிய திரு ஞானசம்பந்ததேசிகன். எ - று.

ஆரம்பத்தில் மங்கல மொழி முதலாக வமைத்துக் கூறு கவென *இலக்கணநூல் யாப்புறுத்துக் கூறலின், 'மலர் தலை' யென அடையடுத்த 'உலகு' என்னும் மங்கல மொழி யை நூலுக் கின்றியமையாத உறுப்பாகிய பாயிர முதற்கண் நிறீஇப் பாயிரம் யாப்பான் ஆரம்பித்தார் பாயிர ஆசிரிய ரென்றறிக.

† "மலர்தலை யுலகின் மாயிருள்" ‡ "மூவா முதலா வுல கம்" §" மலர்தலை யுலகின் மல்கிருள்" என்பனவும் இக்கரு த்துப்பற்றி யெழுந்த அடையடுத்த மங்கல மொழிகளென்க.

பிண்டத்துறுப்பிற் றலை சிறந்தாற் போல, அண்டத் துலகில் மண்டலஞ் சிறந்ததென்பார் தலையுலகு எனத் தலையை உவமையாகப் புணர்த்தோதினார். போலவென்னும் உவம வுருபு தொக்கது. மலர் உலகு எனக் கூட்டி வினைத்தொகை யாக்குக.

தலைக்குச் சிறப்புக் ††"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்ற றியும்" கருவிகளாகிய ஐம் பொறிகளையுந் தன்னகத் தடக்கி யிருத்தலானும், எண்சாணுடம்பிற்கு மேற்றானத் திருத்தலா

---

* இலக்கணநூல் வெண்பாப்பாட்டியல் முதலியன.

† சிவஞானபோதம், சிறப்புப்பாயிரம்.

‡ சீவக சிந்தாமணி, கடவுள் வாழ்த்து, செய்யுள்-க.

§ நன்னூல், சிறப்புப் பாயிரம்.

†† திருக்குறள், ககக-ம் அதி-புணர்ச்சிமகிழ்தல்-க.

னும், வணக்கம் பலவற்றுள்ளும், *தலைவணக்கஞ் சிறத்தலா னும், உலகத்திற்குச் சிறப்பு, †"வானிடத் தவரு மண்மேல் வந்தரன் றனைய ருச்சி"த்தலானும் ‡"புவனியிற் போய்ப் பிற வாமையி னாளும் போக்குகின் றோமவ மேயிந்தப் பூமி— சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்" திருமா லுந்திசைமுகனும் வெஃகுதலானும், அன்னபிறவாற்றானும் கொள்ளப்படும்.

சிரம்போற் புவி சிறந்ததாயின், அதனை, முதற்கண்வை த்துக் கூறுக வெனின், அற்றன்று; மேலுலகவாசிகளும் கீழுலகவாசிகளும் இருவினைப் பயன்களையும் அநுபவித்து முடி வுறும் வழி, ஆண்டாண் டநுபவித்தற்குப் போதாதெஞ்சி நின்ற இருவினைப்பயன்களையும் மண்ணுலகத்துப் பிறந்தநு பவிக்க வேண்டு மாகலானும், பிராரத்தவினைகளை அநுபவிக்கும் போது ஆகாமிய வினையை ஈட்டுதற்கும் அதுவே இடமாக லானும், அதிற்றானே சரியையாதி மூவகைத் தவங்களையுஞ் செய்து ஞான நெறியைத் தலைக்கூடிப் பரமுத்தி யடைய வேண்டு மாகலானும் முதல் வழி சார்பெனும் முத்திற நூல் களும் மேலுலகவாசிகளையும் கீழுலகவாசிகளையும் தழுவிக் கோடற்கு அம்மண்ணுலகை அவற்றின் மத்திய நிலைக்கண் வைத்துக் கூறினமை மரபாதல் உய்த்துணர்க.

இருள்-பூத விருளாகிய கண்ணிருள். ஒளி நீக்கமே இருளென்பார் மதம் § தருக்கநூலுள் தடைவிடைகளான்

---

* தலைவணக்கஞ் சிறந்தமை "தலையே நீவணங்காய்" "தாழ்த் தச் சென்னியும்" என்னுந் தேவாரத்தானும், "கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்—றாளை வணங்காத் தலை" என் னுந் திருக்குறட் பாட்டானு மறிக.

† சிவஞானசித்தியார், சுபக்கம். உ-ம். சூ. செ. கூஉ.

‡ திருவாசகம், திருப்பள்ளி யெழுச்சி, செ. க0.

§ தருக்கநூல்-தருக்க சங்கிரக முதலியன.

மறுத்து விரித்துக் கூறப்பட்டமையின் ஆங்குக் காண்க. கெடுதல்—இல்லையாக வொழிதல். தோன்றற் கிடமாகிய மலை வருவிக்கப்பட்டது அவாய் நிலையான். பலர் - பல சமயத்தார். புகழ்தல் - துதித்தல்.

* "பலர் புகழ் ஞாயிறு" எனவும், † "பலர் புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு" எனவும் வருமவற்றிற் பலர் பலர் என்பனவும் அப்பொருள.

பல சமயத்தாரும் ஞாயிற்றைப் போற்றுதலை, ‡"ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதும்" எனவும், §"அகலிடந்தொழூந் துவாதசாதித்தர்" எனவும் வருவனவற்றுலறிக. கதிர்-††ஆகுபெயர். என - உவமவுருபு; என என்பதை என்ன என்பதன் விகாரமாகக் கொண்டு என்று சொல்லும்படி எனப் பொருள் கூறி வினையெச்ச மாக்கலுமொன்று.

மேன்மேற் பிறப்பிறப்புட்படுத்துத் துன்புறுத்தும் கீழ்க் கீழ்த்தத்துவ முதலியனவற்றை முடிந்த பரமுத்தி யெனக் கொண்ட புறச்சமயத்தார் கொள்கைகள், பர முத்தி நிலை கண்ட மெய்ஞ்ஞானிகளால் பழிக்கப்படுதலின், அவற்றைப் பழி நெறி என்றார். அவ்வாறு பழிக்கப்படுதலை,

---

* சிவஞானபோதம், சிறப்புப்பாயிரம்.

† திருமுருகாற்றுப்படை, திருப்பரங்குன்றம்.

‡ சிலப்பதிகாரம், புகார்காண்டம், மங்கலவாழ்த்துப்பாடல்.

§ தக்கயாகப்பரணி, காளிக்குக் கூளி கூறியது. செ. ௯௫௪.

†† சினையாகுபெயர்; ஒளி எனிற் பண்பாகுபெயர்.

*இம்மையே யீரெட்டாண் டெய்தியெழி லாரு
மேந்திழையார் முத்தியென்று மிருஞ்சுவர்க்க முத்தி
அம்மையே யென்றுமுத்தி யைந்து கந்த
மறக்கெடுகை யென்றுமட்ட குணமுத்தி யென்றும்
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி யென்றும்
விவேகமுத்தி யென்றுந்தன் மெய்வடிவாஞ் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி யென்றுஞ்செப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே.

† "சாவிபோ மற்றச் சமயங்கள் புக்குநின்
றாவி யருதேயென் றுந்தீபற
அவ்வுரை கேளாதே யுந்தீபற"

‡ "தடுக்கமருஞ் சமணரொடு தர்க்கசாத் திரத்தவர் சொல்—இடுக்கண்வரு மொழிகேளா தீசனையே யேத்துமின்கள்."

§ "அணைவில் சமண் சாக்கியம்"

†† "உவலைச் சமயங்க ளொவ்வாத சாத்திரமாம்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும்"

---

* சிவஞானசித்தியார், சுபக்கம், அ-ம். சூ. செ. கஉ.

† திருவுந்தியார். செ. ௩௧.

‡ திருஞானசம்பந்தப்பிள்ளையார் தேவாரம், திருக்கோளிலி, பண்-பழந்தக்கராகம். செ. ௧0.

§ ஷ பிள்ளையார் தேவாரம், திருவிரும்பூளை, வினாவுரை. பண்-இந்தளம். செ. ௧0.

†† திருவாசகம், திருத்தெள்ளேணம். செ. ௧௭.

என்றற் றொடக்கத்த * பிரமாணங்களா லறிக.

மேற்கொள் என்பதனை ஒருசொல் விழுக்கா டெனக் கொண்டு அங்கீகரித்த என்றலுமாம்.

சிலர் - பலர். இது ஒன்றல்லாதன வெல்லாம் பலவென்னுந் தமிழ்நூல் வழக்குப் பற்றி உணரப்படும்.

சரியை கிரியை யோகம் என்னும் மூன்று செய்கைகளும் பதமுத்திகளை யளிக்க, ஞானச்செய லொன்றே பரமுத்தி யளித்தலின், அது அவற்றினும் சிறந்த செயலாயிற்று. செய்கையின் என்புழி, இன் ஏதுப்பொருட்கண் வந்த ஐந்தனுருபு.

இனி, சிறந்த செய்கை என்பதற்குச் † "செயற்கரிய செய்வார் பெரியர்" என்புழிப் பெறப்பட்ட அச்செயற்கரிய செயலாகிய இயமம் நியமம் முதலாய ‡ எண்வகை யோக வுறுப்புகள் என்றலுமாம்; செயற்கரிய செய்கை பிறராற் செய்தற்கரிய இயமம் முதலிய சிறந்த செயல்.

இன்னும் செய்கையின் அலகிலர் என்பதற்கு, செயல்களினது அளவு இலராகப் பெற்றவர் என ஆரும் வேற்று

---

* தொடக்கத்த வென்றதனால், "சாவிபோஞ் சமயத் தாழ்ந்து சகத்திடைத் தவிக்கின் றேனை" எனவும், "பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டாம்" எனவும், "பன்முகச் சமய நெறி படைத்தவரும் யாங்களே கடவு ளென்றிடும் பாத கத்தவரும்" எனவும் எழுந்த தாயுமானர் திருப்பாடல்களும், இன்னோரன்ன பிறவும் ஈண்டு நோக்கற் பாலன.

† திருக்குறள், ங-ம். அதி, நீத்தார் பெருமை. செ. ௬.

‡ எண்வகை யோகவுறுப்புக்களாவன:—இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன.

மைப் பொருள் கோடலு மொன்று. என்னை? *"யாத னுருபிற் கூறிற் றாயினும் - பொருள்சென் மருங்கின் வேற் றுமை சாரும்" என்ப தோத்தாகலான்; அளவற்ற சிறந்த செயலுடையவர் என்பது கருத்து. † அலகு - குற்றம், அளவு.

அலகிலராவார்:—சந்தானாசாரியர் சமயாசாரியர் பட்டி னத்துப்பிள்ளை முதலிய மூதறிவாளர்.

இது என்புழிப் பிரிநிலைப் பொருளும் தேற்றப் பொரு ளும் பயக்கும் ஏகாரம் தொகுக்கும் வழித் தொகுத்தலா யிற்று.

சிவானந்தத்திற்குக் காரணமாகிய சித்தாந்த முத்தியெ னப் பொருள் கூறிச் சிவானந்தத்தைக் காரியம் என்னலு மொன்று.

ஆம் என்பது உடன்பாட்டை யுணர்த்தும் வடமொழி யவ்வியயம். அவ்வியயம்-இடைச்சொல்.

துணிபொருள் என்பதற்கு வேதாகமங்களாற் றுணி யப்பட்ட பொருள் என்றலுமாம். துணி பொருள் வினைத் தொகை. அறமுதனான்கும் புருடார்த்த மெனப்படுதலின், ‡அத்துவிதமுத்தி பொருள் எனப்பட்டது. அத்துவிதமுத்தி,

---

* நன்னூல், பெயரியல், சூ. ௩௧௪.

† அலகு என்பது குற்றம் என்னும் பொருளையும் உணர்த்து மாறு "அலகிலிந்திரர்" என்னுந் தக்கயாகப்பரணிச் செய்யு ளுரையா லறிக.

‡ "ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்-தாணு வினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ" என்பது ஈண்டு நோக் கற் பாலது. தாயுமான சுவாமிகள் பாடல், எந்நாட்கண்ணி, ௨௮.

*சித்தாந்தமுத்தி, பரமுத்தி, சாயுச்சியமுத்தி, சிவானந்தமுத்தி என்பன ஒருபொருள் பயப்பன.

உருவத்தையும் வர்ணத்தையும் காணுமாறு, இரசம் பூசுதலாற் செயற்கையாய் விளங்குங் கண்ணுடிபோலாது, துணிபொருள் ஒன்றையே காணுமாறு இரசம் பூசாது இயற்கையாய் விளங்கும் கண்ணுடி இதுவென அதற்கும் இதற்கும் வேற்றுமை தெரிப்பார் 'துணிபொருள் காணத் துலங்குமாடி' என்றார்.

இனி, இரசம்பூசல் பூசாமை, இரண்டு காட்டல், ஒன்று காட்டல் என்னும் வேற்றுமைகளே யன்றி, ஒன்று காட்டும் பொருளை ஒன்று காட்டாது என்னும் வேற்றுமையும் † உடன் கொள்க.

இன்னும், இரசம் பூசின கண்ணுடி, உருவத்தையும் வர்ணத்தையும் அவை தன் முன்னிலைப்படின் காட்டும். இரசம் பூசாத இந்நூலாகிய கண்ணுடி, அத்துவிதமுத்தி, உருவமாகத் தன் முன்னிலைப்படாமலே அதனைக் காட்டும் என மற்றொரு வேற்றுமையுங் கொள்ளப்படும்.

துலங்குதல் - ஐய விபரீதங்கட்கு இடனுகாது விளங்கக் கிடத்தல்.

அணி - ‡சுருங்கச்சொல்லன் முதலிய பத்தழகு; அன்றி § அலங்கார நூலுட் கூறப்படு மணியுமாம்; அது பொரு

---

* " சித்தாந்தமுத்தி முதலே " என்னுந் தாயுமான சுவாமிகள் திருவாக்கு இங்கே சிந்திக்கற்பாலது. சிந்மயானந்தகுரு, செ. க.

† உடங்கியையும் என்றும் பாடம்.

‡ சுருங்கச் சொல்லன் முதலிய பத்தழகு-நன்னூல், பொதுப்பாயிரம், சூ. கங-ல் காண்க.

§ அலங்காரநூல் - தண்டியலங்கார முதலியன.

ளணி சொல்லணி யென இருதிறப்படும். அவற்றுட் பொரு ளணி உவமையணி முதல் ஏது அணி ஈறாக, நூறு திறப்படும்; சொல்லணி இயமகம் திரிபு முதலிய பல திறப்படும். மக்களால் ஆபரணம், அணியப் படுதலின் அணியெனப் பட்டதே யன்றி அவரை அலங்கரித்து நிற்றலானும் அணியெனப்பட் டாற் போல, செய்யுளை உவமை முதலியன அலங்கரித்து நிற்றலால் அவை அணி யெனப்பட்டன. மாந்தரை அலங் கரிக்கும் அணி பலவாயினாற்போலச் செய்யுளை யலங்கரிக்கும் அணியும் பலவாயின வென்க.

* "தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப"

ஆகலின், இவற்றுள் இது தொகுத்தல் யாப் பென்பார் தொகையின் என்றார். தொகை-பலவற்றையுந் திரட்டிக் கூறு தல்.

அறிஞரும் என்பதன்கண் உம்மை எதிரது தழீஇய வெச்சத்தோடு சிறப்பு. அறிதல் - அறிதல்; ஒருசொல். குறிவழி - குறியால் அறியும் வழியளவைப் பிரமாணம். குறி - அடையாளம்; புகையாகிய அடையாளத்தால் நெருப் புண்டென் றறிதல் போல்வது. வழியளவை, அநுமானம், கரு தலளவை என்பன ஒருபொருட் கிளவிகள். குருமொழியின் உறைத்து நிற்ப உள்ளத்திற் றோன்று முணர்ச்சி, அநுபவ மெனப்படும். குருமொழி - உபதேசம்; "உபதேசகலை" என் பதும் அது. முதனூல் - வேதாகமம்.

உயிர்களின் பக்குவா பக்குவ அதிகார பேதம் பற்றிச் சாருவாக முதலிய பலவேறு வகைப்பட்ட சமய சாத்தி ரங்க ளெல்லாம் வேதாகமங்களுள் சிவபிரானால் சுருக்கிக்

* நன்னூல், சிறப்புப்பாயிரம், சூ. ௪.

கூறப்பட்டிருத்தலானும், அவற்றின்கணுள்ள ஒவ்வொரு கூற்றினையே *"சமுத்திர கலச நியாயம்" பற்றி எடுத்துக் கொண்டு, பின்னர்ப் பலரும் தத்தம் அறிவாற்றலளவிற் கேற்ப, சிவபிரான் றிருவருளால் தனித்தனி விரித்துப் பல சமய சாத்திரங்களாகப் பண்ணிக்கொண்டனரன்றித் தாம் சுதந்தரமாகப் பண்ணிக்கொண்ட நூல் ஒன்றுமில்லை என்பது, †"அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக் கையினு னளப்பரிதா மப்பொருளை யரனருளா லணுக்கள்—தருவர் கள்பின் றனித்தனியே தாமறிந்த வளவிற் றர்க்கமொடுத் தரங்களினாற் சமயஞ் சாதித்து" என்னும் சித்தியினான் அறியக்கிடத்தலானும், சிவபிரானொருவரே ‡ பரமபதி என்பதும், விபூதி உருத்திராக்கம் தரித்துச் சிவனை வழிபடினன்றிப் பரமுத்தி சித்தியாதென்பதும் வேதாகமங்களின் றுணிபொருளாகலானும், வேதங்கள் சிவசாத்திரப் பொருளைச் சிரசிற் றாங்கியிருத்தல் பற்றி வியாச சூத்திரமாகிய பிரம மீமாஞ்சைக்கு நீலகண்ட சிவாசாரியர் தாமியற்றிய

---

*சமுத்திரத்தில் ஒரு கலச நீரை முகந்து கொண்டால் அவ்வளவேயன்றி அந்நீர் முழுதும் கலசத்துள் வாராதது போல்வதோர் நெறி; அதுபோல வேதாகமங்களில் ஒவ்வொரு கூற்றை எடுத்துக் கொண்டால் அவற்றின் பொருள் முழுதும் அக்கூற்றுக்களில் அடங்காதென்பது கருத்து.

† சித்தியார், சுபக்கம், அ-ம் சூ. செ. கச.

‡ பிரசிநோபநிடதம்.

ஏதஸ் மாஜ்ஜீவகநாத் பராத்பரம் புரிசயம் புருஷமீக்ஷதே.

ஏதஸ் மாஜ்ஜீவகநாத் பராத்பரம் புரிசயம் புருஷமீக்ஷதே.

பாடியத்தில், *"வேத சிவாகமங்கட்குப் பேதங் காண்கிலம்; வேதமே சிவாகமம்." என்று கூறி யிருத்தலானும், காந் தத்தில் "சைவமே வைதிக மெனப்படும்; வைதிகமே சைவ மெனப்படும்; முனிவரரே! அற்றாயினும், சைவம் வேதப் பொருளோடு ஒற்றுமையா யிருத்தலின் வேதசார மென்று கூறப்படு" மென ஓதப்படுதலானும், † ஸ்ரீமந்திரத்துள் வேதாகமங்கள் இறைவனருளிச் செய்த நூல்களென்றும், அவற்றுள் வேதம் பொதுநூல் சைவம் சிறப்புநூல் என்றும், அதுபற்றிப் "பேதம தென்னில் பெரியோர்க் கபேதமே" என்றும், ‡"வேதத்துள் எல்லா அறங்களும் கூறப்பட்டன" என்றும், "வேதத்தை யோதி வீடுபெற்றார்" என்றும் ஓதப்படுதலானும், இந்நூலுள்ளும் § "வேதாகமத்தின் விதித்த முத்தி" எனவும் †† "வேதாகமஞ்சாற்று" எனவும் கூறப்படுதலானும் வேதாகமங்களே ஈண்டு முதனூலெனப்பட்டன.

---

* நீலகண்ட பாஷியம், அத்தி - உ, பாதம் - உ, சூ- நஅ.

"வயஞ்து வெதஶிவாமயொ:விஶெஷம் நவஶ்யாம:"

"வயந்து வேத சிவாகமயோ: விசேஷம் நபசியாம:"

† ஸ்ரீமந்திரம். எட்டாந்தந்திரம், ஆறந்தம், செ-உஅ. "வேதமோ டாகம மெய்யா மிறைவனூ—லோதுஞ் சிறப்பும் பொதுவுமென் றுள்ளன—நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்—பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே"

‡ ஷை "வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தின்—ஓதத் தகுமற மெல்லா முளதர்க்க—வாதத்தைவிட்டு மதிஞர் வளமுற்ற—வேதத்தை யோதியே வீடுபெற் றார்களே" வேதச்சிறப்பு, செ.க.

§ இந்நூல், செ. எ.

†† ஷை ஷை உ०.

முதனூலாகிய வேதத்தையோதி வீடுபெற்ருருள் உருத்திரபசுபதி நாயனூரும் ஒருவரென்பதை, க. "ஆயவந்தணரருமறை யுருத்திரங் கொண்டு" எனவும், உ. "கொள்ளுமன்பினி லுருத்திரங் குறிப்பொடு பயின்ருர்'' எனவும், ந. "அருமறைப்பயனுகிய வுருத்திர மதனை—வருமுறைப் பெரும் பகலுமெல் லியும்வழு வாமே- திருமலர்ப்பொகுட் டிருந்தவ னனையவர் சிலநாள்—ஒருமை யுய்த்திடவுமையிடமகிழ்ந்தவருவந்தார்" எனவும், ச. "காத லன்பர்த மருந்தவப் பெருமையுங் கலந்த—வேத மந்திர நியதியின் மிகுதியும் விரும்பி-ஆதி நாயக ரமர்ந்தருள் செய்யமற் றவர்தாங்—தீதி லாநிலைச் சிவபுரி யெல்லையிற் சென்ருர்" எனவும், ரு. "நீடு மன்பினி லுருத்திர மோதிய நிலையால்—ஆடு சேவடியருகுற வணைந்தன ரவர்க்குப்—பாடு பெற்றசீ ருருத்திர பசுபதி யாராங்—கூடு நாமமு நிகழ்ந்தது குவலயம் போற்ற." எனவும் வரும் பெரியபுராணச் செய்யுட்களா னறிக.

இன்னும் வேதாகமங்களின் முடிபொருள் ஒன்றென்பதை, ஸ்ரீமூலநாயனூரும் தாயுமானசுவாமிகளும், சு. "நாடிலிரண்டந்தம் — பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே," எனவும், எ. "வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற வித்தகச் சித்தர் கணமே" எனவுங் கூறியருளிய திருவாக்குக்களாற் கரதலாமலகம்போல் விளக்கிப்போந் தமையால் நன்கறியலாம்.

---

க, உ, ந, ச, ரு, மாபுராணத்தில், உருத்திர பசுபதி நாயனூர் புராணத்திலே ச, சு, எ, அ, கூ, இவ்வெண்களையுடைய திரு விருத்தங்களை நோக்குக. சு, ஸ்ரீமந்திரம். எட்டாந்தந்திரம், ஆறந்தம். செ. உஅ. எ. தாயுமான சுவாமி பாடல். சித்தர்கணம்.

க. "தத்துவமசி" என்னும் வேதாந்த மகா வாக்கியம் 'அது நீ ஆனாய்' என்னும் பொருள் பயத்தல்போலவே, உ. "சிவத்துவமசி" என்னுஞ் சித்தாந்த மகா வாக்கியமும் 'சிவன் நீ ஆனாய்' என்று பொருள் பயந்து நிற்றலான், பதி பசு பாசம் மூன்றினையும் இரண்டும் தம்முட் கொண்டு காட்டலின் பெரியோராகிய அவ்விருவரும் உண்ணேக்கால் அநுபவத்தினும் அதனை உணர்ந்து சமரசங் கூறியருளினார் என்க. பெரியோர்க் கபேதமே என்றதனால் அறிவிற் சிறியார் பிறழ வுணர்வ ரென்றூ ராயிற்று. இக்கருத்துப் பற்றியே ங. "மாசில் காட்சியர்—பார்த்துணர் பான்மையாற் பலவ கைப்படச்—சூத்திர மானவுஞ் சொற்று வைகினான்." எனக் கந்த புராணத்துட் கூறப் பட்டதூஉ மென்க.

ச. "கருட னுருவங் கருது மளவில் – பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்—குருவி னுருவங் குறித்தவப் போதே— திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே." என்னுமிது "கருடோஹமஸ்மி" என்னுங் கருட மந்திரத்தை யுணர்த்திக் கருடபாவனை செய்யு மாந்திரிகனையும், கருடனையும் அவனாற் றீரும் விடத்தினையும் தெரிக்கின்றமை போல, வேதாந்தத்துக்

---

க. இது சாந்தோக்கியம், சு-ம் பிரபாடகம்-அ-ம். கண்டம், எ-ம் மந்திரத்திலுள்ளது. இங்கே பிருகதாரணியம்-ச-ம் அத். ரு-ம் பிராமணம். கக-ம். மந்திரத்திலுள்ள "அவனிவனானது" என்னும் வேதாந்த மகாவாக்கியமும் நோக்கற்பாலது.

உ. "ஶிவத்வமஸீ த்யுபதி³ஶேத்."

"சிவத்துவமசீ த்யுபதிசேது." சிவாக்கிரயோகிகள் கிரியா தீபிகை-படலம்-ரு.

ங. கந்தபுராணம், பாயிரப்படலம்-செ-சசு. ச. ஸ்ரீமந்திரம், ஒன்பதாந் தந்திரம், ஞானகுரு தரிசனம், செ-ச.

கூறப்படும் "சோஹமஸ்மி" அவன் நான் ஆகின்றேன் என்றேனும், சித்தாந்தத்துட் கூறப்படும் "சிவோஹமஸ்மி" சிவன் நான் ஆகின்றேன் என்றேனும் ஒருவன் பாவிப்பானாயின் அப் பாவனையில் விளங்குஞ் சிவனால் அவன் மலமாயா கன்மங்களை விடுப்பன் எனச் சிவோகம் பாவனை அச் செய்வோனையும் பாவிக்கப்படும் சிவனையும் அவனால் நீங்கும் மும்மலங்களையுந் தெரித்து நிற்றல் காண்க. இங்ஙன மிருத்தலால், க. பாகத்தியாக லக்ஷணையால் "தத்துவமசி" என்னும் வேதாந்த மகா வாக்கியத்தைப் பாகித்தல் சாலாமை யறிக. அஃதன்றியும் முக்கிய உபநிடதங்களோடும், உபப்பிருங்கணங்களாகிய புராணங்களோடும், மகோபப்பிருங்கணங்களாகிய ஆகமங்களோடும் அவ்விலக்ஷணை முரண்பட்டுத் தூரம் போய்த் துச்சமாய் விடுதலை உற்று நோக்குக.

வேதத்துட் கூறப்படும் உ. "அத்துவிதமென்ற சொல்லானே ஏக மென்னில் ஏக மென்று சுட்டுவ துண்மையின் அத்துவித மென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு" எனவும், வேதத்துள் "ஏக" மென்றது ங. "ஒன்றென்ற தொன்றேகா ணொன்றே பதிபசுவா, மொன்றென்ற நீபாசத் தோடுளைகாண் — ஒன்றின்றால், அக்கரங்க ளின்றா மகரவுயி ரின்றேல், இக்கிரமத் தென்னு மிருக்கு" எனவும் சிவஞான போதத்துள் ஓதப்படும் ஏதுவுடனெடுத்துக் காட்டையும், சிவஞான சித்தியுள் ஓதப்படும் ச. "கண்டவிவை யல்லேனா னென்றகன்று காணுக் கழிபரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த, தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே சோகமெனப் பாவிக்கத்

க. பாகத்தியாகமாவது - ஒருவாசகத்தில் வாச்சியார்த்தத்திலே ஒரு பாகத்தை நீக்கி மற்றொரு பாகத்தைக் கொள்ளுதல். உ. சிவஞான போதம். உ-ம், சூ-ம், முதலதிகாரணத்து ஏது. ங. ஷை ஷை இரண்டாம் உதாரணம். ச. சித்தியார்-கூ-ம்-சூ, செ-எ.

தோன்றுவன்வே றின்றி, விண்டகலு மலங்க ளெல்லாங் கருடதியா னத்தால் விடமொழியு மதுபோல விமலதையு மடையும், பண்டைமறை களுமதுநா னேனென்று பாவிக் கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே" என்னும் திரு விருத்தத்தையும், "தத்துவமசி" என்னும் வேதாந்த மகா வாக்கியத்தையும் "சிவத்துவமசி" என்னும் சித்தாந்த மகா வாக்கியத்தையும் இணைத்து நோக்குவார்க்குத் தத்துவமசி ஏகப்பொருளுணர்த்தாது முப்பொருளுணர்த்துமாறு வெள் ளிடை மலைபோற் றெள்ளிதிற் புலப்படுமென்க. தத்-அது, துவம்-நீ, அசி-ஆனாய் என்புழி, ஆனாய் என்பதனால் ஆதற்கு முன் ஆகாது தடுத்து நின்றதொரு பொருள் உண்டென்பது சித்தித்தது; அதுவே பாசமென்று உணர்க. அது என்றது பதியை; நீ என்றது பசுவை; ஆனாய் என்பதனாற் பெறப் பட்ட பாசத்தோடு "தத்துவமசி" முப்பொரு ளுணர்த்து மாறு காண்க. "சிவத்துவமசி" யும் இவ்வாறே முப்பொரு ளுணர்த்துதலை உற்றுநோக்கி உணர்க.

இன்னும் வேதம் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என நான் கென்றும், அதர்வணத்தை நீக்கி மூன்றென்றும் வழங்கப்படும். அதர்வணம் ஏனை மூன்றினின்றும் திரட்டப் பட்டமையின், அதுவும் அவற்றுள் அடங்குதலான், வேதம் மூன்றென்று கூறுதலும், அதர்வணம் மூன்றினின்றும் பிரித் தெடுத்துத் தொகுக்கப்பட்டுத் தனிமுதலாய் நிற்றலின், அ தனை வேறுவைத் தெண்ணி, வேதம் நான் கென்று கூறுத லும் ஆன்றோர் வழக்கென் றுணர்க. அக் காரணம்பற்றி இருதிறத்தார் கூற்றும் தம்முள் முரணாமை தெளிக.

மூன்றென்னு முறைபற்றி, இருக்கு, யசுர், சாமம் என்னு மூன்று வேதங்களுள் இடைப்பட்டது யசுர் வேதம். அதனிடைப்பட்டது உருத்திர மந்திரம். அதனிடைப்பட்டது

சிவமூல மந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்கரம். அதனிடைப்பட்டது சிவ என்கின்ற இரண்டு அக்கரம். வேதபுருடனுக்கு உருத்திரம் கண்ணும் பஞ்சாக்கரம் கண்மணியுமா மென்று கூறப்பட்டன. இவ் வுருத்திரத்தில் வேறுபாடின்றிச் சித்துப்பொருள் அசித்துப்பொருள் எல்லாவற்றையும் தனித்தனி எடுத்தோதி வழிபாடு கூறி, க. "அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்-நிகரி லிறை நிற்கு நிறைந்து" என்புழி அகர வுயிர்போல, சிவபிரானுடைய சர்வவியாபகத் தன்மை விளக்கப் பட்டமையானும், திருநாவுக்கரைய நாயனாரும் இக்கருத்தேபற்றி, உ. "இரு நிலனாய்த் தீயாகி நீரு மாகி யியமான னாயெறியுங் காற்று மாகி—அருநிலைய திங்களாய்ஞாயி றாகி யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்—பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும் பிற ருருவுந் தம்முருவும் தாமே யாகி—நெருநலையா யின்றாகி நாளை யாகி நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே" என்றிவ்வாறு எல்லாவற்றையும் பகுப்பின்றி எடுத்தோதுதல் காண்க.

வேத புருடனுக்குக் கண்மணியாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைக் கண்ணாகிய ஸ்ரீ உருத்திர மந்திரம் தனது மத்தியிற் கொண்டிருக்கும் வன்மையானன்றோ! அது, தன்னைச் செபிக்கு மாற்றாற் செபிப்பார்க்கு முத்தி கொடுக்குஞ் சித்திவாய்ந்த தென்றுணர்க. பஞ்சாக்கரமும் முப்பொருளுணர்த்தும்; தத்துவமசியும் முப்பொருளுணர்த்தும்; ஆகலானும், பஞ்சாக்கரம் வேதத்துள்ளும் ஆகமத்துள்ளும் விதந்தெடுத் தோதப் படும் ஆகலானும் இரண்டற்கும் பேதமின்மை இவ்வேதுப் பற்றியும் தெற்றென உணர்க.

இந்நூலுள் *பிறநூல்களும் பிரமாண நூல்களாக எடுத்தோதப் பட்டன வாயினும், முதனூல்களைக் கூறவே, அவற்

க. திருவருட்பயன், பதிமுதுநிலை, செ-க. உ. அப்பர் தேவாரம், பொதுத் திருத்தாண்டகம், கூ-ம் திருமுறை. செ- க. *பிறநூற் பிரமாணம் இந்நூல், செ-கரு நோக்குக.

றின் வழிநூலாதியனவும் அடங்கும் என்னுங் கருத்தால் அவற்றை வேறு கூறுதொழிந்தார்.

நெறி என்பதனை வழிமுதலிய மூன்றனோடுங் கூட்டுக. முத்திநிச்சயம் முத்தியை நிச்சயித்துக் கூறும் நூல் என வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. பண்ணுதல்—தோற்றுவித்தல். பண்ணுதல், தோற்றுவித்தல், இயற்றுதல், செய்தல், உண்டாக்கல், சிருட்டித்தல், ஆக்குதல் என்பன ஒருபொருட்கிளவிகள்.

அறு மூன் றீரிரண்டான வெண்பாட்டு என்பது, இருபத்திரண்டென்னும் எண்ணையுடைய பாட்டெனவும், இருபத்திரண்டு குற்றமில்லாத பாட்டெனவும் இருபொருள்தோன்றநிற்றல் காண்க. வெண்மை-மறுவில்லாமை. மறு-குற்றம். அது, *குன்றக்கூறன் முதலிய பத்துமாம்.

'ஒழுகும் நல்லறம்' இருவகைப் பற்று மற்ற பெரியோர் மேற்கொண் டொழுகும் நன்மை பயக்கும் துறவறம். இவ்வறம், † "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்—பற்றுக பற்று விடற்கு." என்னும் தெய்வநூற் பிரமாணத்தின் படியே, முன் விட்ட பற்றின் வாசனை பின் தாக்காமைப் பொருட்டுச் சிவப்பற்றினையே இறுகப்பிடித்து நிற்றலின், அது சிவஞானம் வாயிலாகப் பரமுத்தி பயக்கு மாகலான், நல்லற மெனப்பட்டது. இக்கருத்துப் பற்றியே ‡ "அற்றது பற்றெனி லுற்றது வீடு" என்றார் பெரியார் பிறரும்.

---

*குன்றக்கூறல் முதலியவற்றை நன்னூல், பொதுப்பாயிரம், சூ. கஉ-ல் காண்க.

† திருக்குறள், ௩௫-ம் அதி, செ-க0. இங்கே "யாதனின் யாதனி னீங்கியா னோதல்-அதனி னதனி னிலன்" என்பது நோக்கற்பாலது. ஷை. ஷை. செ. க.

‡ திருவாய்மொழி, உ-ம் திருப்பதிகம், ரு. "அற்றது பற்றெனி லுற்றது வீடுயிர்-செற்றது மன்னுறி லற்றது பற்றே"

* "இல்லற மல்லது நல்லற மன்று" என்பது, இல்லறம்—இல்லறமும்,—அல்லது - அது வல்லாத தாகிய துறவறமும்,—நல்லறம் - (அஃ தஃதைய நுட்டிக்கும் அறிவாற்றலுடையார்க்கு) நன்மை பயக்கும் அறங்களாம்,—அன்று—தீமை பயக்கும் அறங்களல்ல. எனப் பொருடாலின் மேலதனோடு இது முரணுமை யுணர்க. பான்மயக்க முருமைப்பொருட்டு அன்று என்பதனை இல்லறத்தோடுங் கூட்டித் தனித்தனி முடிவு செய்து கொள்க.

இனி ஒழுகு நல்லறம் என்பதற்கு இலகுவாக வொழுகும் இல்லற மெனப்பொருள் கொள்ளாமோ வெனின், கொள்ளாம். என்னே? "முதுணர் நிலைமையோ" ரெனவிசேடிக்கப் படுதலான், அவர் நித்தியாநித்திய வஸ்து விவேகமுடைய ரென்பது போதரலின், அநித்தியத்தை விட்டு நித்தியத்தைப் பற்றினோர் என்பது பெறப்படுதலான் அப்பொருள் ஒழிதற் பால தென்க.

இனி, இல்லற ஞானிகளெனப் பொருள் கோடற்கு இழுக்கென்னே? யெனின், துறவற ஞானிகள் தொழாரெனப் பட்டுச் சிறப்பொருவுதலின், இழுக்காமாறு காண்க. இன்னும் துறவற ஞானிகளைக் கூறவே இல்லறஞானிகளு மடங்குமாறும் நோக்குக.

இக்கருத்துப்பற்றியன்றே † "பவநனி வன்பகை கடந்த தவாடி புனைந்த தலைமை யோனே" எனச் சிவஞானபோதத்துட்கூறி யருளியதூஉம், அதற்கு, "பிறவியாகிய மிக்க வலிய பகையினை வென்ற தவத்தோர் தனது திருவடியைப் புனைந்து கோடற் கேதுவாகிய தலைமைப்பாட்டினை யுடையோன்" என உரை யுரைக்கப்பட்டதூஉம் என்க.

* கொன்றை வேந்தன், சூ, ந.

† சிவஞான போதம், சிறப்புப்பாயிரம்.

இன்னும் ஒழுகு நல்லறத் தொழுகலும் என்பதற்குத் தத்தம் பக்குவத்திற்கு ஏற்ப ஒழுகவேண்டிய நல்ல தரும வழியிலே நடத்தலும் என்று கோடலும் ஒன்று. பசுதருமம் உலக வின்பம் பயத்தலின் அதனை யஞ்சி வீட்டின்பம் பயத்தற் கேதுவாகிய சரியையாதி பதிபுண்யமார்க்கத்தில் ஒழுகுவோர் என்பார் அறத்திற்கு நல்லென்னும் அடை கொடுத்தார்.

அங்ஙன மொழுகுதற்குக் காரணம் கல்வியுடைமையென்பார், "கல்வியுடையோ" ரெனவும், அக் கல்வி வழுவுடைத்தாயின் அங்ஙனஞ் செய்ய வொட்டா தென்பார் 'வழுவில் கல்வி' யென்றும், அதினுஞ் சிறிது வழுவுறினும் பயன் குன்று மென்பார் 'சிறிதும் வழுவில் கல்வி' யென்றுங் கூறினார்.

சிறிதும் என்பது அணுத் துணையும் தினைத் துணையும் என்னும் பொருண்மே னின்றது. என்னை? அவையே மிகச் சிறுமைக்கு நூல்களு ளெடுத்துக் காட்டும் பிரமாணங்களாகலான். *"இன்னுழை கதிரின் றுன்னணுப் புரைய" எனவும் † "தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றேன்" எனவும், ‡ "தினைத்துணை நன்றி" எனவும் வரும் இலக்கியங்கள் நோக்குக. வழு - ஐயம் திரிபு அறியாமை.

இனி, 'வழுவில் கல்வி' என்பதற்கு வழுவை யில்லையாகச் செய்கின்ற கல்வியுமாம். வழு - கல்வி யில்லாத காலத்து அறியாமையாற் செய்த குற்றங்கள். இல்லை யாகச் செய்தல் - கற்றபின் அறிவுண்மையாற் பின் அவற்றைக் கடியுமாறு செய்வித்தும் முன் னியற்றியவற்றிற்குப் பரிகாரஞ் செய்வித்தும் பயன்படுதல்.

---

* திருவாசகம், திருவண்டப்பகுதி, அடி-ரு. † திருக்கோத்தும்பி, செ. ௩. ‡ திருக்குறள், ௧௧-ம்-அதி-௪.

இதனால், க. " கற்க கசடறக் கற்பவை கற்றபின்-நிற்க வதற்குத் தக" என்றவாறே கசடறக் கற்று அதற்குத்தக நின்றொழுகுபவர் இப்பெரியார் என்பது பெற்றாம்.

உ. " ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய - வழுக்கியும் வாயாற் சொலல் " என வுத்தரவேதம் ஓதுதலின், 'நல்லறத் தொழுகும்' இப்பெரியார் மறந்தும் உயிர்க்குத் தீங்கு பயக்கும் பொய் பேசாது மெய்யே பேசுவோர் என்பார் 'வாய்மையு முடையோர்' என்றார். மெய் பேசுதற்குக் காரணம் இதுவென வுடன்றெரிப்பார், 'மூதுணர் நிலைமையு முடையோர்' என்றார்.

பாசஞான பசுஞான மூதுணர்வு, நிலையின்மையின், அவற்றோடு சிவஞான மூதுணர்வுக்கு வேற்றுமை தெரிப்பார் ' நிலைமை மூதுணர்வு ' என்றார். மைவிகுதி ஈண்டுத் தன்மைப் பொருளுணர்த்தாது பகுதிப் பொருள் விகுதியாய் நின்றது ௩. " இருமை வகை தெரிந்து " என்புழிப்போல.

நிலைமை மூதுணர்வு என நிற்கற்பாலது மூதுணர் நிலைமை எனச் சொன்னிலை மாற்றமாய் நின்றது.

வாய்மையாவது பிறவுயிர்களுக்குத் தீங்கு பயவாத சொற்களைச் சொல்லுதல். அது ச. " வாய்மை யெனப்படுவதியாதெனின் யாதொன்றும்—தீமை யிலாத சொலல் " என்னுந் திருவள்ளுவப்பயனாற் பெற்றாம்.

இங்ஙனஞ் சிறப்பித்துக் கூறியவதனால், இப்பெரியார் ரு. " ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்-கெழுமையு மேமாப் புடைத்து " என்று சிறப்பிக்கப்பட்ட கல்வியும், அதன் பயனாகிய சா. " அறிவுடையா ரெல்லா முடையா ரறி

---

க. திருக்குறள் - அதி-ச௦. செ. க. உ. ஷை ஷை கச. செ.கூ. ௩. ஷை ஷை. ௩. செ. ௩. ச. ஷை ஷை ௩௦. செ. க. ரு. ஷை ஷை. ச௦. செ. அ. சா. ஷை ஷை ச௩. செ. க௦.

விலா—ரென்னுடைய ரேனு மிலர்" என்று சிறப்பிக்கப்பட்ட அறிவும், அதன் பயனுகிய க. "ஒழுக்கம் விழுப்பந் தாலா னொழுக்க முயிரினு மோம்பப் படும்" என்று சிறப்பிக்கப் பட்ட ஒழுக்கமும், அதன் பயனுகிய உ. "எல்லா விளக்கும் விளக்கல்ல சான்ருேர்க்குப்—பொய்யா விளக்கே விளக்கு" என்று சிறப்பிக்கப்பட்ட வாய்மையும் ஒருங்குடைய சிவ ஞானச் செல்வ ரென்பது பெற்ரும்.

நின்று—(தத்தம் பக்குவத் தாழ்வும் தலைவன் பக்குவத் துயர்வும் நோக்கி அணுகுதற்குக் கூசித் தூரத்தே) நின்று. தலைவன் ஈண்டுத் தவராசன்.

எம்மனோர் என்றது இல்லறத்தாரையும் துறவறத்தா ரையும் என்க.

தலைவன் விமலனுகலான் * "எடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே யெறிவிழியின் படுகடைக்கே கிட" ப்பினும் "கூடரிய வீடுங் கூடிக் குஞ்சித்த சேவடி யுங் கும்பிட்டே யிருப்பன்" ஆகலின், அவன் இல்லறத்தி ருப்பினும் தாமரையிலையிற் றண்ணீர் போலப் பற்றற்றிருப் பான், துறவுபூண வேண்டா; அங்ஙன மிருப்பவும், அவ் வறத்திற் றலைப்படாவிடின் இல்லறத்தார் இத்தலைவன் துறவு பூணுமையின், அஃதத்துணை யாவசியக மின்று போலும், யாமும் அதிற் புகாதொழிகுது மெனக் கருதி அதனை யொழிகுவர்; ஒழியவே பற்றருது; அதனுல் திருவடி ஞானந் தலைப்படாது; அது கூடாதாகவே, சித்தாந்த முத்தி சித்தி யாது என்பது பற்றியும், துறவறத்தார் அதற்குச் சொல் லிய அறங்களின் வழுவினுல், துறவறம் பூண்ட தலைவனுகிய

---

க. திருக்குறள். அதி. கச. செ. க. உ. ஷை ஷை கூ௦. செ. கூ.
*சிவஞான சித்தியார், சுபக்கம். சூ-க௦-செ. ௫.

ஞானசாரியன் வெகுளுவன்; அவன் *"குணமென்னுங் குன்றேறி" நிற்கின்றவனாகலின், அவனது வெகுளி, தானுள்ள காலவரை கணப்பொழுதே யாயினும் அதனைத் தடுத்தலரிதென வஞ்சித் துறவறத்தின் வழுவாதிருப்பர் அதனான் முத்தி சித்திக்குமெனக் கருதியும், இருதிறத் தறவோரிடத்தும் வைத்த பெருங்கருணையே தலைவன் துறவுக்குக் காரணமாயிற்று என்க.

இல்லற நடாத்தி முடித்துத் துறவறத்துறும் அச் சம்பந்த வுரிமைபற்றி இல்லறத்தாரையும் எம்மனோர் என்பதன் பாலடக்கினார், சொற்பல்காமைப் பொருட்டு.

† "வேடநெறி நில்லார் தம்மை விறல்வேந்தன்— வேடநெறி செய்யின் வீடது வாமே." என்னும் மந்திரத்தாற் றுறந்தார் நெறிதப்பின், தப்பவொட்டாமற் றடுத்து அந்நிலை நிறுத்தி, நன்மை பயத்தல் உலகராசன் கடப்பா டென்பது போதாலான், தவராசன் எற்றிற்கு வேண்டா வெனின், அற்றன்று; உலகராசன் ஊனக் கண்ணுடைய னாகலான், அகத்து நிகழ்ச்சி யறியான் என்று கருதி, அவன் செய்யும் உடற்றண்டத்திற் கஞ்சிப் புறத்தே வேடநெறி நிற்பார் போல் நடிப்பினும் அகத்தே யந்நெறி நில்லார்; தவராசன் ஞானக்கண்ணுடைய னாகலான், அவனகத்து நிகழ்ச்சியு மறிவானெனக் கருதி அவன் உயிர்த் தண்டமாகிய சாபமிடுவானென வஞ்சியும், அவன நுக்கிரகமில்வழி என்றுந் துன்பமேயெனக் கருதி அது வேண்டியும் வேடநெறி நிற்பாராகலான், தவராசனாகிய தலைவனே ஏனைத் தாழ்ந்த பக்குவமுடைய துறவிகளை வேடநெறி நிறுத்துதற்கு உலகராசனிலும் இன்றியமையாது வேண்டப்படுவன் என்பது கடைப்பிடிக்க.

---

* திருக்குறள், அதி-ந. செ. க.

† திருமந்திரம், முதற்றந்திரம், இராச தோடம். செ - ந.

எம்மனோர்தம் பொருட்டு என்புழித் தம் சாரியை. பொருட்டு—காரணம். துறவறம்—துறந்தார்க் குரியதருமம். துறவு—துறத்தல். அஃதாவது அகப்பற்றுப் புறப்பற் றிரண்டையும் விடுதல். துறவு ஆகுபெயராய்த் துறந்தார் மேலது. அவர் தருமம், *. "ஓரறி வுயிர்க்கு முறுதுய ரோம்பிக்—காலோய் நடைய" னுதன் முதலிய அருளுடை மையும் பிறவுமாம். அவற்றைத் திருவள்ளுவப் பயன் முத லிய விரிந்த நூல்களுட் காண்க. ஈண்டு விரிப்பிற் பெருகும்.

பொருட்டாக என்பதில் ஆக என்பது விகற்பப் பொ ருள் பயக்கும் ஓரிடைச்சொல்.

பூணுதல்—மேற்கொள்ளுதல். தோன்றல்—பெருமை யிற் சிறந்தோன், பிரசித்தி பெற்றோன்; என்றது எல்லா ராலு மறியப்பட்டவன் என்றபடி.

இனி, ஞானத் திறநெறி நிறுத்தும் செங்கோல் வேந் தன் என்பதற்குச், சீடரை அவரவர் பக்குவத்திற் கேற்ப ஞானத்திற் சரியை ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோ கம், ஞானத்தில் ஞானம் என்றற் றொடக்கத்தனவாய் விரி யும் ஞானப்பகுதிகளுள் ஒவ்வோர் ஞானமார்க்கத்தில் நிறு வுகின்ற ஞானச் செங்கோலையுடைய ஞானவேந்தன் என் றலுமொன்று. இப்பொருட்குச் சீடரை வருவித் துரைக்க.

இன்னும் ஞானத்திறநெறி என்பதற்கு அபரஞான பர ஞானப் பகுப்பை யுடைய சைவமார்க்கமென்றலும்; அவ் விரண்டன் பகுப்பாகிய கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை யென்னும் ஞானப் பிரிவினையுடைய சைவமார்க்கம் என்றலுமாம்.

---

* சிதம்பர மும்மணிக் கோவை. செ. க. அடி. ௩௧, ௪௦.

நிறுத்துதல்-அவ்வந் நெறிகளிற் பிறழாது நிற்கச் செய்தல். செங்கோல்-அருளாகிய நீதி ; ஞானமாகிய நீதி. அருள்-எல்லாவுயிர்களிடத்துஞ் செல்வதாகிய கருணை. ஞானம்-எல்லாவற்றையும் அறியும் அறிவு.

அருள் எல்லா வுயிர்களிடத்தும் சமமாகச் சேறலின், அதனையே செங்கோல் என்றல் ஆசிரியர் கருத்தென்க. அது தவராசன் என்னும் பொருள்பட வேந்தன் என்றமையானும் நன்கு விளங்கும். உலக வேந்தனுக்கு நீதி செங்கோலெனப்படுதல் போலத், தவவேந்தனுக்குக் கருணை செங்கோலெனப் படுதலே தகுதியாமாறு உய்த்துணர்க.

முறைவழி என்றது சிவபெருமானிடத்து உபதேசம் பெற்ற முறைப்படி வந்த அகச்சந்தானத்தை. அகச்சந்தானத்தார் கைலைமலையகத் திருத்தலால் அவர்க்கு அப்பெயராயிற்று. அவராவார் ஸ்ரீகண்ட பரமசிவன்பால் உபதேசம் பெற்ற திருநந்தி தேவரும், அவர்பால் உபதேசம்பெற்ற சனற்குமார முனிவரும், அவர்பால் உபதேசம் பெற்ற சத்தியஞான தரிசநிகளும், அவர்பால் உபதேசம் பெற்ற பரஞ்சோதி முனிவருமென்றின்னோர். முறை-கிரமம். வழி - சந்தானம்.

மரபு என்றது அவ்வகச் சந்தானத்தினின்றும் வந்தபுறச் சந்தானத்தை. புறச்சந்தானத்தார் கைலைக்குப் புறமாகிய பூலோகத்திலிருந்தமையால் இவர்க்கு இப்பெயராயிற்று.

இவராவார் அகச்சந்தானத்துப் பரஞ்சோதிமுனிவர்பால் உபதேசம் பெற்ற மெய்கண்டதேவரும், அவர்பால் உபதேசம் பெற்ற அருணந்திசிவாசாரியரும், அவர்பா லுபதேசம் பெற்ற மறைஞானசம்பந்தரும், அவர்பால் உபதேசம் பெற்ற உமாபதிசிவாசாரியரு மென்றின்னோர். வழி மரபு, சந்ததி, சந்தானம் என்பன ஒருபொருட்கிளவிகள்.

முதிர்ந்த மெய்ஞ்ஞானம்—நான்காம் சத்திநிபாதம். சத்திநிபாதம் நான்காவன:—மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என்பன. இவற்றுள் தீவிரதரமே நான்காஞ் சத்திநிபாதம் என்க. சத்திநிபாதம்-சத்தி பதிதல்; சத்தி வீழ்ச்சியுமாம். சத்தி-ஞானம். நிபாதம் - பதிதல். *“ அருளது சத்தியாகும்” † “ சத்திதன் வடிவேதென்னிற் றடையிலா ஞானமாகும் ” என்பதனுல், அது ஞானமா மாறுணர்க.

நிறைந்த வென்னுஞ் செயவெ னெச்சம் காரணப்பொருட்டு. நிறைதலால் நிகழ்ந்தநின்மலன் என்க. நின்மலன்-மலமில்லாதவன். நின்-இன்மை; நி என்பதும் அது. நிகழ்தல்-உண்டாதல், விளங்குதல். நிறைதலால் மல மின்றி நிகழ்ந்தவன் என விகுதி பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்ளுதலுமொன்று.

கமலை-திருவாரூர். கமலையாகிய இலக்குமியிருந்து தவஞ்செய்து வரம் பெற்றமையால் அது கமலை யெனப் பட்டது. கமலாலயம் கமலை என மரீஇயிற்று. ‘ ஆவீறையு ’ மென்றபடி கமலா கமலை யென்றாய தெனக்கோடல் ஈண்டுப் பொருந்தாமை யுற்றுநோக்குக. திருவாரூர் என்பதும் அக் காரணத்தா னெய்திய நாமமே.

இனி, வட மொழியில் மேன்மையை யுணர்த்தும் ஸ்ரீ என்னும் மொழி, முக்கியப் பொருட்பேர்களின்முன் புணர்த்தப்படுதல் போலத், தமிழில் திரு என்பது முக்கியப்பொருட் பேர்களின்முன் புணர்த்தப் பட்டு மேன்மையை யுணர்த்தி நிற்பதொரு மொழி யென்றலும் ஒன்று. திருக்கோவை, திருவாசகம், திருத்தலம், திருமுகம் என்று ஓதிக் கண்டு கொள்க. இப்பொருள் கொள்ளுங்கால் ஆரூர் என்பதற்கு அரிய தலம் எனவும், (வன்மீகநாதர் அறியப்படாத

* சித்தியார். சூ. ரு. செ-கூ. † ஷ-ஷ-க, செ-சஉ.

காலந் தொடங்கி) வீற்றிருக்குந் தலமெனவும் பொருள்கொள்க. ஆர்-அருமை. ஆர்தல் - இருத்தல். இப் பொருட்கு ஆரூர் வினைத்தொகை. வன்மீக நாதர் திருவாரூர் கோயிலாக் கொண்டு வீற்றிருந்தருளிய காலம் இதுவென்றறியப் படாமையை, "ஒருவனு யுலகேத்த நின்ற நாளோ வோருருவே மூவுருவ மான நாளோ, கருவனாய்க் காலனைமுன் காய்ந்த நாளோ காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ, மருவனாய் மண்ணும்விண்ணுந் தெரித்த நாளோ மான்மறிக்கை யேந்தியோர் மாதோர் பாகந், திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே" என்னும் அப்பர் தேவாரத்தா னறிக.

ஞானப் பிரகாசனாதற்கு நின்மலனாதல் காரணமாதலின், அதனை விளக்குதற்கு நின்மலன், ஞானப்பிரகாசன் என்றார். என்ற வொருவன் என்றொருவன் எனப் பெயரெச்சத் தகரம் தொக்கது, * "புகழ்புரிந் தில்" என்புழிப் போல. திருவடியே என்பதன்கண் ஏகாரம் பிரிநிலையோடு தழீஇய தேற்றம்.

வழிபாடு இடையறவு படாமை தெரிப்பார் தினமிறைஞ்சு மென்றார்.

இறைஞ்சுமெனக் காயத்தின் றொழில் கூறவே, வாக்கின் றொழிலாகிய வாழ்த்தும், மனத்தின் றொழிலாகிய நினைப்பும் இனம்பற்றிக் கொள்ளப்படும். என்னை? †"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதோத்தாகலான்.

தஞ்சாவூர் தஞ்சையென மரீஇயினாற்போலத் தருமபுரம் தருமையென மரீஇயிற்று. தேசிகன் ஈண்டு ஞான

* திருக்குறள், அதி. சு. செ. கூ.

† நன்னூல், பொதுவியல். சூ. எ.

குரு. *"எத்துணைய வாயினுங் கல்வி யிடனறிந் துய்த்துணர் வில்லெனி னில்லாகும்" என்றமையால் ஏற்புழிக் கோட லென்னு முத்திபற்றி யிப்பொருள் கொண்டாம். இறைஞ் சும் தேசிகன் என இயையும்.

உலகிருள் கெடத் தோன்றுங் கதிரென மனவிருள் கெ டப் பண்ணினன்; அணிபெற அறிதரப் பண்ணினன்; ஆடி யிற் பண்ணினன்; தொகையின் பாட்டின் பண்ணினன்; நெறி பண்ணினன் எனத் தனித்தனி கூட்டுக.

அலகிலர், ஆமெனத் துணிபொருள் காணத் துலங்கு மாடி என்க.

கல்வியும் வாய்மையும் நிலைமையும் என்னும் உம்மைகள் எண்ணின்கண் வந்தன.

தலைவனும் தோன்றலும் வேந்தனும் ஆகிய ஞானப்பிர காசன் என்ற ஒருவன் என்க.

தலைவன், தோன்றல், வேந்தன் என்பவற்றி னிடையே செவ்வெண்டொக்கு இறுதி ஒருபெயர் கொண்டு முடிந் தது.

ஞானப்பிரகாசன் திருவடியே தினமிறைஞ்சும் ஞான சம்பந்தன் இந்நூலைச் செய்தானென எழுவாயும் செயப்படு பொருளும் பயனிலையும் கண்டு கொள்க.

கருமை ஞானசம்பந்த னெனவே வாசஸ்தானந் தெரித்த வாறு.

இதன் தொகைப் பொருள் :—உலகிருட் கேட்டிற்கும் புவிப் பொருட் காட்சிக்கும் கதிர் இன்றியமையாச்சிறப் பிற்றாயவாறு நோக்கிக் காசினி மாந்தர், அது செய்நன்றி

---

*நீதிநெறிவிளக்கம், செ, ௫.

மறவாமல் அதனைப் புகழ்தல் போலச், சிலர் மன விருட் கேட்டிற்கும் சித்தாந்த முத்திப் பொருட் காட்சிக்கும் இந் நூல் இன்றியமையாச் சிறப்பிற்றாயவாறு நோக்கிப் பிறர் சிலர், இது செய்நன்றி மறவாமல் இதனைப் புகழ்வரென்ற வாறு.

இதுவுமது. கண்ணொளியோடு கதிரொளி கலவாதபோது கண்கூடாக வறியக்கூடிய பொருளை அங்ஙன மறிய வொட்டாது திரியக் கொண் டறியச்செய்துநிற்கு மிருளானது, அவ்வொளி கலந்துழிக் கழியுமன்றே! அது கழிந்த பின் அப் பொருளைக் கண்கூடாக அறிந்து பயன் கொள்ளு முலகினர், அந்நன்றி மறவாது அக்கதிரினைப் புகழ்வதுபோல, இந் நூலை யறியாத முன்னைப் பொழுதெல்லாம் சித்தாந்த முத்தி யல்லாத பிறிதொன்றைச் சித்தாந்தமுத்தியெனத் திரியக் கொண்டறியச் செய்து நிற்கும் மனத்திருளாகிய வஞ்ஞானமானது இந்நூலை யுணர்ந்துழிக் கழியு மன்றே! அது கழிந்தபின் சித்தாந்தமுத்தி யிதுவென அறிந்து பயன் கொள்ளும் பிறர்சிலர், அந்நன்றி மறவாது இந்நூலைப் புகழ் வரென்றவாறு.

ஞானசம்பந்தனெனவே ஆக்கியோன் பெயரும், முதனூனெறி யெனவே வழியும், வெண்பாட்டெனவே தமிழ் வழங்கும் நிலமே இந் நூல் வழங்கும் நிலமென வெல்லையும், முத்திநிச்சயம் எனவே நூற் பெயரும், சிவாநந்தமா மெனத் துணிபொருள் காண எனவே நுதலிய பொருளும், புறச்சமய நூலாராய்ச்சி யுடையார்க்கே அவற்றை யாராய் வுழி அவற்றின்க ணுளவாகிய முத்தி வேறுபாடுகளும் பயன் வேறுபாடுகளும் பலவாமாகலின் அவற்றுள் இதுதான் சிறந்த முத்தியும் பயனு மென்று துணியப்படாமையின் அவற் றைத்துணிந் தறியவேண்டி இந்நூல் கேட்டறிதலின்கண்ணே

ஊக்கஞ் செல்லுமாகலின், அவை ஆராய்ந்தபின் இது கேட்டற்பாற்று என்னும் யாப்பும், அவை ஆராய்ந்தோரே இது கேட்டற்குரியா ரென்னுங் கேட்போரும், அவர் இந்நூலை யுணர்ந்து இதுவே சித்தாந்தமுத்தி யென அறிதலாகிய பயனும், கண்கட்டி. மறைஞான பண்டாரமே ஆன்மாநந்த நெறியைப் படைத்திட்டு மேற்கொண்டு ஒழுகினோராகலான், அவரோடு வாதஞ்செய்து வென்று அவருட்கோளை மறுத்து இந்நூல் செய்யப்பட்டமையின் அவர் காலமே இந் நூல்செய்த காலமெனவும், அவரது களமே இந்நூலரங்கேற்றிய களமெனவும், அவர் உட்கோளை மறுத்தலும் யாவரிடத்துமிரக்கமுடைமையுமே காரணமெனவும் கண்டுகொள்க. இதற்கோத் தென்னையெனின், அது காட்டுதும்:—

* "ஆக்கியோன் பேர்வழியே யெல்லையாப் பந்நூற்பேர்
போக்கிடஞ்சொல் வோர்நுதலிற் றுயபயன்-தாக்கியவிவ்
வெட்டினெடுங் காலங் களங்கா ரணமியம்பப்
பட்டாலு மப்பெயரே பின்னு". எனவும்,

மற்றொன்று:—

† "பன்னிய நூற்பேர் பகர்ந்தோன்பேர் காரணமும்
துன்னும் பய‡னளவுஞ் சொல்லினும் - முன்னைச்
சிறப்பா மவற்றுட் சிலவேறி னாலும்
பெறப்படுமா முன்னைப் பெயர்" எனவும்,

மற்றொன்று;:—

§ "கண்ணிய தெய்வ மிறைஞ்சிக் கருதுநூல்
பண்ண வதிகாரம் பாரித்தல் - எண்ணும்
மதியோர் சிறப்பென்பர் வானவரை வாழ்த்தா
அதிகார முஞ்சிறப்பென் றுக்கு"எனவும் வருவனகாண்க.

---

* வெண்பாப்பாட்டியல், செ. - ௨௰. † ஷை - ஷை - ௨௧.
‡ அளவு = எல்லை. § ஷை பாட்டியல். செ - ௧௧.

" ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனே டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே."

" காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே"

" தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொருளும்
எய்த வுரைப்பது தற்சிறப் பாகும்."

இம்மூன்று சூத்திரங்களையும் மேலை மூன்று வெண்பாக் களுடன் ஒத்து நோக்குக.

ஞானப்பிரகாசன் திருவடியே தின மிறைஞ்சும் என்பத ஞல் தெய்வ வணக்கமும், முத்தி நிச்சயம் பண்ணினன் என் பதனுல் செயப்படுபொருளும் பெறப்படுதலால் இது தற்சிறப் புப் பாயிரமுமாம்.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முத்திநிச்சயச்சிற்றுரை.

## நூல்

சீர்மேவு மாரூர்ச் சிதம்பர நாதனெனும்
பேர்மேவு ஞானப் பிரகாசன்—தார்மேவு
சேவடிகள் போற்றித் திகழ்முத்தி நிச்சயமோன்
றுவதென மொழிவேன் யான்.

இதனால், தெய்வ வணக்கமுஞ் செயப்படுபொருளுங் கூறுகின்றார்; என்னை? நூன்முகத்துத் தெய்வ வணக்கஞ் செய்யாதொழியின், இயற்றுவானெடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி யினிது முடியாதாகலான், அது முடிதற் பொருட்டென்க.

இந்நூல் என்ன பெயர்த்தோவெனின், சித்தாந்தமுத்தி இதுவென நிச்சயித்துக் கூறுங்காரணத்தான் 'முத்திநிச்சயம்' என்னும் பெயர்த்து.

அங்ஙனம் நிச்சயிப்பது, மூலாகம வுபாகமங்களிற் கூறியவாறே அந்நூற் பொருள்பற்றித் தொல்லாசிரியர் வாய் மொழி துணையாகப் பின்னர் நிகழ்தலின், இம்முத்திநிச்சய மென்னு நூல் * வழிநூலாம்.

இங்ஙனம் நிகழ்தலின்,

† "இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்."

என்றதனானே சார்புநூலாம் பிறவெனின், அற்றன்று; வழிநூல் எனப்பட்ட வாய்மொழியும் முதனூற் பொருளின்றி நிகழாமையானும், அதுபோல விதுவும் அந்நூற்பொருள்வழி நிகழ்தலானும், இரண்டும் முதனூல்வழிநடத்தலின், இதுவும் வழிநூலேயாம்; ஆகலான், முதனூலொழிய, அதுபற்றிநடந்த நூல்கள் எத்துணையவாயினும், அவை யெல்லாம் வழிநூ லாயே யடங்குதலினென்க. சார்புநூல் புடைநூல் வழிநூல் என்பன ஒருபொருட்கிளவி யென்றே அறியற்பாலன; அங் ஙனம் அறியவே, எல்லா நூலும் முதனூல் வழிநூலென இரண் டேயா யடங்குதலின், பிறிதொரு பகுதியின்மையின் மூன்றும் பகுதிப்பட வழங்கும் சார்புநூலென்பது ஒன்றின்மையின், சார்புநூலென்றல் பொருந்தாதென்க என்பாரும், அங்ஙன

* வழிநூல்—"முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப்— பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி—அழியா மரபினது வழிநூ லாகும்" நன்னூல்—பொதுப்பாயிரம்—கூ-எ. † ஷை-ஷை-கூ-அ.

மாயின், *"மும்மையி னொன்றாய்" என வியனூற் சூத்திரத்தில் வரையறுத்தோத வேண்டா அங்ஙனம் ஓதுதலின், மூன்றாம் பகுதியாய சார்புநூலும் ஒன்றுள தென்பது நன்கு புலப் படலான், இது வழிநூலெனப்படாது புடைநூலே என்பா ரும், அது ஒக்குமன்றாயினும், "புடைநூல்" "இருவர் நூற் கு மொரு சிறை தொடங்கித் — திரிபுவேறுடைய" தாக லான் இஃது அங்ஙனமன்றி முதனூலை முழுவது மொத்த லான், எவ்வாற்றானும் புடைநூலாகாது வழிநூலேயாமென் பார்க்குத் திரிபின்றிக் கூறுமத்திறத்தான் முதனூலாகுக வெனின், ஆகாது; என்னை? முதனூல் வழிவந்தமையானும், முதனூலின் வேறுபடாத வாய்மொழியைத் துணைப்பற்றின மையானும், பொருண்மை திரியாமையானும், வழியுண்மை யும் ஒத்த பொருளுடைமையும் வெள்ளிடை மலைபோற் றெள்ளிதிற் புலப்படலான், இதுவழிநூலேயா மென்பதற்கு ஆசங்கை யென்னை? யென்றொழிவாரு முளர்.

† உபாகமங்கள் கடவுள் அருளாற் செய்யப்பட்டமை யின், அவையிற்றின்கண் ஆராய்ச்சி யில்லை யென்க.

இதன் பொருள். சீர் மேவும் ஆரூர்ச் சிதம்பரநாதன் என்னும் பேர்மேவும் ஞானப்பிரகாசன் தார்மேவுசேவடிகள் போற்றி—திருமகளுறையும் திருவாரூரில் அவதரித்தருளிய சிதம்பரநாதனென்னும் பிள்ளைத்திருநாமம் பெற்ற ஞானப் பிரகாச தேசிகரது பூந்தொடை சூழ்ந்துகிடக்கும் சிவந்த திரு வடிகளை வணங்கித் துதித்து,—திகழ் முத்திநிச்சயம் ஆவது என ஒன்று மொழிவேன்யான்—விளங்குகின்ற முத்திநிச்சய மாவது இதுதானென்று அறிஞர் கூறும்படி ஒரு நூலைச் சொல்லுவேன் யான் எ - று.

---

* நன்னூல்—பொதுப்பாயிரம்—சூ-௪. † உபாகமம்—ஆகமத் தை ஒத்த ஆகமம்: அவை:—நாரசிங்கம் முதல் விசுவான்மகம் ஈறா கிய இருநூற்றேழுமாம்.

இனி, சீர்மேவும் ஆரூர் என்பதற்கு, அருட்செல்வம் பொருட்செல்வம் புகழ் நன்மை என்னு மிவற்றைப் பொருந்திய ஆரூரென்றலுமாம்.

இன்னும் அழகும் விரும்பும் பேரழகினையுடைய திருவாரூரென்றும், சிறப்புடையனவென்று சிறப்பித்துச் சொல்லும் பொருள்களெல்லாவற்றுள்ளுஞ் சிறப்புடையது முத்தியாகலான், அது சீரெனப்பட்டதென்றுகொண்டு தன்மாட்டுத் தோன்றுவார்க்கு முத்தியளிக்குந் தலமென்றும் பொருள்கோடலும் பொருந்தும்.

சீர்—திருமகள் என்புழி ஆகுபெயர். *"அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்" என்றமையான் செல்வம் என்னும் பொதுப்பெயர் இரண்டுசெல்வத்தையும் உணர்த்துமாறு காண்க.

அருட்செல்வம்:—தியாகராசருடைய கருணை; அஃதன்றி ஆண்டுப் பிறந்தோர் சீவன்முத்தராகலின், அன்னார் பிறவுயிர்கண்மாட்டு வைக்குங் கருணையுங் கொள்ளப்படும்.

பொருட்செல்வம் :—நென் முதலிய தானியங்களும் இரத்தினம் பொன் வெள்ளி முதலியனவுமாம்.

புகழ் :—இருவகைச் செல்வங்களையும் ஒருங்குடைமையான், புத்தி முத்தி இரண்டையு மளித்தலினுளதாகிய சீர்த்தி; † "சீர்த்திமிகுபுகழ்" என்றார் தொல்காப்பியரும்; புகழ்—ஈண்டு மிகுபுகழ்மேற்று.

நன்மை :—புத்தி முத்தி யளித்தல்.

அழகும் விரும்பும் அழகாவது :—பேராலயமும், சிறுகோட்டங்களும், விபூதி தாரணமும், பத்தியும், பாடலும், ஆடலும், தேவர் முதலியோர் பூசித்த பல ஆலயங்களும்,

---

* திருக்குறள்—அதி—உ௫. செ-க.

† தொல்காப்பியம்—உரியியல். சூ-௩௧உ.

சங்கநாதமும், விதானமும், கொடியும், சிவார்ச்சனையும், ஆறும் முதலிய அழகிற்கு வேண்டும் உறுப்பெல்லாம் ஒருங்கு குழீஇ யிருக்குந் தோற்றப் பொலிவின் றிரு; திரு—கண்டோரால் விரும்பப்படுந்தன்மைநோக்கம்; என்றது அழகை. இக்கருத்துப் பற்றியன்றே,

* "திருக்கோயி லில்லாத திருவி லூருந்
திருவெண்ணீ றணியாத திருவி லூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும்
பாங்கினொடு பலதளிக ளில்லா வூரும்
விருப்போடு வெண்சங்க மூதா வூரும்
விதானமும் வெண்கொடியு மில்லா வூரும்
அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா வூரு
மவையெல்லா மூரல்ல வடவி காடே."

† "நிலவெண் சங்கும் பறையு மார்ப்ப நிற்கில்லாப்
பலரு மிட்ட கல்ல வடங்கள் பரந்தெங்கும்
கலவ மஞ்ஞை காரென் றெண்ணிக் களித்துவந்
தலம ராரூ ராதிரை நாளா லதுவண்ணம்."

‡ "பாரூர் பௌவத் தானைப் பத்தர் பணிந்தேத்தச்
சீரூர் பாட லாட லறாத செம்மாப்பார்ந்
தோரூ ரொழியா துலக மெங்கு மெடுத்தேத்தும்
ஆரூ ரன்ற னாதிரை நாளா லதுவண்ணம்."

†† "சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு."

‡‡ "நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா வுண்டிபாழ்
ஆறில்லா வூருக் கழகுபாழ்."

என்றற் றொடக்கத்த திருட்டாந்தங்கள் எழுந்தன வென்க.

---

* ௬-ம்-திருமுறை—பொது. தனித்திருத்தாண்டகம். செ-௫. † திருவாரூர்—௪-ம்-திருமுறை—பண்-குறிஞ்சி. செ-௫. ‡ ஷை-ஷை-ஷை-செ-௧௦. †† திருவாலவாய்த்திருநீற்றுப்பதிகம். செ-௧. ‡‡ ஔவையார் அருளிச்செய்த நல்வழி. செ-௨௪.

மேவு :—விருப்பம்; * "நம்புமேவு நசையாகும்மே" என்னும் ஒத்தா னுணர்க.

சிதம்பரநாதனெனும் ஞானப்பிரகாசன் என இயைத்துப் பேர்மேவும் என்பதை அவற் கடையாக்கிக் கீர்த்தி தானே வந்தடையப் பெற்ற ஞானப்பிரகாசன் என்றலு மொக்கும்.

ஆரூர்ச் சிதம்பரநாதன் எனவே சீவன்முத்தர் என்பது பெற்றும்; என்னை? அது † பிறக்கமுத்திதரும் தலமாக லான். அக்கருத்துப்பற்றியன்றே! வன்மீகநாதர், தமது திருவுலாச் சிறப்பினைச் சேவிக்கப்போந்து தீண்டத் தகாதாரைத் தீண்டினமையின், ஆசௌச முண்டாயிற்றெனக் கருதி வீட்டின் புறத்தே துயின்ற தம் ‡ மடியாருக்குச் சொப்பனத்திற்றோன்றித் ††"திருவாரூர்ப் பிறந்தார்களெல்லாரும் உருத்திர கணங்களென" அருளிச்செய்ததூஉம், அவ்வாறே அந்நாயனாரும் அவரை யுருத்திரகணங்களாகக் காணப்பெற்றதூஉமென்க. உருத்திரகணம் :—சிவசாரூபம் பெற்ற குழுவினர்; அன்றிச் சிவவேடம் தரித்த அடியார் குழாமுமாம்; ஏற்பது

* தொல்காப்பியம்—உரியியல். சூ-௩உ௧. †திருவாரூர், பிறக்க முத்திதரும் தலம் என்பதை, "பிறந்தில மாரூர் தன்னிற் பேசிய காசி மேவி—இறந்தில மிரண்டு முத்தி யின்பமும் பின்ப தாநாம்—உறைந்திடுந் தில்லை ஞான யோகமார் தானமாமால்—செறிந்தடி காணச் சீவன் முத்தராய்த் திரிய லாமே" என்னும் கோயிற் புராணத்தானறிக. இரணிய வன்மச்சருக்கம்-செ-௬அ. ‡ அடியார், நமிநந்தியடிகணுயனார். †† திருவாரூரிற் பிறந்தார் உருத்திரகணங்களென்பதை, "ஞான மறையோ 'ராரூரிற் பிறந்தா ரெல்லா நங்கணங்க—ளான பரிசு காண்பாயென் றருளிச் செய்தங் கெதிரகன்றார்" என்னும் பெரிய புராணத் திருவிருத்தத்தா னறிக. நமிநந்தியடிகணுயனார் புராணம். செ-உ௭.

கொள்க. * "உறவாவாருருத்திரபல் கணத்தினோர்கள்" எனவும் †"உருத்திரபல் கணத்தார்க்—கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்" எனவும் ‡"உருத்திரனென்னு நாமமொர்ப்பிலாவரற்குமன்னோன் — றரத்தகு சிறார்களானோர் தங்கட்குமனையன்பாதங்—கருத்திடையுன்னிபோற்றுங்கணங் கட்குமவன்றன்மேனி—பரித்திடுவோர்க்குஞ் செந்தீப்பண்ண வன்றனக்குமாமால்" எனவும் வரும் பிரமாணங்களால் உருத்திரர் என்பது சிவனடியாருக்கும் பெயராமாறு கண்டு கொள்க.

அம்முத்திதான், பாசநீக்கமுஞ் சிவத்துவப்பேறுமென இருவகைப் படுதலின், பின்னையதாகிய சிவத்துவப்பேறும் உடன்பெற்றமை தெரிப்பார், ஞானாகாசவடிவினனென்னும் பொருள் பயக்கும் சிதம்பரநாதனென்ற வளவினமையாது, ஞானப்பிரகாச னென்னும் பெயரையு முடன் புணர்த்தி ஆயன் சாத்த னென்றாற்போல இருபெயரொட்டுப் பண்புத் தொகை யாக்கி ஞானம் பிரகாசித்துச் சிவத்துவப்பேறெய் தினமையை நன்கு விளக்கினார்.

ஞானம்-சிவஞானம் ; அதுவே சிவனுருவம். அதனை,

††"உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருள ரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு டனக்கொன் றின்றி
அருளுரு வுயிருக் கென்றே யாக்கின னசிந்த னன்றே."

---

* தேவாரம்—பொது — திருமறுமாற்றத் திருத்தாண்டகம். செ-௪. † தேவாரம்—திருமயிலாப்பூர்—பூம்பாவைத் திருப்பதிகம். செ-க. ‡ கந்தபுராணம்—ததீசிப்படலம். செ-௪ரு. ††சித்தியார்— சுபக்கம்—க-ம்-கூ. செ-௪எ.

*"ஞானந் தானுரு வாகிய நாயக னியல்பை
யானு நீயுமா யிசைத்துமென் ருலஃதெளிதோ
மோனந் தீர்கலா முனிவருந் தேற்றிலர் முழுதுந்
தானுங் காண்கில னின்னமுந் தன்பெருந் தலைமை."

என வரும் பிரமாணங்களா னறிக.

சிவஞானம், பதிஞானம், திருவடிஞானம், மெய்ஞ்ஞானம், மெய்யுணர்வு, உண்மைஞானம், சத்தி, அருள் என்பன ஒருபொருட்கிளவிகள். சத்தியும் அருளும் பாயிரத்துட் கூறப்பட்டனவாயினும், ஈண்டும் இனத்துடன் வைத்தெண்ணி ஞாபக முறுத்தவாறு.

இனி, 'முத்திநிச்சய மொன்ருவதென மொழிவேன்' என்பதற்கு முத்திநிச்சயம் என்னும் ஒரு நூலை அறிஞர் இது தக்கதென்று கூறும்படி சொல்லுவேன் என்றலு மொன்று. ஆவது என்னும் ஆக்கம் தகுதிப்பா டுணர்த்திற்று. ஒன்று—ஒருநூல்; ஆகுபெயர்.

இன்னும், முத்திநிச்சயம் அது ஆ ஒன்று என மொழிவன் என்று இயைத்து முத்திநிச்சயமாகிய அந்நூல் ஆ! ஒப்பற்றது என்று புறமதத்தரும் சொல்லும்படி மொழிவன் என்றலு மொன்று.

பிறர் கூற்ருக வைத்துக் கூறலின், அதுவெனப் படர்க்கையாகச் சுட்டினர். ஆ-வியப்பின்கட் குறிப்பு. அதனை-ஆ, ஆ-என இரட்டித்துக் கொள்க.

இன்னும், ஒன்ருவது என்பதை முதலாவது எனக் கொண்டு, எல்லா நூல்கட்கும் முதற்கண் வைத்தெண்ணத் தக்கதென்று கூறும்படி என்னலும் இயையும்.

---

*கந்தபுராணம்—மகேந்திர காண்டம்—சூரனமைச்சியற்படலம். செ-கஉஅ.

அடியார் அல்லும் பகலும் அர்ச்சித்தலின் இடையறவு படாது மாலே சூழ்ந்து கிடக்கும் அடியென்பார் 'தார்மேவு சேவடி' யென்ருர். மேவு என்பது மேம்பாட்டிற்கும் பெயராகலான், தார்மேவு என்பதை உம்மைத் தொகையாகக் கொண்டு தாரும் மேம்பாடும் பொருந்திய அடி என்றலுமாம். அடிக்கு மேம்பாடு, அடைந்தாரைப் பின்னு முன்போற் பிறவிக் கடலுள் வீழாது காத்தலா லுண்டாகும் மேன்மை.

சேவடி என்பதில் சே பண்புமாத்திரையாகக் குறைந்த சொல்லாகலின் *மருவின் பாத்தியாய் நின்றது. சேவடி இரண்டாம் வேற்றுமைப் பொருளின் வருதலின் †"ளகார விறுதி ணகார வியற்றே" என்னும் பொது விதியெய்தாது, ‡"மெய்பிறிதாகிடத் தியற்கையாதலும்" என்ற சிறப்பு விதியெய்திற்று.

அடியார் மெத்தெனவருடலின், அதுவும் பொருது சிவந்த அடியென்பார் சேவடியென்ருர். சிவஞானிகள் சிவத்தோ டத்துவிதமாகச் சேர்ந்தவராகலான், சேவில் ஏறும் அடியென்றலுமொன்று. சே. இடபம்.

போற்றல், வணங்கலும் துதித்தலுமாகிய இருபொருள் பயக்குமொரு சொல். பலபொரு ளொருசொல்லுக்கு இவ்வாறு பொருள்கோடல் ஒருசார் உரையாசிரியர் வழக்கு. அதனைத் ††தக்கயாகப்பரணி உரையுட் காண்க.

ஏனைத் தத்துவமுத்தி முதலியன வெல்லாம் தத்தங் காலவெல்லையின் ஒடுங்கி விளக்கங்குன்ற இது என்று மழியாது ஒருபெற்றித்தாய் விளக்கமுறும் முத்தியென்பார் திகழ்முத்தி என்ருர்.

---

*மருவின்பாத்தி—மரூஉமுடிபின்பகுதி. † தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—புள்ளிமயங்கியல். சூ-௩௧௯. ‡ ஷை-ஷை—தொகைமரபு சூ-கடுஎ. ††தக்கயாகப்பரணி.

சேவடிபோற்றி என்றதனுல் தெய்வவணக்கமும், முத்தி நிச்சய மொழிவேன் என்றதனுல் செயப்படு பொருளும் போந்தவாறு காண்க.

பாயிரத்துட் கூறிய அவ்விரண்டனேயும் ஈண்டுங் கூறுதல் *"கூறியது கூறல்" என்னுங் குற்றம் பற்றுமாலெனின், பற்ருது; என்னே? பாயிரம் பின்னரும் பனுவல் முன்னரும் செய்யப்பட்டமையின், பனுவலுட் கூறியவற்றையே பாயிரஞ் செய்தாரும் அதனுட் கூறினரென்பது தெரியக்கிடத்தலின், அது நூற்குப் புறம்பாகலா னென்றுணர்க.

அங்ஙனமாயின், அக்குற்றமதனேப் பற்றுமெனின், அதனேயும் பற்ருது. எங்ஙனமெனிற கூறுதும்:—

† "பாயிரமில்லது பனுவலன்றே" என்பவாகலின், பாயிரம் பனுவலின் ஒரு கூருகிய உறுப்பாய் அதனுளடங்குதலின், அக்குற்றம் பற்றுமென்ப தொக்குமாயினும், பாயிரஞ் செய்தார், பனுவலாசிரியர் குருவையே சிவனெனக்கண்டு வழிபடும் பத்திமையின் மிக்குப் பயன்பெற்றமை பிறாறியின் அவர்தாமு மவ்வாறு செய்து பயன்பெறுவாராகலான், அதனேத்தாம் யாவர்க்கு நன்கு விளக்கக் கருதியும், நூனுதல் பொருளேத் தன்னகத்தடக்கல் சிறப்புப்பாயிரத் திலக்கணமாகலான், அதுபற்றி அதனுள் அதனே அடக்கக் கருதியும் அவற்றை ‡ வழி மொழிந்தமையின் அநுவாதமாய் நிற்றலான், அதனேயும் அது பற்ருமை இதனுனறிக.

---

* நன்னூல்—பொதுப் பாயிரம்-சூ-கஉ. † ஷை -ஷை-சூ-டுச.

‡ வழிமொழித லெனினும் அநுவதித்த லெனினுமொக்கும். அநுவாதமாவது முன்னர்ப் பெறப்பட்ட தொன்றனே வேமுென்று விதித்தற்பொருட்டுப் பின்னரு மெடுத்தோதுதல். அதனுல் அது கூறியது கூறலென்னுங் குற்றமாகாது வழிமொழித லென்ருயிற்று.

இனிப் *"புறவுரை" என்பதும் பாயிரத்திற் கோர் பெயராதல் பற்றி, நூலினுள் சீர்மேவும் என மங்கலமொழி முதலாகக் கூறியிருப்பவும் அப்பாயிரத்தை வேறுவைத்தெண்ணி †"மலர்தலையுலகு" எனப் பாயிரமுகத்தும் மங்கலமொழி வைத்துக் கூறினாற்போல, இங்கும் பாயிரத்தை வேறாகக்கருதித் தெய்வவணக்கமுஞ் செயப்படு பொருளுங் கூறினார் என்றலுமாம்; அதுபற்றியும் அக்குற்றம் அதனைப் பற்றாமை அறிக.

அவ்வணக்கந்தான், எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக்கடவுளை வணங்குதலும், வழிபடு கடவுளை வணங்குதலும் என விருவகைப்படும். அவற்றுள் இது எவ்வணக்கமெனின், இரண்டிற்கும் பொதுவணக்கமென்றறிக. என்னை? இவ் வாசிரியர் கூறுஞ் சித்தாந்த முத்தியாகிய சிவானந்தாநுபவத்தோடு அதனை யநுபவிக்குங் குரவர்க்கியைபுண்மையானும், குரவரே வழிபடு கடவுளாகலானு மென்றுணர்க.

குரவர் வணக்கத்தைக் கடவுள் வணக்க மென்றல் பொருந்து மாறெங்ஙன மெனின், விளங்கக் கூறுதும்:—

‡"அறிவரியான் றனையறிய வாக்கை யாக்கி
யங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத் தருளாற்
செறிதலினாற் றிருவேடஞ் சிவனுருவே யாகுஞ்
சிவோகம்பா விக்குமத்தாற் சிவனு மாவர்
குறியதனு லிதயத்தே யரனைக் கூடுங்
கொள்கையினா லரனவர் குறியொடுதா மழியு
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்றா
னேசத்தாற் றொழுதிடுநீ பாசத்தார் விடவே".

---

* நன்னூல்—பொதுப்பாயிரம்—சூ-க. † ஷை-சிறப்புப்பாயிரம்.
‡ சிவஞானசித்தியார்—சுபக்கம்—சூ-கஉ. செ-ரு.

* "பரம்பிரம மிவனென்றும் பரசிவன்ரு னென்றும்
பரஞான மிவனென்றும் பராபரன்ரு னென்றும்
அரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனே யென்று
மருட்குருவை வழிபடவே யவனிவன்ரு னுயே
இரங்கியவா ரணம்யாமை மீனண்டஞ் சினையை
யியல்பி னுடும் பரிசித்து நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமாபோற் சிவமே யாக்கும்
புரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே."

என்னுஞ் சித்திப்பிரமாணங்களாற் குரவர் கடவுளாமா றுணர்ந்து கடைப்பிடிக்க.

இப்பிரமாணங்களாற் குரவர் சிவமாதலைக் கரதலா மலகம் போற் கண்டாம்; ஆயினும், எடுத்துக்கொண்ட நூல் இனிது முடிதற் பொருட்டு, விக்கினேசுரவணக்கம் நூன்முகத்துச் செய்யும் ஆன்ரோராசாரம் பற்ருது அவர்க்கு மாறுபட்டுச் சிவவணக்கஞ் செய்யில் † "தொடர்கின்ற விடுக்கண்வெற் புத் துகள்படத் துளைக்குமேலோன் - அடர்கின்ற வதற்கு நாத ஞகிய வைங்கைமுக்கட் - படர்வென்றிப் பகவன்" இந் நூலினிது முடியாமல் விக்கினஞ் செய்வனன்ரே! அது செய்யாமைப் பொருட்டு அவன் வணக்கஞ் செய்ய வேண் டாவோ வெனின், நன்றே விஞயினீர்! நன்றே கூறுதும்.

‡ "அரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனேயென்று மருட் குருவை வழிபடவே" என்றதனுல், சிவபிரான் அடியார் பொருட்டுக்கொண்ட மூர்த்தம் பலவற்றுள்ளும் விக்கினேசுர மூர்த்தமும் ஒன்றென்பது போதரலான், அவரும் வணங்கப் பட்டவரேயாவர்; ஆகலான் இந்நூல் இடையூறடையா தினி து முடியுமென்றுணர்க.

---

*சிவஞான சித்தியார்—சுபக்கம்—சூ-கஉ. செ-எ. †சேதுபுராணம் —காப்பு. செ-உ. ‡ சிவஞான சித்தியார்—சுபக்கம்— சூ-கஉ. செ-எ.

இனி, விக்கினேசுரமூர்த்தம் சிவபிரான் ஒரு காரணம் பற்றி அடியார் பொருட்டுக் கொண்ட மூர்த்தமாகலின் அவர் தம்முள் வேற்றுமை யின்மையின், சிவவணக்கமென்றுங் கொள்ளுதல் இழுக்காகாதென்க. இக் கருத்துப்பற்றியன்றே சிவஞானபோதத்துள், * "கல்லாலினிழன்மலை — வில்லாரரு ளிய—பொல்லாரிணைமலர்—நல்லார் புனைவரே" என்றோதிய தூஉமென்க. இப்பொருள் கொள்ளுங்கால், அருளிய வென்பது செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம் †"உண்ணிய புகிலவை" என்றாற் போல. இன்னும் தொண்டர் சீர்பரவுவாருக்கு ‡"உலகெலாமுணர்ந்தோதற் கரியவன்" என நடராச மூர்த்தி அடியெடுத்துக் கொடுத்ததூஉ மக்கருத்தானே யென்பதும் உற்று நோக்குக.

இச்செய்யுள், இரண்டு வினை கொண்டு முற்றுப்பெற்றமையான், இந்நூல் இருவகை வாதிகளை மறுப்பதென்பதூஉம், ஒரு வினை, எச்சமும் மற்றொன்று முற்றுமாயிருத்தலின், என்றுமுள்ள சித்தாந்த முத்தி மறுத்தொழிக்கப்படாது எஞ்ஞான்றும் எஞ்சிநிற்க, ஏனையிரண்டும் மறுத்தொழிக்கப்பட்டு முடிவு பெறுமென்பதூஉம் குறிப்பாற் பெறப்படும்.

இங்ஙனம் நூனுதல் பொருளைக் குறிப்பாற் றன்னகத்தடக்கிநிற்றல் மங்கலவாழ்த்துக் கிலக்கண மென்றுணர்க.

இது "தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொருளு மெய்தவுரைத்த" லின் தற்சிறப்புப்பாயிரமாயும், நூனுதல்

---

*சிவஞானபோதம்—மங்கலவாழ்த்து. †திருநாவுக்கரசு நாயனர் தேவாரம்—பொது—நமச்சிவாயத் திருப்பதிகம். செ-ரு. ‡ பெரிய புராணம்-பாயிரம் செ-க.

பொருளைத் தன்னகத்தடக்கலான் மங்கல வாழ்த்தாயு நிற்றல் பகுத்துணாற்பாலது.

## BLISS ASCERTAINED.

1. Adoring the rosy feet adorned with wreaths, of famous Chidambaranatha Jnanaprakasa of prosperous Arur, I shall proceed with this word Mukti Nischayam declaring that it is the Holy union.

---

உ. சந்தான நற்குரவர் தக்கோர் பிறர்சமயம்
நந்தாது தோற்றுவித்த நற்குரவர்—முந்தவே
எந்தமுத்தி சித்தாந்த மென்றார்கள் சைவத்தில்
அந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம்.

இதனால், முன்னர் முத்திநிச்சயம் பண்ணுவோமென்றவர், அது பிரமாண பூர்வமாயிருத்தலின், பிரமாண நிச்சயம் பண்ணுவான் தொடங்கி, அதற்குரிய பிரமாணம் பலவற்றுள்ளும் பிறர் பெரும்பான்மையும் ஆகமப்பிரமாணமே யுட்கொண்டு கூறுவராகலின், அதனியல்பு தோன்ற வெடுத்தோதாக்கால், பொருள் * கொள்வழி மாறுபடுமன்றே, அது நிகழாவண்ணம் வரையறை கூற வேண்டுமாகலான், தாம் மேற்கொண்ட ஆகமப்பிரமாணங்களை எடுத்தோதி அவற்றின் வழியே முத்திநிச்சயம் பண்ணுவோமென்கின்றார்.

இ-ள். சந்தான நற்குரவர் தக்கோர் பிறர்சமயம் நந்தாது தோற்றுவித்த நற்குரவர் (தக்கோர்)-இருவகைச்சந்தானத்து நல்லகுரவராகிய தகுதிப்பாட்டினையுடைய திருநந்திதேவர்முதலிய எழுவரும் புறச்சமயம் விருத்தியாகாமற் சைவசமயத்தை

---

* கொள்வழி என்பதை, கோள்வழி என்றும் பாடங்கொள்ளலாம்.

விளக்கி விருத்தி செய்த தகுதிப்பாட்டினையுடைய திருஞான சம்பந்தர் முதலிய நால்வரும்,—முந்தவே சைவத்தில் சித்தாந்தம் எந்த முத்தி என்றார்கள் —முன்னாளிலேதானே சிவாகமத்திற் கூறுஞ் சித்தாந்தமுத்தி எந்த முத்தியென்று சொன்னார்களோ,—அந்த முத்தி யாம் நிச்சயிப்பாம்—அந்தச் சிவாநுபவமாகிய சித்தாந்த முத்தியையே யாமும் நிச்சயித்துக் கூறுவாம். எ-று.

இருவகைச் சந்தானம் இவை யென்பதூஉம் அச்சந்தானகுரவர் இவரென்பதூஉம் பாயிரத்துட் கூறினும் ஆண்டுக் காண்க.

சந்தான முதற்குரவராகிய நந்தியெம்பெருமான், சீகண்ட வுருத்திரக் கடவுள்பான் முன்னர்ச் சித்தாந் தோபதேசம் பெற்றுப் பின்னர்த் தமது மாணாக்கர்க்குத் தாம் உபதேசித்தும், அவர் பரம்பரையின் வைத்து அவரைக்கொண்டு உபதேசிப்பித்தும் உலகினர்க்கு நன்மை பயந்தமையின், அச்சந்தானத்தவரை நற்குரவரென்றும், முதலாசிரியர் உபதேசித்த வண்ணமே உபதேசித்தமையின் தக்கோர் என்றும் கூறினார். இதனாற்பிறழ உபதேசிப்பாரும் உளர் எனவுணர்க. அவர் தக்கோராகாரென்க. பிறழக் கூறுதலைப் * பட்டாசாரியன் † பிரபாகரன் முதலியோரில் வைத்துக் காண்க.

---

* பட்டாசாரியன், கன்மமே பயன் கொடுக்கும் என்றும் முத்தியில் நையாயிகர் போல ஆனந்த முண்டு என்றுங் கொள்வன். †பிரபாகரன், கன்மநாசத்தில அபூருவம் என ஒன்று தோன்றி நின்று பயன் கொடுக்கு மென்றும் வைசேடிகர் போலப் பாடாணம் போற் கிடப்பதே முத்தி யென்றுங் கூறுவன்; பொருட்டன்மைகளினுஞ் சிறுபான்மை பட்டாசாரியனில் வேறுபடக் கூறுவன். பிரபாகரமதம் எனினுங் குருமதம் எனினும் ஒக்கும்.

ஆன்மாக்கள் சோபான முறையிற் சைவசமயத்தைத் தலைப்பட்டுச் "சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் *ஞானத்தாற் சிவனடியைச் சேர்" தலாகிய சித்தாந்த முத்தியடைதற் பொருட்டுப் புறச்சமயங்களெல்லாஞ் சிவபிரானால் தூலசூக்கும முறையின் வைத்து முதனூலுட் கூறியருளப் பட்டமையின், அவற்றையும் பயன் கருதி ஆங்காங் குளவாக விடுத்து, அவற்றாற் குன்றிய சைவசமயத்தை யாவரும் முடிந்தபெரும் பேறடைவான் கருதி விளக்கஞ் செய்தார் என்பார் பிறர் சமயம் நந்தாது தோற்றுவித்த நற்குரவ ரென்றும், தமது முதல்வராகிய சீகண்ட வுருத்திரக் கடவுள் திருவுளத்திற் கேற்பச் சைவத்தைத் தோற்று வித்தமையின் தக்கோர் என்றுங் கூறினார். தக்கோர் என்பதை இடைநிலைத் தீபகமாக வைத்தோதிய தூஉ மிப்பொருள் பயத்தற்கென்றே கடைப்பிடிக்க.

நந்தாது தோற்றுவித்தல்—புறச்சமயங்கள் துவரக் கெட்டொழியாமல் அவையு முளவாகச் சைவ சமயத்தை வெளிப்படுத்துதல். நந்தல்—இங்கே கேடு. அது "நந்தல் கேடுடனே யாக்கம்" என்பதனாலறிக.

---

* ஞானத்தாற் சிவனடியைச் சேரவேண்டும் என்பதை,

"ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண
நல்லவா கமஞ்சொல்ல வல்லவா மென்னு
மூனத்தா ரென்கடவ ரஞ்ஞா னத்தா
லுறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தா
ஞனத்தா லதுபோவ தலர்கதிர்முன் னிருள்போ
லஞ்ஞானம் விடப்பந்த மறுமுத்தி யாகு
மீனத்தார் ஞானங்க ளல்லா ஞான
மிறைவனடி ஞானமே ஞான மென்பர்".

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தா னுணர்க. சிவஞான சித்தியார் சுபக்கம்: சூ-அ, செ-உஎ.

பிறர்சமய நந்தாது தோற்றுவித்த நற்குரவராவார்; திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரையரும் சுந்தரரும் மணிவாசகரு மென்றின்னோர். இங்கே பிறர் சமயம் என்றது சமண பௌத்த முதலிய சமயங்களை. என்னை? இவர்கள் காலத்தில் மிக்கிருந்தன அவையே ஆகலான்.

பிறர் சமயம் நந்தாது தோற்றுவித்த என்பதற்குப் புறச் சமயிகளால் சைவசமயங் குன்றாமல் என்பைப் பெண்ணாகத் தோற்றுவித்த என்றும், நீற்றறை முதலியவற்றால் இறவாமற் றம்மை யாவர்க்குந் தோற்றுவித்த என்றும், முதலை வாயி னின்று பிராமணப் பிள்ளையைத் தோற்றுவித்த என்றும், ஊமைப்பெண் வாயினின்றுஞ் சொல்லைத் தோற்றுவித்த என் றும் ஒரு பொருள் கொள்க. பிறர் சமயத்தால் சைவசமயம் கெடாமல் என்றலு மொன்று.

தோற்றுவித்தல். முன்னையது உண்டாக்கல்; அதன்பின் னையது காட்டுதல்; அதன் பின்னது உமிழ்வித்தல்; மற்றை யது வெளிப்படச் செய்தல்.

புறச் சமயங்கள் சிவபெருமானுற் சோபான முறையா கக் கூறப்பட்டன என்பது தெரித்தற் கன்றே!

* "புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலு மாச்சிரம
அறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்."

---

* சிவஞான சித்தியார், சுபக்கம், அ-ம்-சூ-செ-கக.

* " அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக் கையினு
லளப்பரிதா மப்பொருளை யரனருளா லணுக்கள்
தருவர்கள்பின் றனித்தனியே தாமறிந்த வளவிற்
றர்க்கமொடுத் தரங்களினுற் சமயஞ்சா தித்து
மிருதிபுரா ணங்கலைகண் மற்று மெல்லா
மெய்ந்நூலின் வழிபுடையா மங்கம்வே தாங்கஞ்
சுருதிசிவா கமமொழியச் சொல்லுவதொன் றில்லை
சொல்லுவார் தமக்கறையோ சொல்லொ ணுதே."

† " துணைநன் மலர்தூய்த் தொழுந்தொண் டர்கள்சொல்லீர்
பணைமென் முலைப்பார்ப் பதியோ டுடனுகி
இணையி லிரும்பூளை யிடங்கொண்ட வீசன்
அணைவில் சமண்சாக் கியமாக் கியவாறே."

‡ " விரிவிலா வறிவினர்கள் வேறொரு சமயஞ்செய்து
எரிவினுற் சொன்னுரேனு மெம்பிராற் கேற்றதாகும் "

§ " தத்தஞ்சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன வாகம நூனெறி
எத்தண் டமுஞ்செயு மம்மையி லிம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே."

என்றற் றொடக்கத்த சுருதிகளும் எழுந்தனவென் றோர்க.

---

*சிவஞானசித்தியார், சுபக்கம்,—சூ-அ. செ. கசு. †தேவாரம் திருவிரும்பூளை வினுவுரைபண்-இந்தளம்-செ-கO. ‡தேவாரம் திருப்பெரு வேளூர் திருநேரிசை செ - கூ. § திருமந்திரம் இராசதோடம் செ.கO.

" தொன்னூற் பரசமயந் தோறு மதுவதுவே
நன்னூ லெனத் தெரிந்து நாட்டுவித்து "

—கந்தர் கலிவெண்பா செ-கஅ.

" தோல்வியும் வெற்றியுந் தொன்மதங் கட்கெலாங்
காலபே தத்தினுண் டுந்தீபற
கருத்தன் செயலதென் றுந்தீபற."

—அவிரோத வுந்தியார் செ-உஎ.

" வாதிக டங்களுக் கல்லான் மதங்களுக்
கோதார் வலியின்மை யுந்தீபற." —ஷை செ. உஅ.

இவைகள் மேலைச் செய்யுள்களோடு ஒத்து நோக்கற்பாலன.

இன்னும் "வளவர் கோன்பாவை" யும் "மந்திரி குலச்சிறை"யாரும் அருகசமயத்தை நிராகரித்துச் சைவசமயத்தை ஸ்தாபிக்குமாறு வேண்டிய காலத்துப் பிள்ளையார் அதற்கு உடன்பாடு உடன் கூறி, ஆலவாயழனிறக் கடவுள் சந்நிதிப்புக்கு * "வேதவேள்வியைநிந்தனைசெய்துழ — லாதமில்லி யமணொடுதேரரை — வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே' என வினவி விடை பெற்றுச்சென்று வென்றி கொண்டமையும் மதங்கள் சிவபிரானாற் சோபான முறையாக உண்டாக்கப்பட்டமையை நன்குணர்த்தும்.

அழித்தல்—அவ்விடத் தப்போழ்தில்லையாகச் செய்தல்; என்னை? சோபான முறைக்கண் சிவபிரான் உண்டாக்கியபடியால் பொன்றக் கெடுத்தல் சாலாதாகலான். அது, மதுரையில் சமணசமயம் ஒழிந்தகாலத்தும், மற்றைய இடங்களில் அவர்களிருந்தமை பிள்ளையார் என்பைப் பெண்ணாக்கிய காலத்துப் பல சமண புத்த சமயத்தாரும் மயிலாபுரிக்கண் வந்து பார்த்து அதிசயித்தேகினர் என்று மாபுராணங் கூறுமாற்றானுமறிக.

வென்றழித்தல் ஒருசொல் விழுக்காடாய் வெல்லுதலுமாம். அஃதங்ஙனமாயின், திருத்தெளிச்சேரியில் புத்தர்களோடு சிவாஞ்ஞையின்றி வாதுசெய்யத் தொடங்கினமைக்குக் காரணம் என்னையெனின், புறமதத்தர் சைவத்தை மறுக்கப் புகின், புறமதத்தை நிராகரித்துச் சைவத்தை ஸ்தாபிக்க வல்லார் அது செய்யாதொழியின், மகாபாதகராய் நரகத்தையடைவர் என்றும், அவர் நட்பை உண்மைச்சைவர் ஒழித்துவிடல் வேண்டுமென்றும் சிவபிரான் ஆகமத்துட் கூறியருளினமையே என்றுணர்க. அதனால் வலிந்து வாதுசெய்யவந்த

---

*திருவாலவாய்த் தேவாரம்—நாலடிமேல்வைப்பு. செ-க.

பௌத்தரோடு அது செய்யத்தொடங்கினமை குற்றமாகாது. அதனை,

*"நிறுத்திடவல் லானமல னூனெறியை யென்றும்
மறுத்திடவல் லானவல மார்க்கமய லுற்றே
நிறுத்திலன் மறுத்தில னெனிற்கரிச னேசம்
அறுத்தவனே மாகைகரி சல்லவற மாமே."

என்னுஞ் சிவதருமோத்தரச் செய்யுளானறிக.

மாணிக்கவாசகசுவாமிகள் பௌத்தரோடு வாதுசெய்தமையும் சிவாஞ்ஞையும் அவர் வலிந்து வாது செய்ய வந்தமையும்பற்றி நிகழ்ந்ததென்பது †மணிவாசக முதலியவற்றுட் காண்க.

---

*சிவதருமோத்தரம்—சிவஞானயோகவியல். செ-௧௨௨.

இதனோடு, (அபியுக்தர் கூறிய)

"நிகரறுநற் சிவதரும சிவஞா னத்தை
நிறுத்திடுவோ னிலுமுயர்ந்தோ னிலத்தி னில்லை
பகர்பரம சிவயோகி யவனே யாகும்
பரிவினிறுத் திடுமாற்றல் படைத்து முய்தி
அகலுமய லானிறுத்தா தொழிந்தோன் யோகி
யாயினுமீ சுரப்பிரிய னல்ல னன்றோன்
புகருறுதீ நரகினிடை வீழ்ந்து புன்கண்
பொருந்திடுவ னெனமறைகள் புகலு மன்றே"

என்னும் பிரமாணத்தை ஒத்துநோக்குக.

† மணிவாசகம், மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரத்தை விரித்துக்கூறும் வடமொழிப்புராணம். இப்புராணத்தில் சிவக்ஷேத்திரயாத்திராகண்டத்திலே இருபத்தேழாவது அத்தியாயம் நோக்குக. முதலிய வென்றதனால் :—திருவிளையாடற்புராணம், திருவாதவூரடிகள் புராணம் என்றற்றொடக்கத்தனவும் அதனை அறிவிக்கு மென்றுணர்க.

இனி, தக்கோர்பிறர் என்பதற்குத் தகுதியுடையோரா கிய பிற ஞானகுரவர் கன்மகுரவர் என்றலும் ஒன்று; தக் கோர் என்றதனாற் பாசஞானி பசுஞானிகளை ஒழித்தொழிந்த சிவஞானிகள் என்றும், கன்மஞானிகளுள் முத்திநிலையின் மாறுபடுவோரை யொழித்தொழிந்த கன்மஞானிகள் என் றும் கொள்க.

*சித்தியுள் "மார்க்கர் கண்ட நூல்" என்புழிச் சன்மார் க்கரை மார்க்கர் என்றது தலைக்குறை என்றும், சன்மார்க்கர் ஞானிகள்என்றும், கண்ட நூல்—அவரெல்லாம் பிரமாணமெ ன்றறிந்து கைக்கொண்ட நூல்என்றும் உரையாசிரியர் விளக் கியிருத்தல் இங்கே சிந்திக்கற்பாலது.

பிற சிவஞானிகள் கருவூர்த்தேவரும், திருவாலியமுதன ரும், வேணாட்டடிகளும், பட்டினத்தடிகளும், நம்பியாண்டார் நம்பியும், தொண்டர்சீர்பரவுவாரு மென்றின்னோர் முதலா யினோர். கன்மகுரவர் சோமசம்புசிவாசாரியர். முதலியோ ருள் முத்திநிலையில் மாறுபடாதோர். இவர் சந்தானகுரவர் சமயகுரவருள் வைத்தெண்ணப்படாமையின் பிறரெனப்பட் டார்.

முந்தவே—ஏகாரம் பிற்காலத்தைப் பிரித்தலால் பிரிநிலை. முந்தவே என்பதற்கு அநாதியே என்றலுமாம். இதற்கு அநாதியே சிவபெருமான் வேதசிவாகமத்துட்கூறும் சித்தாந் தமுத்தி என்க.

என்றார்கள்—வினைவின்மேற்று. சைவம் ஆகுபெயர். எகர வினவும் அகரச் சுட்டும் திரிந்து எந்த அந்த வென நின்றன. † "எந்த நாள் வாழ்வதற்கே" எனவும் ‡ "அந்த

---

* சிவஞானசித்தியார்—மங்கலவாழ்த்து. செ-ரு. † திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் திருவாரூர்த் தேவாரம். பண். காந்தாரம் உ-ம்.திருமுறை. செ-உ. ‡ திருவாசகம்—திருப்பூவல்லி. செ-உ.

விடை மருதி லானந்தத் தேன்" எனவும் வரு மிலக்கிய நோக்குக.

யாம் என்றது ஈண்டு ஒருவரைக்குறிக்குந் தன்மைப் பன்மை. அது, மற்றையோர் அசற்சம்பிரதாயிகளாகலான், அவர் முன்னர்த்தமக் கியல்பானிகழ்ந்த பெருமை தோன் றக் கிடந்தது.

இஃதென் சொல்லியவாறோவெனின், பரமாப்தராலும் அவர் பிரமாணங்களாலும், பலவாப்தர்களாலும் அவர் பிர மாணங்களாலும் நிச்சயிக்கப்பட்டது. சிவானந்தாநுபவ முத்தி ஒன்றே யென்பதூஉம், அதுவே ஈண்டு நிச்சயிக்கப் படும் முத்தியென்பதூஉம் கூறியவாறு மென்றுணர்க.

2. What conclusions the good and worthy Santanacharyas and Samayacharyas who checked the growth of other religions and spread their own, arrived at regarding Mukti as proclaimed in the Saiva authorities of the past, that Mukti we proceed to define and determine.

---

௩. அங்ஙிலையா னும்பிறவு மான்மாஙந் தத்திறமாம்
என்னிலையே சித்திக்கு மென்றியம்பில்-உன்னிலைதான்
இல்லதேன வேநீ யியம்பு *மளவைமுதற்
சொல்லுமது கேளாய் துணிந்து.

இதனால், இதுமுதல் பிறர்கோள் சிதைக்குமாறு தொடங் கினாராகலின், ஆன்மானந்தவாதியை நிராகரிக்கவே, சிவ சம வாதி தானே ஒழிவனாகலான், முன்னர் ஆன்மானந்தவாதி யுட்கோள்கூறி ஒருவாற்றான் அதனை நிராகரிக்கின்றார்.

---

* அளவைமுனம் என்றும் பிரதிபேதமுண்டு.

(இ - ள்.) அந்நிலையானும் பிறவானும் என்னிலை ஆன்ம ஆநந்தத்திறமாமே சித்திக்கும் என்று இயம்பில்—(முற்கூறியவாறே) சந்தானகுரவர், சமயகுரவர், ஏனை ஞானகுரவர், கன்மகுரவ ரென்றின்னோராகிய தொல்லாசிரியர் மொழியானும், மூலாகமவுபாகம வசனங்களுமாகிய ஆகமப்பிரமாணங்களானும்; அவற்றிற்கியைந்த *ஞானசித்தி முதலிய சமான தந்திரவசனம் † வைதிகவசனமாகிய வேதப்பிரமாணத்தானும் எனதுட்கோளாகிய ஆன்மானந்தமே சித்தாந்தமுத்தியாக முடியுமென்று நீ கூறின்,—உன்னிலைதான் நீ இயம்பும் அளவை இல்லது என முதல் துணிந்து சொல்லும் அது கேளாய்—உனதுகோளாகிய ஆன்மானந்தம் (உன்குரவர்காலந் தொடங்கி நிகழ்தலான், முன்னில்லாத கற்பிதமாகலின்) நீகூறும் பிரமாணம் (எவ்வாற்றானும்) முன்இல்லாததென்றே முன்னர் நிச்சயித்துச் சொல்லாநிற்கும்; பின்னர் யான், அதனை விளங்கச் சொல்லுகின்றேன், நினைவொடு கேட்பாயாக. எ-று.

அந்நிலை—சந்தானாசாரியார் முதலியோர் வாய்மொழிகளும் ஆகமமுதலிய பிரமாணங்களும். ஆன், பிற என்பதற்குங் கூட்டப்பட்டது, ஆன் உருபை ஓடுஉருபாகக் கொண்டு அதற்கேற்பப் பொருள் கோடலுமியையும். திறம்—தன்மை. ஆன்மானந்தம் என்றொழியாது ஆன்மானந்தத்திறம் என்று

---

*ஞானசித்தி உபாகமத்துள் அடங்குதலின் வேறுகூறவேண்டாவாயினும், அதனை முக்கியப்பிரமாணமாகப் பலவிடங்களினும் எடுத்தாளுதலின், அதன் சிறப்புத்தோன்ற இங்கும் வேறு பிரித்துக்கிளந்தெடுத்தோதினர். † வைதிகவசனம்—வேதவாக்கியம்.

கூறியது, * ஆன்மாச் சார்ந்ததன் வண்ணமாய்நின்று அத னையே அநுபவிப்பது என்பது போதா. பாசத்தோடுகூடின் அதனை அநுபவித்துக்கொண்டு பாசமாய் நிற்றலும், சிவத்

---

* ஆன்மாச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்றலை,

[illegible] ।
[illegible]।
[illegible]॥

என்னுஞ் சர்வஞானோத்தர வாக்கியத்தால் அறிக.

இதன்பொருள்: ஆன்மா அங்ஙனம் இருதன்மைப்படுமாறென்னை? என்று ஐயுறுது கேள்; எல்லாப் பொருளின் தன்மைகளும் ஆன் மாவுக்கு உளவாம்; அஃதெங்ஙனமெனின், ஆன்மா யாதனை யாத னைப் பற்றினன் அதனதன் சுபாவமே தன் சுபாவமாந்தன்மை யுடை மையான் அது வதுவாயே நிற்பன் என்று இங்ஙனம் ஆன்மாவை யறியுமாறு தொகுத்துக் கூறினும் கண்டுகொள்க என்பதாம்.

ஆன்மாச் சார்ந்ததன் சுபாவமாய் நிற்குந்தன்மையைச் சிறிது காட்டுதும்:—ஆன்மாப் பூதபரிணமமாகிய சரீரத்தைச்சார்ந்த போது பூதான்மா எனப் படும். அகத்தின் கண்ணதாகிய சூக்குமை பைசந்தி முதலிய வாக்குகளைச் சார்ந்தபோது அந்தரான்மா எனப்படும். சத்த முதலிய சூக்குமதத்துவங்களைச் சார்ந்தபோது தத்துவான்மா எனப் படும். புருடதத்துவமாய் நின்று பிரகிருதி குணங்களைப் பற்றிய இன்பத்துன்பங்களை அநுபவிக்கும்போது சீவான்மா எனப்படும். மந் திரங்களைக் கணிக்கும்போது கண்ணடிபோல, அம் மந்திரமயமாய் நிற்குங்கால் மந்திரான்மா எனப்படும். அத்துவித பாவனையால் இரண் டற்று நிற்கும்போது பரமான்மா எனப்படும்.

இங்ஙனம் அறுவகைப்படுத்துக் கூறியவற்றுள் ஏனையவெல் லாம் உபாதிபற்றிய செயற்கையாதலும் அத்துவித பாவனையால் பரமான்மாவென நிற்றல் சித்தென்னும் சாதிப் பொதுமை பற்றிய இயற்கையாதலும் தெரித்துணர்த்தி இங்ஙனமாகலான், அத்துவித பாவனையுடையோன் ஞானக்கண்ணினற் சிவனை ஆன்மாவிற் கண்டு முழுதும் வியாபகமாய் நின்று அறிவதாகிய முற்றுணர்வுடையனய் அவ்வப்பொருளியல் பெல்லாமறிந்து மலவாசனை நீங்கிக் கேவல மாய் நின்று முடிவு காணகில்லாப் பேரின்பத்தைப் பெறுவன், எனச் சர்வஞானோத்தரத்தின் ஞானபாதத்துட் கூறுமாற்றா னுணர்க.

தோடு கூடின் அதனை யனுபவித்துக்கொண்டு சிவமாய் நிற்ற லுமே அதனியல்பு. தனக்கென ஓரியல்பு அதற்கில்லை. ஆகவே, ஆன்மானந்தம் சிவானந்தமன்றி ஆன்மாவிற்கு இயற்கையாகவுள்ள ஆனந்தமன்றென்பது கருத்து. ஆம் பண்புருவாய்நின்றது; ஆகியநிலை என்க. ஏகாரம் பிரிநிலை. 'என்னிலை' இது இனவெதுகை.

சித்தித்தல்—முடிவுபெறல். உன்நிலை — உனதுட்கோ ளாகிய ஆன்மானந்தம். உட்கோள்—உள்ளத்திற் கொள்ளு தல்; ஒரு சொல்லாகக்கொண்டு கருத்து என்றலுமாம். இல்லாததுஇல்லதெனநின்றது. நீ என்னுமுன்னிலைஒருமை, அறியாமையையுடைய நீ என்னும் பொருடோன்ற நின் றது. அளவைகளைச் சொன்மாத்திரையன்றிப் பொருண் மாத்திரை யறிந்திலையென்பார், நீ இயம்புமளவை என்றார். அளவைமுதல், அளவையாகிய கருவி யென்றலுமாம். ஆன் மானந்தம்—ஆன்மகுணமாகிய இனிய இரதம். இரதம், சுவை, இன்பம், சுகம், ஆனந்தம் என்பன ஒருபொருட் கிளவிகள். அதனை மறுத்தற்கே இந்நூலெழுந்ததென்க.

உனது அளவையே உன்னுட்கோளை முந்தி மறுத்து விடுதலாற் பிறர்மறுத்தல் மிகையாயினும், நீ அம்மறுப்பை யறிந்திலையாகலான், யாம் அதனைச் செவ்விதின் விளக்குகின் றேம் கேள் என்பார், அதுகேளாய் என்றார். சொல்லும் என் பது முற்றுவினை. அது—அளவை சொல்லும் அப்பொருள்.

பிறவும் என்றதனாற் சமானதந்திரமாகிய ஞானசித்தியும் வைதிக வசனமும் கொள்ளப்பட்டன; ஏனைப் பிரமாணங் கள் அந்நிலை என்பதனாற் கோடலின். ஆகமத்திற்கும் வேதத் திற்கும் வேற்றுமையின்மையின் வைதிக வசனத்தையும் ஆகமத்தோடு ஒருங்கு கூறினார். சமானதந்திரம் மூலாகமத் திற் கொத்தவுபாகமம்.

இஃதென் சொல்லியவாறோ வெனின், ஆன்மானந்த வாதியை மறுத்தற்கு அவன் கூறும் பிரமாணமே அமையும்; பிறவேண்டா வென்ற வாறும்.

3. If you say that according to these authorities and others, the Mukti is the attainment of the ananda that is in the nature of the atman itself, your position is a figment refuted by the very authorities on which you rely.

---

ச. ஈசன் றனதுசத்தி யின்பருந்து மீசனால்
ஆசறத்தன் சத்தியிலின் பான்மாவும்—நேசம்
உடனருந்து மென்னின்முத்தி யோவ்வாது பாசம்
விடவதுவாய் நிற்பதுவா மே.

இதனால், ஆன்மானந்த முண்டென்னுஞ் சில வசனப் பிரமாணங்கள், பிறவசனங்களுக்கும் நியாயங்களுக்கு முரணுதலின், அவற்றை நிராகரிக்கின்றார்.

(இ-ள்.) ஈசன் தனது சத்தி இன்பு அருந்தும் ஆன்மாவும் ஈசனால் ஆசு அறத் தன் சத்தியில் இன்பு நேசமுடன் அருந்தும் என்னில்- சிவன் தனது சத்தி ரூபமான ஆனந்தத்தை அநுபவிப்பன்; அதுபோல ஆன்மாவும் சிவனால் மல மகலத் தனது சத்திரூபமான ஆனந்தத்தை (முன்னர்ப் பெற விரும்பியிருந்தமையின்) அவ்விருப்பத்தால் அநுபவிப்பன் என்று நீ கூறில்,—முத்தி ஒவ்வாது பாசம்விட அதுவாய் நிற்பது ஆம் ஏ—(சிவன், தனது சத்தியை அநுபவியா னென்று கூறும் வசனங்களுக்கும், சிவனும் ஆன்மாவும் பிரிந்து நிற்றலின், ஒன்றாய் நிற்றலே சாயுச்சியமென்று முத்திநிலை கூறும் வசனங்களுக்கும், தம்மைத்தாம் அநுபவித்தல் கிரியா விரோதமாகலான், நியாயத்திற்கும்) அஃதொவ்

வாது; (ஆன்மாவுக்குச் சிவாநுபவம் உண்டாகுமாற்றான் அத்துவித முத்தி கூறுதலே சித்தாந்தம்; அஃதெவ்வாறென்னில்) பாசமகல ஞானனந்த ரூபமான சிவாநுபவந் தோன்றச், சிவத்தோடு ஒன்று மிரண்டுமின்றி அத்துவிதமாய் நிற்றலே சித்தாந்த முத்தியாம். எ - று.

ஈசன் - சிவன்; அது * "ஈசன்சிவனென்றியம்புமறை" என்பதனாலறிக. சத்தி - இச்சாசத்தி; இன்ப சத்தியுமாம். இன்பம் அம்முக்கெட்டு இன்பென நின்றது; † "கோணைகணையான்" என்புழிப்போல. ஆல் ஏதுப்பொருட்கண் வந்த மூன்றனுருபு. ஆசு— ஆணவமலம்; ஆசுதருவதனை ஆசென்றார். ஆசு—ஆன்ம சிற்சத்தியை மறைத்தலாகிய குற்றம். அறவென்னுஞ்செயவெனெச்சம் காரணப்பொருட்டு; மழை பெய்யக்குளம் நிறைந்ததென்றாற்போல. சத்தியிலின்பு என்புழி இல் தவிர்வழிவந்த சாரியை; சத்தியினால் அருந்துமெனப் பொருள்கொள்ளின், இல்சாரியையன்று; ஏதுப் பொருண்மைக்கண் வந்த ஐந்தாமுருபு. இவ்வாறு பொருள் கொள்ளுங்கால், ஈசன் தனது சத்தியில் இன்பருந்துமென உருபு விரித்துச் சத்தியால் எனப் பொருள் கொள்க. உம்மை இறந்தது தழீஇய வெச்சம். உடன் என்பது ஒடுருபின் பரியாயம்; உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது.

சுகானுபவமெல்லாம் விருப்பின்றி நிகழாதென்னு மதுவே நியாயமாகலின், அதனானே, ஈண்டுத் தன்னைத்தான் ஆசைப்படுதலும் கூடாமையால், தன்னைத்தான் அநுபவித்தலுங் கூடாதென்பதற்கு நேசமுடனருந்து மென்பது ஞாபகஞ்

---

* கந்தபுராணம்—மகேந்திரகாண்டம்—சயந்தன்புலம்புறு படலம். செ-சுக. † கோயில்—திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம்—க - ம் திருமுறை. பண் - குறிஞ்சி-செ - க.

செய்ததூஉமாயிற்று. முத்தி சுட்டுப் பொருளாய் நின்றது. ஒவ்வுதல்—பொருந்துதல்.

ஆன்மாவுக்குச் சிவாநுபவ முண்டாகுமாற்றால், பாச மகல ஞானானந்த ரூபனான சிவாநுபவந்தோன்ற அவனோடு அத்துவிதமாய் நிற்றலே சித்தாந்த முத்தியென்பார், 'பாசம் விடவதுவாய் நிற்பதுவாமே' யென்றார். ஏகாரம் தேற்றம்.

இஃதென் சொல்லியவாறோவெனின், ஆன்மாவிற்குச் சிவாநுபவ முண்மையானும், தன்னைத்தான் ஆசைப்படுதலும் அநுபவித்தலும் சாலாதாகலானும் அத்துவிதமுத்தி கூறுதலே சித்தாந்த மென்றவாறாம்.

4. If you say that just as Siva enjoys the ananda by his sakti, so does the soul enjoy the desired ananda by its sakti, it, when the mala is removed by Siva, cannot be; for when the bonds separate, the soul stands in advaitic union with Siva's ananda that comes to it.

---

ரு. சிற்றின்பம் பேரின்பஞ் சீவகுண மென்றனைநீ
உற்றின் பிரண்டு முணர்ந்திலையோ—சிற்றின்பம்
நாடிற் கருமபல ஞதனுருப் பேரின்பம்
நீடிப் படிகம்போ னீ.

இதனால், முற்கூறியவாறே ஆன்மானந்த மின்றெனினும், சுவாநுபவப் பிரமாணத்தால் அஃதுண்டென்பதை நிராகரிக்கின்றார்.

(இ - ள்.) சிற்றின்பம் பேரின்பம் சீவகுணம் என்றனை நீ—புணர்ச்சிக்காலத்து இருவரிடத்து நிகழ்ந்த வின்பம் அவரவர தானாற்போலச் சமாதிக்காலத்து நிகழ்ந்தவின்பம் என்னதாதல்வேண்டும்; அவற்றால் சிற்றின்பம் பேரின்பம் இரண்டும் சீவகுணமென்று சொன்னாய் நீ,—உற்ற இன்பு இரண்டும்

உணர்ந்திலை—அநுபவித்த அவ்விரண்டு இன்பவியல்பும் அறிந்தாயில்லை; (அஃதறியும்படி கூறுதும்),—சிற்றின்பம் நாடில் கருமபலன் நாதன் உருப் பேரின்பம்—சிற்றின்பத்தை ஆராய்ந்து பார்த்தால் புண்ணியபலமான சூக்குமகன்மம், சீவகுணமன்று. (அதுபோலச் சமாதிக் காலத்திற்றோன்றும் இன்பமும் உன்னால் அநுபவிக்கப்படுதலின், உனக்கு வேறாய் நின்ற) சிவரூபமான பேரின்பம் உன்குணமன்று,—நீ நீடிப் படிகம்போல்—நீ இவ்விரண்டின்பமுஞ் சார்ந்து படிகம்போல் (நிற்றலின், உன்குணம்போலத் தோன்றிற்று; அங்ஙனம் தோன்றினும் அவ்வாறு கொள்ளற்க.) எ-று.

எனவே சுவாநுபவத்தைப் பகுத்துத் தெருட்டுந் திருவருளைத் தலைப்படாமையின், மயங்கி யுரைத்தனை என்றவாறாயிற்று.

சிற்றின்பம்—உலகவின்பம்; அது சிறிது போழ்தினுள் நிலையுதலின்றி அழிந்துபோதலின் அப்பெயர்த்தாயிற்று. இக்கருத்துப்பற்றியே அரதனவாக்கிய வடிகளும் *"தினைத் தனையுள்ளதோர் பூவினிற்றேன்" என்று சிலேடையாகத் திருவாசகத்துள் ஓதியருளியதூஉ மென்றுணர்க.

பேரின்பம்—உலகங்கடந்த வின்பம்; அது என்றுமொரு பெற்றித்தாய் அழியாது நிலையுதலின் அப்பெயர்த்தாயிற்று. இக்கருத்துப் பற்றியே †"அந்தமொன்றில்லா வானந்தம் பெற்றேன்" என்னும் ஆப்தமணிவாசகம் எழுந்ததூஉ மென்க.

---

* திருவாசகம், திருக்கோத்தும்பி—செ-௩. பூ-பூமி, புட்பம். தினையளவிற்றாய உலகவின்பத்தேன்; எனவே சிற்றின்பம் என்றபடி. தினையளவிற்றாய புட்பத்தின்கணுள்ளதேன் தினையளவிற்றாயதேன் என வியைத்துப் பொருள்கொள்க.

† திருவாசகம், கோயிற்றிருப்பதிகம்—செ-௰.

சீவகுணம்—உயிர்ப்பண்பு; அது ஆன்மாவுக்கு அறிவு போல்வதோர் தன்மை. குணம், பண்பு, தன்மை, இயல்பு, நீர்மை, நீர் என்பன ஒருபொருட் கிளவிகள்.

உறுதல்—அநுபவித்தன் மேற்று; உற்று உணர்ந்திலை யோயென இயைத்து ஆராய்ந்தறிந்திலையோ என்றலுமாம். உணர்ந்தாயில்லை என்பது உணர்ந்திலை யென நின்றது. ஓ அசைநிலை, எதிர்மறை. கருமம் என்னும் பொதுச்சொல் ஈண்டுப் புண்ணிய கருமத்தினை யுணர்த்திற்று. பலம் பலன் என வீற்றெழுத்துப்போலி. நாதன்—தலைவன்; பசுபதி யென்றபடி. உருப்பேரின்பம் பண்புத்தொகை.

சிற்றின்பம் கன்மபலன் என்றாற்போலப் பேரின்பம் நாதன்உரு என்று ஒருமுடிபுங் காட்டலாம், *"தனிப்பர முத்தியானமுதல்" எனப்படுதலின்.

நீடுதல் — சார்ந்ததன் வண்ணமாய்ச்சேறல்; அது †"பாருமோடாது நீடாதெனும் பாலதே" என்னும் பிரமாணத்தானறிக. படிகம்—கண்ணாடி.

நிற்றலின், உன்குணம்போலத் தோன்றின்று; அங்ஙனந் தோன்றினும் அவ்வாறு கொள்ளற்க. என்பது ‡அவாய் நிலையான் வருவித்துரைக்கப்பட்டது.

இஃதென் சொல்லியவாறோ வெனின், சிற்றின்பம் பேரின்பம் சீவகுணமன்று; முன்னையது புண்ணியகன்மப் பயன், பின்னையது சிவரூபம் என்றவாறும்.

5. You say that limited joy and supreme bliss are both qualities of the soul. Wordly joy is a form of Karma. Supreme bliss is Siva's form. Your nature is that of a crystal.

---

* பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடற் புராணம், விநாயகர்காப்பு.
† கம்ப ராமாயணம், பாலகாண்டம், தாடகை வதைப்படலம். செ. ௬௪௧. ‡ அவாய்நிலை ஒருசொல் மற்றொருசொல்லை அவாவிநிற்றல்; அவாவுதல்—விரும்புதல்.

சா. பெறுவானும் பேறுநான் பெம்மானுள் ளுண்டேல்
அறிவாயோ வானந்த மன்றி—அறிவேனுன்
ஆனந்தங் காட்டி யகத்திருப்ப ளுகிலநு
மானந்தான் கண்டறியாய் மற்று.

இதனுல், தன்னிடத்திற் றேன்று மின்பந் தன்குண மென்றுற் சிவசாக்ஷாத்காரம் கிடையாதென மறுக்கின்றுராகலான் இதுவுமது.

(இ - ள்.) பெறுவானும் பேறும் நான்—(நின்பாற்றேன்றிய ஆனந்தம் நீயே யாகலாற்) பெறுவானும் பேறும் நானென்றே (நீ சொல்லுமாற்றுல் சிவன் எங்குளனென்னின்),—பெம்மான்உள்—அவன் உள்ளத்(துளன் என்பை),— உண்டேல் ஆனந்தம் அன்றி அறிவாயோ — உள்ளத்துளனுயின், (அவனே) ஆனந்தாநுபவத்தாலன்றி எவ்வாறுளனென்றறிவதெனின்,—ஆனந்தம் காட்டி அகத்து இருப்பன் நான் அறிவேன்—என தானந்தத்தை யெனக்கநுபவமாக்கி வெளிப்படுத்துமாற்றுல் (அவன்) உள்ளே யிருப்பனென்று நானறிவேன் (என்பை),—ஆகில் அநுமானந்தான் கண்டு அறியாய்மற்று — அங்ஙனமாயின், அஃதநுமானப்பிரமாணத்தானறிந்த தொன்றே ; சாக்ஷாத்காரமாகக் கண்டாயில்லையாம். எ-று.

பெறுவான்-இன்பம் பெறுமான்மா. பேறு அவ்வான்மா அநுபவிக்கும் இன்பம். பெருமான் பெம்மான் என்றுயது ; இவ்வுரைக்கண் பெம்மான் சுட்டாக்கப்பட்டது. உள்— உள்ளம். உண்டேல்—ஏலீற்று வினையெச்சம். ஓகாரம் வினு. காட்டி என்னுஞ் செய்தென் னெச்சம் எதுப்பொருளில் வந்தது ; ஊட்டி வளர்ந்தான் என்றுற்போல. ஆகில்—அங்ஙனமாயின். அநுமானம் குறியாலறியப்படுவது, பாயிரத்துட் காண்க.

ஈண்டு அநுமானம் என்றுரேனும், ஒன்றின முடித்த லான், ஆகமத்தானும் அறியப்படும் என்க. எனவே, *"அள வை காண்டல் கருத லுரை யென்றிம் மூன்றினடங்கிடுமே" என ஏனையவற்றையும் அடக்கிக்கொண்ட பிரமாணமூன்றில், ஆகமத்தானும் அநுமானத்தானும் பெத்தநிசையிலறிந்தது போல முத்தி நிசையிலும் சொன்மாத்திரையா யறிந்திருந்த தன்றிக் கண்கூடாக வறியாமையின், இவனும் பெத்த னென்றே சொல்லப்படுவான் என்பதாம்.

காணல்—பிரத்தியக்கப் பிரமாணம். மற்று வினைமாற்று தற்பொருட்டு; என்னை? கண்கூடாக அறியப்பட்ட தென்ற தனை மாற்றிப் பிறிதோராற்று லறியப்பட்ட தென்னும் பொருள்பயந்தமையி னென்க.

இஃதென் சொல்லியவாறுமோ வெனின், பெறுவானை யும் பேறுகிய பெம்மானையும் கண் கூடாகப் பிரித்தறிந்து பெறுவானுகிய தனக்குப் பேறுகிய சிவானந்தம் உண்டாயிற்

---

* சித்தியார், சுபக்கம்-அளவை இலக்கணம், செ-க. அளவை-பிரமாணம். உலகத்துப் பதார்த்தங்களை எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல் என்னும் நால்வகை அளவினுல் அளந்தறியுமாறு போலப் பதி முதலிய பொருள்களை அளந்தறிதற்குக் கருவியாதலினுற், பிரமாணம் அளவை எனப்பட்டது. பதி முதலிய பொருள்கள் பிரத்தியட்ச மாகக் காணப்படாதனவாதலால், அவை ஆகமம் அநுமானம் என் னும் இரண்டு கருவிகளாலும் ஆன்மசிற்சத்தியால் அளந்தறியப்படு வனவாம். ஆதலால், ஆன்மசிற்சத்தியே பிரமாணமாம். ஆகமம் அநுமானம் காட்சி என்னும் மூன்றும் ஆன்மசிற்சத்திக்கு அறிவைத் தோற்றுவிக்கும் துணைக்கருவிகள் ஆகலின், அவையும் பிரமாணங் களென உபசாரமாகக் கொள்ளப்படும். பிரமாணம்: பிர-உபசர்க் கம், மா-அளத்தல், நம்-விகுதி. நகரம் ணகரமானது வடமொழி யிலக்கணவிதி.

றென்றறியு மறிவு தலைப்படாது ஆன்ம குணமல்லாத இர தத்தை அதனிரத மெனக்கொள்ளும் மயக்கத்தனுகலின், இவன் எவ்வாற்ருனும் முத்தனல்லன் பெத்தனே யென்ற வாறும்.

6. You say that the enjoyer and the enjoyment are both yourself and that God resides within you. How do you perceive His presence other than through the feeling of joy? If you say that you are the perceiver and He dwells in you, making you feel the joy, that is merely an inference and you do not realise otherwise.

---

எ. வேதா கமத்தின் விதித்தமுத்தி தானன்றி
நீதானே யின்பமென்ற னீதியோ—பேதாய்
பெறுவானீ யானந்தம் பேறென் றுரைத்த
* தறியா திருந்தனைநீ யாம்.

இதனால், முற்கூறியவாறே ஆன்மானந்தங்கோடல், வேதாகமப்பிரமாணங்கள் பெறுவானும் பேறும் உண்டென் பதற்கு விரோதமாகலின், அது கூடாதெனப் பிறிதோராற் ருன் நிராகரிக்கின்ருராகலின், இதுவுமது.

அங்ஙனமன்றித் தொல்லாசிரியர் வாய்மொழியும் முத னூல் வழிவந்ததாகலின், அது வேண்டுமென்பார்க்கு அஃ தெடுத்துக் கூறுகின்ருர் எனினுமாம்.

---

*" அறுவாய் மறந்தனை " என்னும் பாடத்திற்கு " இறுவா " யென்ருற்போற் கொள்க. இறுவாய் — அழிவாயாய் என வெச்ச மாக்குக. அறுதல் இறுதல் என்பன ஒருபொருட் சொற்கள். இறு வாய்போல அறுவாயும் வினையெச்சமுற்று.

(இ - ள்.) வேதத்தின் ஆகமத்தின் விதித்த முத்திதான் அன்றி நீதான் எ இன்பம் என்றல் நீதிஓ—வேதத்தினும் ஆகமத்தினும் பெறுவானும் பேறும் பிறிதாகவே முத்தி யிலக்கணங் கூறுதலின், அஃதகற்றி நீதானே தானாய் நின்று நினதின்பங் கண்டறிதல் மரபன்று,—பேதாய்— (முற்காலத்திலே குருவழிபாடு செய்து உண்மையை யுணராமுன்னம் பெருமை மேற்கொண்டு அறியும் பகுதியறியாது தானே சில கற்பித்துக் கூறும்) அறிவில்லாதாய்,—பெறுவர்ன் நீ ஆனந்தம் பேறு என்று உரைத்தது நீ அறியாது இருந்தனை ஆம்—ஆன்மாப் பெறுவான் ஆனந்தம் பேறு என்று வரும் பிரமாணங்களை நீ அறியாது மறந்தனையோ! அவ்வாறுதல் வேண்டும்; அன்றேல் இவ்வாறு கூறுயன்றே! எ-று.

அறிஞராகிய தொல்லாசிரியர் வாய்மொழிகளும் வேதாந்த சிந்தாந்த மகா வாக்கியங்களும் பெறுவானும் பேறும் ஒன்றெனக் கூறுதல் நியாயவிரோதமெனக் கண்டு வேறு வேறெனக் கூறுதலை அறியாது ஒன்றெனக் கூறிய மடவோய் என்பார் பேதாய் என்றார்.

ஆகமத்தின் என்பதன்கணுள்ள அத்தும் இன்னும் வேதத் தோடும்புணர்த்திக் கூறப்பட்டன. வேதாகமங்களைக் கருத்தாக்களாக் கொண்டு அத்துமின்னுஞ் சாரியைகளென்றலுமாம். வேதாகமம் வட நூன்முடிபு. விதித்தல்—இஃதிங்ஙனமிருத்தலின் இப்படியாதல் வேண்டுமென நியமித்துக் கூறுதல். தான் முன்னையது அசை; பின்னையது தேற்றத்தின் மேற்று. ஏகாரம் பிரிநிலை. நீதி, மரபு, முறை என்பன ஒரு பொருளன. ஓகாரம் எதிர்மறை. பேதை பேதாய் என விளியுருபேற்றது.

பெறுவான்பேறு என்னுஞ் சொல்லியல்பானும் கிடக்கை முறையானும் அவைதாம் *வெவ்வேறென்பது தெற்றெண விளங்கும்; விளங்குமாறு:—பெறுவான் எனவே, முன் தன்னிடத்தில்லாத தொன்றைப் பின் பிறரிடத்திற் பெறுபவன் எனவும், பேறு எனவே, பிறரிடத்து ஒருவன் பெற்றுக்கொள்ளும் பயன் எனவும் அவற்றினியல்பானும் பெறுவான் முன்னும் பேறு பின்னும் கிடக்குமுறையானும் எவரும் ஐய விபரீதமின்றி வேறுமாறறியலாம். ஆம் என்பது உடன்பாட்டில் வந்தது. அது வடமொழி அவ்வியயம்.

இஃதென் சொல்லியவாறோவெனின், முன்னோர்க்கன்றி, வேதாகமங்கட்கும் பெறுவான் பேறு வெவ்வேறென்றலே துணிபென்றவாறும்.

7. Is it right that you should set aside what the Vedas and Agamas declare to be Mukti and should say that you are yourself the ananda.? If it is so, fool, you are ignorant of the fact that you are the enjoyer and ananda is what is enjoyed or got by you.

---

அ. உன்னுருவங் கண்டிருப்ப தோகேட்டேன் முத்திசிவன்
தன்னுருவங் கண்டிருக்கத் தக்கதே—முன்னறிஞர்
ஓதுசிவன் றேற்ற மோன்றுமே காண்பரேனும்
போத மறந்தனையிப் போது.

---

*வெவ்வேறென்பது, தாயுமானசுவாமி பாடல் "அறியுந் தரமோ நானுன்னை யறிவுக்கறிவாய் நிற்கையினுற், பிறியுந் தரமோ நீயென்னைப் பெம்மானேபே ரின்பமதாய்ச். செறியும் பொருணீ நின்னையன்றிச் செறியாப் பொருணன் பெறும்பேற்றை, நெறிநின் றெழுக விசாரித்தா னினக்கோ வில்லை யெனக்காமே," தன்னை யொருவர்: செ. ௬.

இதனால், அவ்வேதாகமங்களை அறிதற்குப் புத்தியின்றாயினும் எளிதாய் நாமறிதற்குத் தொல்லாசிரியர் சொற்றவாய் மொழியானும் அவையறியப்படு மென்கின்றாராகலின் இதுவுமது.

(இ - ள்.) உன்உருவம்கண்டு இருப்பது ஓ முக்திகெட்டேன்—(நின்போற்றோன்றிய இன்பம் நின்குணமாகலாற் குணகுணிகள் வேற்றுமையின்மையின், அது நீயேயாகலின்,) நின்னைத்தானே கண்டிருப்பது முக்தியன்று; (இனி எவ்வாறிருப்பது முக்தியெனின்),— சிவன் தன் உருவம் கண்டு இருக்கத்தக்கது எ—சிவனுருவத்தைப் பார்த்து அநுபவித்திருப்பதே முக்தி; (அதற்குப் பிரமாணம் யாதெனின், முற்கூறியவாறே வேதாகமங்களில் அறியலாம்; அஃதறியப் புத்தியின்றாயினும், நீ அறியுமாறு கூறுதும்);—முன் அறிஞர் ஓது சிவன் தோற்றம் ஒன்றும் எ காண்பர் என்னும் போதம் இப்போது மறந்தனை—தொல்லாசிரியர் (எளிதின் நாமுணர முத்தியிற் பேறுகச்) சொல்லிய சிவனது தோற்றம் ஒன்றையுமே காண்பரெனக் கூறலானுளதாய வுணர்வை இப்போது மறந்தனை; (இனி மறவாதுணர்வாயாக). எ-று.

உன்னுருவம் என்றது ஆன்மசொரூபத்தை. காணுதல் * நோக்காமல் நோக்குதல். இருத்தல் சமாதியிலிருத்தல். ஓகாரம் எதிர்மறை. கெட்டேன் இரக்கக்குறிப்பு. † "மெய்யிளைத்தேறுவர் வீணர் கெட்டேன்" என்பதுமது. சிவன் தன் என்புழித் தன் சாரியை. சிவனுருவமே கண்டிருக்கத்தக்கது எனப்பிரித்துக் கூட்டுக. ஏகாரம் இரண்டும் தேற்றமும் பிரிநிலையும். கண்டிருத்தல் இரண்டும் ஒருசொல் விழுக்கா

* நோக்காமல் நோக்கல்—ஊனக்கண்ணால் நோக்காது ஞானக்கண்ணால் நோக்கல். † சிதம்பரமும்மணிக்கோவை - செ. ௬.

டாய்க் காணுதல் என்னும் பொருளுமாம். அறிஞர்—சந்தாகு சாரியர் சமயாசாரியர் தக்கோர் பிறர் என்றின்னோர். ஓது தல்—முத்தியிற் பேறுகச் சொல்லுதல். எனும் போதம் என் பது *"வாழ்வெனும் மையல்" போலக் காரணகாரியோப சாரமாய் நின்றது. போதம்—உணர்வு. இப்போது மறந்தனை என்றது ஞாபகஞ் செய்தபடி. உலோகாயதன் தன்னின் வேருய் நிகழும் ஓரின்பமே முத்தியென்றலின், அவனுக்கநு பவம் நிகழ்தலானும் ஆன்மானந்த வாதிக்கு இன்பமே ரூப மாகலின் அவனுக்கநுபவ நிகழாமையானும் அவனிலுமிவன் தாழ்ந்தவனென்று இரங்குவார் கெட்டேன் என்ருர்.

இஃதென் சொல்லியவாறோவெனின், ஆன்ம சொரூ பத்தைக் காணுதல் முத்தியன்றெனவும் சிவசொரூபத்தைக் காண்டலே முத்தி யெனவும் வேதாகமங்களும் தொல்லா சிரியர்களாகிய சந்தாகுசாரியர் முதலியோரும் கூறுதலான், சிவன்றேற்ற மொன்றுமே கண்டிருத்தல் வேண்டுமென்று ஆன்மானந்த வாதிக்குப் போதித்த வாறும்.

8. Ah! Is it Mukti to remain in enjoyment or perception of yourself? Mukti, it is perception and enjoyment of Siva's form. Have you forgotten the words of the wise that as enjoyment in Mukti they perceive only the form of Siva?

---

கூ. ஈசனையே காண வெனத்தவமுன் செய்ததெலாம்
மோசமாய் வந்து முடிந்ததே—பாச
வினையகன்ற போதும் விமலனே நின்றுள்
தனையறியா மூடர்க்குத் தான்.

---

* சித்தியார் -சுபக்கம் உ-ம் சூ. செ-கூக.

இதனுல், முற்கூறியவாறே கூறும் ஆன்மானந்த வாதியைச் சாதனசாத்திய நிகழ்ந்தமை காட்டி நிராகரிக்கின்றாராகலான், இதுவுமது.

(இ - ள்.) விமலனே பாசவினை அகன்ற போதும் நின்தாள் தன்னை அறியா மூடர்க்குத்தான்—பரமசிவனே! மும்மலமும் நீங்கிய காலத்தும் நின்னை அறியாமையின், மற்றப் பெத்தரினும் உயர்ந்த மூடருக்கு,—ஈசனை ஏ காண என் தவம் முன்செய்தது எல்லாம் மோசம் ஆய்வந்து முடிந்ததுஏ—ஈசனுயுள்ள நின்னையே (காணவேண்டுங் காணவேண்டு) மென்றே முன்னர்த் தவஞ் செய்ததெல்லாம் இப்பொழுது மோசமாய் வந்துமுடிந்துவிட்டது. எ - று.

ஈசனையே-ஏகாரம் பிரிநிலை; முப்பொருளினும் முத்தி நிலையிற் கண்டநுபவ விடயமாதல் சிவனிடத்ததாகலின். வேண்டும் என்ப தவாய்நிலை. அஃதன்றி, 'என' என்பது இடைச்சொல்லெனக்கொண்டு காணும்படியெனக் கிரியா விசேடணமாக்கினுமாம்; *"பார்முதிர்பணிக்கடல்கலங்கவுள் புக்கு" என்றாற்போல.

'காண' என்பது †"சுடச்சுடரும் பொன்போல்" என்றாற்போல இருமுறைப்பட நின்றது; அதன் விருப்ப மிகுதி தோன்றற்கு. முன்செய்த தவமெல்லாம் எனமாற்றிப் பொருள்கொள்க.

ஈண்டு 'மோசம்' என்றது பயனின்மை குறித்து நின்றது; என்னை? முத்தியிற் சிவனைக் காணுமையின், அதனையுத்தேசித்துச் செய்ததெல்லாம் பயன்றராமையின்; எனவே, தவம் அவமாயிற்றென இரக்கமுற்றார் என்றபடி.

---

*திருமுருகாற்றுப்படை, திருப்பரங்குன்றம் அடி-சரு. †திருக்குறள், உஎ-ம் அதி-தவம். செ-எ.

முன்னுளிற்றவம்:—சரியை கிரியை யோகங்கள்; இவை ஒரு பிறப்பின் முற்றுவன வன்று; *"பல்லூழி காலம் பயின்றானை யர்ச்சிக்கி—னல்லறிவு சற்றே நகும்" என்றவண்ணம் கழிந்த பலபிறப்புக்களிற் செயப்பட்டன வென்பார் 'முன் செய்ததெலாம்' என்றார்.

† புறச் சமய நெறிநிற்றல், ‡ அகச் சமயம் புகுதல், § மிருதிவழி யொழுகல் முதலியன சைவத்தை யடைதன் மாத்திரைக்கே சோபான மார்க்கமன்றிப் பரமுத்திக்கு நேரே காரணமாக மாட்டாவென்பார், ‖ "தெளிந்துஞ் சென்றுற் சைவத் திறத்தடைவ ரென்றும், $ "இதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" என்றும் அவ்வாறு பகுத்து வரையறுத்துக் கூறினார் சித்தியுள்.

இன்னும் இதன் றடைவிடைகளெல்லாம் மாபாடியத்துள் விளங்க விரிக்கப்பட்டமையின், அவற்றை ஆண்டுக் காண்க.

இஃதென் சொல்லியவாறோவெனின், ஆன்மானந்தவாதி பாசநீக்கமுத்தி பெற்றதன்றிச் சிவத்துவப் பேறாகிய முத்தியெய்திற்றிலனாகலான், அவன் செய்த தவம் அவமாயிற்றென இரங்கியபடி கூறியவாறாம்.

9. O spotless One, for the foolish, who have not been able to perceive Thy feet, even after the binding malas have been removed, all the austerities they had performed to perceive the Lord have come to naught and been in vain.

---

*ஔவையார்—குறள், உள்ளுணர்தல் செ. ௨. †, ‡, §, ‖, $. சிவஞான சித்தியார் சுபக்கம்-அ-ம் சூ-செ-கக.

௧௦. தானன்றி நிற்கவெழுஞ் சச்சிதா னந்தனைநீ
யானென் குணமென் னிடும்பென்றே—ஊனநீ
ஞானகுணம் பெற்றின்னு நாறு னெனநவிலும்
ஈனகுணம் போனதில்லை யே.

இதனால், முற்கூறியவாறே ஆன்மானந்தமுண்டென் பானைக் குறிவழி உபாயநிலையான் நிராகரிக்கின்றாராகலின், இதுவுமது.

(இ-ள்.) தான் அன்றி நிற்க எழும் சத்துச் சித்து ஆனந்தனை நீ யான் என்குணம் என் இடும்பு என் ஓ—தன் னியல்பு தோன்றாது மழுங்க அவிழ்ச்சி கொடுத்துக் குழைந் திருக்கப் பெற்றாற்றோன்றும் சச்சிதானந்தரூபனை (அவ்வு பாய நிலையானே சாக்ஷாத்காரம் பெற்றுழித் தான்முழுதுந் தோன்றாது அவனே புலப்படத்தோன்ற நீ கண்டுவைத்தும்) அவனையானென்றும் என் குணமென்றும் கூறும் முரணுண் டானது என்ன காரணத்தினாலோ?,—ஊனநீ! ஞானகுணம் பெற்றும் இன்னும் நான் நான் என்ன நவிலும் ஈனகுணம் போனது இல்லை ஏ—அநாதியே பெத்தனானநீ! (சிவகிருபை யால்ஒரோவழிச்) சிவஞானம் பெற்றும், பின்பும் முன்போல நான் நான் என நவிலும் முரணுண்டாயிருத்தலான், (நீ ஞானம் பெற்றதுமில்லை; அதனாலே மலபந்தம் நிவிர்த்தி யானதுமில்லையாதல் வேண்டும்.) எ - று.

தானன்றி நிற்றல்—*"நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்" என்றபடி அகங்காரமற்றுத் தற்செயலிழந்து நிற்றல். எழுதல் † "தன்னையே தந்தான்" என்றபடி தோன்றுதல்.

இனி, ‡ "ஏகமாய் நின்றே யிணையடிக ளொன் றுணாப் போகமாய்த்தான் விளை" தலுமாம்.

---

*,†. திருவுந்தியார்—செ. ௯. ‡ சிவஞானபோதம், ௧௧-ம்சூத் திரத்து முதலதிகாண உதாரணம் செ. ௨.

இன்னும் * "அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து—குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்ப" †"பிரியாத சிவன்றானே பிரிந்து தோன்றி" டுதலுமாம்.

சச்சிதானந்தம்—சத்து உண்மை; சித்து அறிவு; ஆனந்தம்—இன்பம். இடும்பு—ஈண்டு முரண் என்னும் பொருண்மேற்று; அகந்தையுமாம். எவன் என்னும் வினா என்னென நின்றது; ‡ "கற்றதனா லாய பயனென்" என்புழிப் போல. ஓ அசைநிலை. ஊன என்பதை விளியாக்கலுமொன்று; ஊனம் ஈண்டு ஊனத்தைச் செய்கின்ற ஆணவத்தை ஆகுபெயரானுணர்த்தி நின்றது. ஊனம்—கேடு; அறிவைக் கெடுக்கிற தென்பதாம்.

பெற்று என்புழித்தொக்க உம்மை உயர்வு சிறப்பு; "குறவருமருளுங் குன்று" என்றாற்போல. ஈனம்—இழிவு. ஈற்றேகாரம் தேற்றேகாரம்.

நவிலும் ஈனகுணம் என்பது நவிலுதற்குக் காரணமாகிய வீனகுணமெனக் காரணப் பொருளின் வந்தது. அது பெயரெச்சம். ஆனநீ என்றும்பாடம்; ஆன—பெத்தனான.

இஃதென் சொல்லியவாறோவெனின், சமாதிக் காலத்தன்றி மற்றைக்காலத்து உனக்கின்ப மின்மையின் அது, தானன்றி நிற்கவெழுஞ் சச்சிதானந்தனேயாம்; குறிவழி இதனை அறியாதபோது நீ ஞானம் பெற்றதுமில்லை; பாசநீங்கினதுமில்லை; முத்தனானதுமில்லை என்றுணர்த்தியவாறாம்.

---

*, †. சிவஞானசித்தியார், சுப-அ-ம்-சூ. செ-௩0. ‡ திருக்குறள்-கடவுள் வாழ்த்து. செ-உ.

10. What iniquity is this that you style yourself and your quality the Satchidananda, which becomes manifest only when the ego has been lost. O you in bondage, if you continue to say, I, I, even after the attainment of divine wisdom, surely you have not realized Mukti and your bondage has not been removed.

---

கக. தோன்றுபர மானந்தச் சோதியன்றி நின்னறிவில்
தோன்றுசுக முண்டென்றாய் சுத்தப்பொய்—
[தோன்றுமின்பம்
ஈச னுயிரறிவ தீதன்றி வேறுண்டேல்
பாசமலா தேதுண்டு பார்.

*இதனால், சுவாநுபவப்பிரமாண சித்தமான ஆனந்தத்தை இருவகைப் படவுங் கருதுமாற்றால், ஆன்மானந்தமுண்டென் பதை நிராகரிக்கின்றாராகலின் இதுவுமது.*

(இ-ள்.) *தோன்றும் பரம ஆனந்தச் சோதி அன்றி நின் அறிவில் தோன்றும் சுகம் உண்டு என்றாய் சுத்தப்பொய்— (சமாதிகாலத்தில் என்னிடத்திற்றோன்றும் இன்பமொன்றே யென்றலின், அது சிவானந்த மாகலான், ஆன்மாவிற் கானந்த மின்றாயிற்று; அற்றன்று) என்னிடத்திற் றோன்றுஞ் சிவானந்தச் சோதியேயன்றி (அதனோடு ஆன்மசுகமுங்கூட இருவகைப்பட்டுத் தோன்றிற்று; அதனால் சிவனுக்கு, ஆனந்தமுண்டாமாறு போல) ஆன்மாவிற்கும் ஆனந்தமுண்டாக வேண்டுமென்றாய்; (பாலினதின்பமும் காமவின்பமும் என்னும் இருபொருளிரதமும் அநுபவிப்பார்க்கு வேறுபடத் தோன்றினாற்போல, இருவர் ஆனந்தமும் வேறுபடத்தோன்றாமையிற்) சுத்தப்பொய்யேயாம்; (அவ்வாறு தோன்றா*

மையின், ஒன்றே யென்னின்),—தோன்றும் இன்பம் ஈசன் உயிர் அறிவது ஈது அன்றி வேறு உண்டேல் பாசம் அல்லாது ஏது உண்டு பார்—அங்ஙனம் தோன்றிய வின்பமே (ஆன்மாவுக்குத் தன்னநுபவத்தால் அகமகிழ்ச்சியைச் செனிப்பிக்கும்) சிவம்; அதனையறிந்ததே யுயிர்; (இவ்வாறு அறிவதொன்றும் அறியப்படுவதொன்றுமாகிய) ஆன்மாவும் சிவனுமென்னும் இரண்டுமன்றி (வேறொன்றுமில்லையன்றே; அன்றி) உண்டெனின், (ஒரோவழித் திருவருள் சாரச் செல்வுழித் தரிசனமாதும்) மலமன்றிவேறின்மையின், (அதனையீண்டைக்கு) வேண்டியதேது! (பாலுநீருங் கூடக்கலந்துழி வேறுபட்டுத் தோன்றுததுபோல, சிவானந்தமும் ஆன்மானந்தமுங் கூட அநுபவிக்கப்படுமெனின், தன்னின்பந் தோன்றல் *கிரியாவிரோதமாகலானும் ஆன்மாச் சிவானந்த மநுபவியாதென்று கூறுவையாயின், உனக்கு † அவசித்தாந்தமாகலானும், அன்றியும் முத்தியிற் பேதவாதமாகலின், பிரிந்து நின்றுழிப்

---

* கிரியாவிரோதம்—ஒரு தொழில் நிகழும்போது அதனோடு பிறிதோர் தொழிலும் நிகழுதல். இங்கே சிவானந்தம் நிகழும்போது ஆன்மானந்தம் நிகழமுடியாது; அது நிகழுமென்றல் சிவானந்த நிகழ்ச்சியாகிய தொழிலுக்கு விரோதமாதல் அறிக.

இனி ஆன்மா இன்ப சொரூபனாயின், தன்னைத்தானே அநுபவித்தல் வேண்டும் எனப்பட்டு, அநுபவிப்பது ஆன்மாவும் அநுபவிக்கப்படுவது பிறிதொன்றுமாகிய அநுபூதிக்கு விருத்தப்படுதலின், கிரியா விரோதமாயிற்று என்று கோடல் பின்வருவனவற்றிற்கு மொக்கும்.

† அவசித்தாந்தம்—ஒரு சாத்திர சித்தாந்தத்தை அநுசரித்துப் பேசத்தொடங்கி அதற்கு மாறான சித்தாந்தத்தை அநுசரித்துப் பேசி முடித்தல். அப—விபரீதம், சித்தாந்தம் — முடிந்தமுடிபு: அப்—தமிழில் அவ என்வரும்.

பிரிந்து அவ்வின்பந்தோன்ற வேண்டும்; அவ்வாறின்மையின், அத்துவிதமுங்கொள்ள வேண்டுமென்றுற் கற்பித்தல் கூடாமையின், அங்ஙனம் கூறியதனுற் பயனின்றுகலானும் அதனைத் தேர்ந்து கொள்வாயாக. எ - று.

*“சிவாநுபவஞ் சுவாநுபூதிகமாம்” எனச் சித்தியுட் கூறப்படுதலின், சிவானந்தமும் ஆன்மானந்தமும் உண்டென்பது பெறப்படுதலான், அதனைத்தடுத்தல் இயலாதெனின், அற்றன்று; †“இங்கிலைதானில்லையேல்” என்பது முதலாக மேலே அச் செய்யுளிற் கூறியவற்றையும் ‡“சாக்கிரத்தே” “கருவிகழிந்தால்” எனப் பின்னர்க் கூறியவற்றையும் நோக்கின், அது தூரம் போய்த் துச்சமாய்விடுமென்க. என்னை? சிவஞான வதிகாரப்பட்டு வருதலின், §“சிவாநுபவம் சுவாநுபூதிகமாம்” என்பதை உம்மைத் தொகையாக்கி ஆன்மானந்த மென்பதொன்று; சீவகுணமாய்ச் சிவானந்தத்திற்கு வேறுக வுண்டெனக் கோடற்கு எவ்வாற்றுனு மிடந்தாராதாகலி னென்றுணர்க.

||“சிவாநுபவம் சுவாநுபூதிகமாம்” என்பதன் பொருட்டன்மை இதுவென வுணரும் அறிவின் மதுகையில்லாதாரன்றி, அஃதுடையார் அதிகார முறைபற்றி “ஏற்புழிக் கோடல்” என்னு முத்திக் கியையச் “சிவாநுபவத்தைத் தமதாகக் கொண்டநுபவிக்கப் பெறலாம்” எனத் தடுமாற்றமொருவாற்றுனுமில்லாத வுண்மைப் பொருள்காண்பர்.

$“சிவாநுபவஞ் சுவாநுபூதிகமாம்” என்புழித் தொக்கு நின்றவாறுவது முறையே செயப்படுபொருண்மைக் கண்ணும் வினைமுதற்பொருண்மைக்கண்ணும் வந்த காரகம்.

---

*, †, §, ††, $. சிவஞான சித்தியார் சுபக்க அ-ம் சூ-செ. கூச. ‡ஷை-ஷை- = ஷை-ஷை-கூரு.

* "அமிழ்தவுண்டி கடவுளருண்டி" என்றாற்போல, என வேற்றுமைச் சந்தியாக வினைமுடிபு காட்டி, எடுத்துக்காட்டு மெடுத்துக்காட்டி உண்மை யுரை யுரைக்கப்பட்டமை காண்பார், அவ்வாக்கியத்தை அல்வழிச் சந்தியுட்படுத்து உம்மைத்தொகை யெனப் பன்னுமா றுன்னுறொன்ப தொருதலே.

தோன்றுதல் — † விறகிற்றீயினன் பாலிற்படுநெய் போன்—மறையநின்றுளன் மாமணிச்சோதியான்—உறவு கோனட் டுணர்வுகயிற்றினுன்—முறுகவாங்கிக் கடைய முன்னிற்"றல். எனே இரண்டற்கு மிஃதொக்கும். இதுதான் சமாதி; சமாதி இருவகைப் பற்றுமற்று ஓர் மனதாய்க் கடவுளைப்பற்றி நின்று அவரைத் தியானித்தல்.

‡ "மற்றுப்பற்றெனக் கின்றிநின்றிருப் பாதமேமனம் பாவித்தேன்" என்பதுமது. உறவு—††"அயரா அன்பு;" ஆகுபெயர். உணர்வு—இடையறாத்தியானம். இவை $ உருவக வலங்காரம்.

பரமானந்தம்—மேலான வின்பம்; பரத்தினுடைய ஆனந்தமுமாம். பரமானந்தம், சிவானந்தம், மோக்கானந்தம், பிரமானந்தம் என்பன ஒருபொருளன.

சோதி—ஞானப்பிரகாசம்; எனவே ஞானசொரூபி என்றதாம். அறிவு—ஆன்மா. சுத்தப்பொய்—மெய்சிறிதும் விரவாதபொய். இது ஈதெனநீட்டல். ஏதுவென்னும் வினைப்

---

* சித்தியார். சுப-சூ அ. செ. ௬௫ உரையுட் காண்க. † திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்-பொது தனித்திருக்குறுந்தொகை, செ-௧௦.

‡ சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம். திருப்பாண்டிக் கொடுமுடி. செ-௧. ††சிவஞான போதம் சூ-ம். ௧௧. $ "உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்—தொன்றெனமாட்டினஃ துருவகமாகும்." தண்டியலங்காரம். சூ-ம். ௩௫.

பெயர், ஈண்டு இன்மை குறித்து நின்றது. உண்டேல் ஏலீற்று வினையெச்சம். பார் — அறி; ஏவல்வினை.

இன்னும் இதன்றிறம் மாபாடியத்துள் விளங்க விரித்தோதுதலின், அதனை ஆண்டுக்காண்க.

இஃதென் சொல்லியவாறோவெனின், பாலுநீருங் கலந்தவழி இரண்டும் வேறுபட்டுத் தோன்றாததுபோல, இரண்டானந்தமும், வேறுபாடின்றி ஒருங்கநுபவிக்கப்படுமெனின், தன்னின்பந் தோன்றல் கிரியா விரோதமாகலானும், ஆன்மாச் சிவானந்த மநுபவியாதெனின், அவசித்தாந்தமாகலானும், முத்தியிற் பேதவாதங் கொள்ளுதலின், பிரிந்து நின்றுழியும் அவ்வின்பந் தோன்றல் வேண்டும்; அஃதின்மையானும், அதுபற்றி அத்துவிதங்கொள்ள வேண்டின், கற்பித்தல் வேண்டும்; கற்பனை பயன்றராதாகலானும் இரண்டானந்தமும் ஒருங்கநுபவிக்கப்படு மென்றல் பயனில் கூற்றென்றவாறும்.

11. You say, that there is, besides the effulgence of the supreme joy, a joy that springs in your intelligence. This is utterly false. The joy that springs is Sivam. The soul is the perceiver. If there is aught else, what can it be except the bond ?

---

கஉ. அண்ணலைப்போ லானந்த மான்மாவிற் குண்டாகில்
எண்ணில் பிறப்பிறப்பை யெய்திடுமோ—கண்ணிருளை
ஓட்டாதோ வாதவனுக் கோத்தவொளி யுண்டாகில்
கேட்டாயோ கேட்டிலையேற் கேள்.

இதனால், முற்கூறிய வாறேயன்றி, ஆகமப்பொருள் கோடலும் சுவாநுபவ விவேகமும் யுத்திபூர்வமன்றிக் கூடா

மையின், நியாயாநுசாரத்திஞலுண்டாம் யுத்திவகையால் இன்னும் ஆன்மானந்த நிராகரணம் பண்ணுகின்ருர்.

(இ - ள்.) அண்ணலைப்போல் ஆனந்தம் ஆன்மாவிற்கு உண்டு ஆகில் எண் இல் பிறப்பு இறப்பை எய்திடும் ஓ— (நெடுங்காலந் தவஞ்செய்து சாட்சாத்காரம் பெற்றுழி முத்தான்மாக்களால் அநுபவிக்கத்தக்கதன்றே!) பதியினது குணரூபமாயுள்ள ஆனந்தம்; அதுபோல, (அவனுற் செய்யப்படும் ஐந்தொழிலிற்பட்டுழலும்) ஆன்மாவிற்கும் ஆனந்தமுண்டென்றுல், (அவ்வானந்தமும் பிறரால், தவஞ்செய்து பெறவேண்டுமாற்ருல் அதுவும் பதியாகலின்,) அளவிறந்த பிறப்பையும் இறப்பையும் அடையவேண்டுவதில்லையன்றே! (அங்ஙனமடைதலின் அது பதியன்மையின், அவனது குணம் போல ஆனந்தமுமின்று; சித்துருவத்தா னிருவரு மொத்திருக்கவும் ஒத்தவானந்தமில்லாத தெவ்வாறெனின்), — கண் இருளை ஓட்டாது ஓ ஆதவனுக்கு ஒத்த ஒளி உண்டு ஆகில் கேட்டாய் ஓ கேட்டது இல்லை எல் கேள்—(தேசோரூபத்தாலொத்திருக்கவும்) கண் கதிரோனைப்போல இருளை யோட்டுதற்குரிய (விண்ணளவாய்விரிந்த) பேரொளியிலதாயினுற் போல வென்றறிவாயாக; அது நீ, சற்குருவை வழிபட்டுக் கேட்டாயோ? இல்லையோ? (கேளாமையினன்றே இவ்வாறு மயங்குவது; இனியாகினுஞ்சென்று) கேட்பாயாக. எ - று.

அண்ணல்—தலைவன்; பசுபதி என்றவாறு. பெருமையிற் சிறந்தோனுமாம்; அது * "பிறப்பிறப்பாதியுயிர்க்குணமின்மை".

இனி, அண் நல் ஐ எனப் பிரித்து ஆன்மாக்களோடு அத்துவிதமாகச் சேர்ந்த சிவன் என்றலுமாம்; அண்ணல்-சேர்தல்; ஈண்டு அத்துவிதச் சேர்க்கை. நன்மை,

* அரதத்தாசாரிய சுலோக மொழிபெயர்ப்பு.

*"அவையே தானே யாயிரு வினையிற்—போக்கு வரவு புரிய வாணையி—னீக்க மன்றி நிற்" றல். ஐ-சிவன்.

அண்ணல், ஆனந்தவடிவினன் ஆகலான், அண்ணலைப் போல் என்றார். இனி, குணகுணிப்பாவத்தின்வைத்து, அண்ணலைப்போலானந்தமென்பதனைக் †"கண்ணப்பனொப்பதோரன்பு" என்றாற்போலக் கொண்டு; அண்ணலுடைய ஆனந்தம் போலும் ஆனந்தமென்றலுமாம்.

உண்டாகில் என்பன இரண்டும், உண்டாகாமை உணர்த்திநின்றன. பசுவுக்கன்றிப் பதிக்குப்பிறப்பிறப்பில்லையென்பார், 'எண்ணில் பிறப்பிறப்பை யெய்துமோ' வென்றார். இக்கருத்துப்பற்றியே,

‡" எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ்
சொல்லாற் றெளிந்தோநஞ் சோணேசர்—இல்லில்
பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்துண்
டிறந்தகதை யுங்கேட் டிலேம்."

என்னுந் தெளிபொருள்விளக்கத் திருவெண்பாட்டெழுந்ததூஉமென்று கடைப்பிடிக்க.

எய்துமோ என்புழி ஓகாரம் எதிர்மறை. ஏனைய விரண்டும் வினா. கேட்டிலேயேல் என்பது ஏவீற்று வினையெச்சம்; கேட்டது இல்லையேல் என்பது ஈறு கெட்டுத் தொகுத்தல் விகாரம் பெற்றுக் கேட்டிலேயேல் என நின்றது.

ஆண்டவன் உயர்வும், அடியவன் இழிவும், ஆண்டவன் அடியவனை ஆளுந்திறமும், அடியவன் அவனால் ஆளப்படுந் திறமும் "பட்டப்பகல் போல வெட்டவெளியாக" விளங்குமாறு, எண்ணில் பிறப்பிறப்பை யெய்துமோ என்று அவ்வாறுதெரித்தார்.

---

* சிவஞானபோதம், சூ-ம். உ. † திருக்களிற்றுப்படியார், செ-கூஉ. ‡ அருணகிரியந்தாதி, செ-எ0.

நெடுங்காலஞ் செய்யுந்தவமாவதிஃதென்பதை,

*"கிரியையென மருவுமவை யாவு ஞானங்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கு முண்மைச்
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூ பங்கள்
மருவியிடு முயர்ஞான மிரண்டா மாறு
மலமகல வகலாத மன்னு போதத்
திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதுஞ்
சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே."

என்னுஞ் சிவப்பிரகாசத் திருவிருத்தத்தா னுணர்க.

இஃதென் சொல்லியவாறோ வெனின், கண்ணானது இருளையோட்டாமையின், அதனிடத்துக் கதிர் ஒளிபோலும் ஒளியின்மை தெளியப்படுமாறுபோல, ஆன்மா, அளவில் பிறப் பிறப்பெய்துதலான், அதனிடத்துச் சிவானந்தம்போலும் ஆனந்த மின்றென்பது தெளியப்படு மென்றவாறும்.

12. If you say that the soul has the quality of joy in it just as God has, why should it take countless births and deaths? Though both be forms of light, can the light of the eye, if it has light similar to that of the Sun, dispel darkness like the light of the Sun? Have you heard of this? If not, listen.

கங. ஓரின்ப மில்லா துறுமலங்கள் போக்கியிடும்
பேரின்ப நின்குணமேன் பேதாய்கேள்—பேரின்பம்
நின்குணம்போற் றேன்றுமது நீயாகை யானிரும்பு
தன்குணமோ தீயியல்பு தான்.

இதனால், ஆன்மானந்த முண்டென்பதை, ஆகமம் அநுபவம், அநுமானம் என்னும் மூவகைப்பிரமாணங்களானும்

* சிவப்பிரகாசம், பாயிரம், செ-கo.

முன்னர் நிராகரித்தமையின், அஃதின்றென வுடன்பட்டு நின்றவனுக்கு அவன்பாற் றோன்றிய வின்பம், அவனோ டொற்றுமைபெறத் தோன்றியதைத், திருட்டாந்த பூர்வமாக இன்னுமொருவாற்று னுணர்த்துகின்றார்.

(இ - ள்.) ஓர் இன்பம் இல்லாது உறுமலங்கள் போக்கி யிடும் பேர்இன்பம் நின்குணம் என் பேதாய் கேள்—ஒப்பற் றவின்பவடிவான சிவரூபத்தை யறியவொட்டாது மறைத் திருக்கும் மலங்களைப் போக்குகின்ற வப்பேரின்பம், இப்பொ ழுது உன்பால் நிகழ்ந்தது கொண்டு அதனை யுன் குண மென்றே கூறிக்கிடக்கு மடவோய்! அதனிலை யுணர்த்துதுங் கேள்,—பேர்இன்பம் நீ ஆகையால் அது நின்குணம் போல் தோன்றும் இரும்பு தன்குணம் ஓ தீ இயல்புதான்— (அங் ஙனம் தோன்றும்) பேரின்பந்தானே நீயா யிரண்டற நிற்ற லின் உன்குணம்போற் றோன்றும்; (அஃதெவ்வாறெனின்,) இரும்பைச் சேர்ந்த தீயின் குணம் இரும்பின் குணமாகவே தோன்றுமாறுபோல். எ - று.

அங்ஙனம் அறியப்படாத சிவரூபமான பேரானந்தமே உபாசனையால் மலபந்த நிவிர்த்திசெய்து முத்திதிசையிற் றோன்று மென்க. மலங்கள் – ஆணவம், மாயை, கன்மம் மூன்று; திரோதாயி, மாயேயம் இரண்டுஞ் சேர்த்து ஐந் தென்றலு மொன்று.

அங்ஙனமாயின் * சங்கிராந்த மதப்பிரவேசமுண்டாம் பிறவெனின், அற்றன்று; என்னை? அவனைப்போற் சிவகுண

---

* சங்கிராந்தமதமாவது :—ஆன்மாவின் சந்நிதியிற் காந்த பசாசம்போல உடல் இயங்குழி அதன்கணின்று கருவிகளை விட யங்களை அநுபவிக்கும். மலம் நீங்கும் வழிக் கண்ணாடியின் முக வொளி தோற்றுமாறுபோல, முதல்வன் றிருவருள் ஆன்மாவின் மாட்டுச் சங்கிரமித்துத் தோன்றும். அவ்வழி உப்பளத்திலிட்டவை

மான வானந்தம், ஆன்மாவிற்குக் குணமாய் வருமென்னுது, தருமி ரூபமான சிவன் அவ்வாற்ருன் ஆன்மாவிடத் தைக் கியந் தோன்ற மாத்திரம் நிற்ப னென்றலான்.

இனி அம்மதப் பிரவேசம் ஆன்மானந்த வாதிக்காயிற் கூடும்; என்னே? உண்மையிற் சீவனுக் கானந்தமின்மையான் அது சிவகுணமாகலின், அதனைச் சீவகுணமாகக் கூறு தலின்.

ஓர் இன்பம், வினைத்தொகை யெனக்கொண்டு ஞானி களால் அறிந்தநுபவிக்கப்படும் இன்பமென்றலுமொன்று. அதனை,

* "உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம்பலத்தொருத்தன்
குணந்தான்வெளிப்பட்டகொவ்வைச்செவ்வாயிக்கொடியிடைதோள்
புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்
மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே."

என அநுபவநிலைபற்றி யெழுந்த திருக்கோவையார் முதலிய வற்ருனன்கறிக. இன்னும், 'ஓர் இன்பம் இல்லாது உறுமலங்கள்' என்பதற்கு ஒருவகை இன்பமுமில்லாமல் ஆன்மாக் கள் இருத்தற்குக் காரணமாகிய ஆணவமலம் என்றலுமாம்; இப்பொருளுக்கு மலங்கள் என்புழிக் கள்—அசை. இன்னும், 'இன்பம் இல்லாது உறுமலங்கள்' என்பதற்கு இன்பரூப சிவத்திடத் தென்றுமில்லாமல் ஆன்மாவிடத் தியற்கையாக வுள்ளமலம் என்றலுமாம்.

---

யெல்லாம் உப்பாமாறுபோல, ஆன்மாச் சிவமேயாய் அவ்வான் மாவின் சந்நிதியில் அறிவனவாகிய பசுகரணங்களுஞ் சிவகரணங் களாய் மாறிச் சிவத்தை அறியும் என்பதாம்.

* திருக்கோவையார், செ-கூ.

போக்கியிடும் என்பதில் இடு பகுதிப்பொருள் விகுதி. * பேதை விளியுருபேற்றுப் பேதாய் என நின்றது. கேள் முன்னிலையேவல்; அது எச்சரிப்பின்மேலது. ஆன் இரும்பு என்பதற்குக், தீயாகிய வவ்விடத்திலுள்ள இரும்பு எனப் பொருள்கொள்க. ஆன்—அவ்விடம். ஓகாரம் எதிர்மறை. தன்தான் சாரியையும் அசையுமாம்.

'நின்குணம் போற்றேன்று மது நீயாகாயாலிரும்பு' என்னும் பாடத்திற்குப் பேரின்பம் பிரிப்பின்றி நின்னிட நிற்றலின், நின்குணம்போற்றேன்றும்; அக்குணம் நீயாக மாட்டாய்; என்க. என்றது உயிராகிய வுன் குணமன்றென்றபடி; எதுபோலவெனின், தீயின் குணமாகிய சிவப்பும் சூடும் அதனொடு சேர்ந்த இரும்பின் குணம்போலத் தோன்றினும் அதன் குணமாகாதவாறுபோல என்க. இப்பாடத்திற்கு, கு சாரியை. ஆல்அசை.

இஃதென்சொல்லியவாறோ வெனின், நெருப்பைச் சேர்ந்த இரும்பின்கணுள்ள செம்மையும் வெம்மையும் அதன் குணமாகாது தீயின் குணமாயினாற்போல, சமாதிக் காலத்து ஆன்மாவிடத்துத் தோன்றிய ஆனந்தம் பிரிப்பின்றி நிற்கும் அத்திறத்தான் ஆன்மகுணம்போலத் தோன்றினும் அதன் குணமாகாது சிவகுணமேயா மென்றவாறும்.

13. Hear you, Oh! fool, who call that supreme joy which removes the malas that hide the unique joy, Siva's form, from being perceived, as your quality, simply because it springs in you. It appears like your quality because it stands one with you. Are the glow and warmth the qualities of the iron? They are the qualities of the fire

---

*நன்னூல், பெயரியல், சூ-ம் ௬-ம். " ஐயிறு பொதுப்பெயர்க் காயு மாவும்—உருபா மல்லவற் றாயு மாகும்" என்பதில் "அல்லவற் றாயு மாகும்" என்பதனால் ஆய் விளியுருபாயிற்று.

கச. ஆசகற்றி நின்னறிவி லானந்த மாஞ்சிவனைக்
கூசகற்றி யுன்றன் குணமென்று—பேசியிடும்
பேயாவா திக்கேது பேசிடினீ தானந்த
மாயாவா திக்கே மகன்.

இதனால், முற்கூறியவாறே பிரமாண விரோதங் கண்டும் ஆன்மானந்த முண்டென்பானைச் சைவ சமயத்திற்குப் புறனாகத் தள்ளுமாறு கூறுகின்றார்.

(இ - ள்.) ஆசு அகற்றி நின் அறிவில் ஆனந்தம் ஆம் சிவனை கூசு அகற்றி உன்தன் குணம் என்று பேசியிடும் *பேயாவா—மலமகற்றி நின்னறிவின் மகிழ்ச்சி யுண்டாதற்குக்காரணரூபமாயுள்ள சிவானந்தரூபமான இரதத்தைக் கூச்சமில்லாமல் உன்றன் குணமென்று கூறும்பேயா! வருக,—திக்கு ஏது பேசிடின் நீதான் அந்த மாயாவாதிக்கு மகன்—(நீ கூறுமாறுபோல ஒரு மதவாதிகளுங் கூறாமையின், அதனானே ஒரு சமய நூல் வசனமாயினும் பிரமாண மின்மையின்) உனக்கு வேறோர் புகலிட மில்லையன்றே! (ஆயினும் ஒருவழி சொல்லுதுங்கேள்;) சொல்லின் (நீதான் மாயாவாதமடைதற்குரிமை யின்மையின்,) அம்மாயாவாதி மகனென (ஒரு பெயர் புதிதாகப் பெற்றுத் திரிவாயாக.) எ - று.

வருவித்துக் கூறப்பட்டன குறிப்பெச்சம்.

ஆசு காரிய வாகுபெயர். 'அகற்றி' என்றது, ஆன்மானந்தமாயின், மலமகற்று மதுகை யதற்கின்மையின், அதனானும் அது சிவரூபமென்பது தெரித்தற் கென்றுணர்க.

---

* நன்னூல், பெயரியல், ருo-ம் சூ-ம் "ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்—அளபீ றழிவய னீட்சி" என்பதனால் பேயன் என்பது ஈற்றயல் நீண்டு ஈறு கெட்டது; விளியுருபாயிற்று.

கூசு முதனிலைத் தனிவினை; "கூசாரம்பூண்ட" என்புழிப் போல. பலவாற்றானும் தோல்வித்தானம் பெற்று வைத்தும் நாணின்றி முன்னர்க் கூறியவாறே கூறி நிற்றலின், கூச கற்றி யென்றார்.

ஆண்டவனை அடிமையாயினான் தன்னியல்பி னடங்கிய தாகக் கூறுவது கேட்பிற் பிறர் அவனை நகுவாராகலின், அத ற்கு நாணுமை கருதி அங்ஙனங் கூறினானென்றவு மொன்று.

ஒருவன் ஒருபொருளாக வைத்தெண்ணப்படாத அத் துணை இழிஞனாயினும், ஓரோவழி வலியபேய் ஏறியவழி, அவன்பாலுள்ள சன்னத மொழியுமளவும் அவன் வார்த்தை யை உலகர்கேட்டு நிற்றல் கண்கூடன்றே! அதுபோல, ஆன் மானந்தவாதி * "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய் வில்லை—செய்ந்நன்றி கொன்ற மகற்கு." என்னும் பொய்யா மொழிக் கிலக்கியம் புதுக்குவானாய்ச் சிவபிரான் கொடுத்த பேரானந்தத்தை மறந்து அதனைத் தன்னானந்த மென்று கூறி நிற்றலின், சிவத்துரோகியாகலான், ஒருவாற்றானும் பெருமை சிறிது மிலனாகலின், அவன் வார்த்தை கேட்கத் தக்கதன்றெனினும், சித்தாந்தியெனப் பெயர் படைத்துக் கொண்டு சிவாகம வசனங்களுட் சில கூறுதலின், அவை முழுதுங் கேட்கவேண்டுமாகலானும், அவனை நோக்கிச் சங் கோத்தரமாகச் சில கூறவேண்டுமாகலானும் பேயா வா என்றார். மாயாவாதியை,

† "தன்னிற் றன்னைத் தானே காணிற்
கண்ணிற் கண்ணைக் காணவும் படுமே"

---

* திருக்குறள், செய்ந்நன்றி யறிதல், செ-கo. † மாயா வாதி சங்கற்ப நிராகரணம். செ-அடி-ககூடு-ககூகூ.

என்றற் றொடக்கத்த பிரமாண விரோதங்காட்டி மறுத்த வழி, உடன்பட்டும், முற்கூறிய தொழியாது பின்னும் அத னையே கூறிப் பிதற்றுதலின், அவ்வியல்பினனுகிய ஆன்மா னந்த வாதியை அவன்றனே யென்னது அவன் மகனென்ற தென்னையெனிற் கூறுதும்:—அம்மாயாவாதிபோல இவ் வா ன்மானந்தவாதி "ஏகான்மவாதம்" கூறுமையானும், முத்தி யிற் றருமிபேதம் கூறுதலானும் முறையே மாயாவாதியுமல் லன்; சைவனுமல்லன். மாயாவாதி முத்தியிற்றருமி பேதமில்லை யென்றல், முத்தியிற் சச்சிதானந்த தருமம் சிவனுக்குஞ் சீவ னுக்கு மொக்கு மென்னுஞ் சைவசித்தாந்த சமயத்திற்கு ஒருவாற்ற னெக்குமத்துணை யுரிமைபற்றி அவனை மாயா வாதி மகனெனத் கள்ளிற ரென்றறிக. அதனுனன்றே! பிதாவினுடைமை பிள்ளை பெற்றாங்கு, அவன் கூறும் பிரம கீதாவசனம் இவனுமுட்கொண்டு உதாகரிப்பதூஉ மென்க.

'மாயாவாதிக்கே' என்பதன்கண் ஏகாரம் பிற மதத்தரைப் பிரித்தலிற் பிரிநிலை; அதனேடு தேற்றம் என்றலும் இழுக் காது. அந்த என் னும் உலகறிசுட்டு, முத்தியில் தருமி பேத மில்லை என்கின்ற உரிமையுடைய என்னும் பொருள் குறித்து நின்றது. பேயா ஆ திக்கு ஏது எனப் பிரித்து ஆ என்பதை இரக்கக் குறிப்பாக வைத்துப் பொருள் கோடலும் ஒன்று. இத்துணையும் சைவனென வந்தவனைப் பலர்க்கும் புதல்வ னெனக் கூறலாகாமையின், இவனியல்பிற்குச் சிறிதொப்பு மைபற்றி நின்ற மதம் பிறிதுண்டெனினு மதனை நீக்கியதூஉ மாம். அஃதியாதெனின், * மேற் கூறுமாற்றான் விளங்கும்.

பிரதிவாதி † நிக்கிரகயோக்கியமானதைச் சொல்லியிருக்க வும் அதனை யறிந்து நிக்கிரகித்துப் பரிகாரம் பண்ணுதிருப்

* மேல். கரு-ம் வெண்பா. † நிக்கிரக யோக்கியம்—கண்டிக் கத தகுந்தது யோக்கியம்-தகுதி.

பது * "பரியநு யோச்சியோ பேக்ஷணம்" என்னுந் தோல்வித்தானமாயினமை யறிக.

இஃதென்சொல்லியவாறோ வெனின், சிவானந்தம் சிவகுணமன்றெனக் காரணத்தான் விளக்கி ஆன்மானந்தவாதியைச் சைவனன்றெனத் தெரித்தவாறும்.

14. Come on, you, devilish one! that shamelessly called your quality as the Sivam, who dispels the malas and who stands as the joy in your intelligence. Where is any refuge for you? You are the (descendant) son of that Mayavadin.

---

கரு. என்றும் பிரியா விருளருளா னீங்கவின்பாய்த்
துன்றுசிவ போகமெனச் சொல்லாமல்—உன்றன்
நலம்போக மென்றுரைத்தாய் நாமறிவோ நீயும்
மலம்போக முத்தியென்ப வன்.

இதனால் ஆன்மாநந்தம் சிவானந்தமே யென்பதற்குக் காரணம் கண்டுவைத்தும் அங்ஙனங் கொள்ளாதானைப், பிறிதொரு மதத்தவனாகவு நிறுவிச், சைவத்திற்குப் புறம்பாகத் தள்ளுகின்றார்.

(இ - ள்.) என்றும் பிரியா இருள் அருளால் நீங்க இன்பு ஆய் துன்று சிவபோகம் என்னச் சொல்லாமல்—அநாதியே பிரியாத ஆணவம் அருளால் நீங்கலான், (இன்று சிவம்) ஓரின்ப வடிவாய் (வந்து கலந்து கோடலின், அதனைச்) சிவபோக மெனவே சொல்ல வேண்டும்; அவ்வாறு சொல்லா

---

* பரியநு யோச்சியோ பேக்ஷணம்—சபையாருக்கு ஆட்சேபித்துக் காட்டற்குரிய தோல்வியை எடுத்துக் காட்டலிலே விருப்பின்றி இருத்தல். பரியநுயோச்சியம்--வினுவற்பாலது. உபேக்ஷணம்-விருப்பின்மை.

மல்,—உன்தன் நலம் போகம் என்று உரைத்தாய் நாம் அறிவோம் நீயும் மலம் போக முத்தி என்பவன்—உன்றன் இனிய குணம் உனக்குப் போகமாய் விளைந்த தென்றாய்; அதனான் உன்னை யாமறிவோம்; (யாராக வறிவீரெனின்,) மலம்போக முத்தி யென்பவனாக (அறிவோம்.) எ - று.

இருள்போக வேண்டிப் பாவிக்கப்பட்ட ஆனந்தமே வெளிப்படலின், அவ்வானந்தத்தான் இருள்போகக் கண்டுவைத்தும், அதனைப் போக்கமாட்டாப் பிறிதொன்று, தனக்கு வெளிப்பட்ட தென்பது, "நினைத்த தொன்று நிகழ்ந்த தொன்று" என்றாற்போல வரும் நியாயவிரோதமாகலான், அது தோன்ற, 'என்றும் பிரியா விருளருளா னீங்கவின்பாய்த்—துன்று சிவபோகம்' என்றார்.

இதனுள், ஆனந்தத்தைப் பாவிக்கச் சொன்னதூஉம், அவ் வானந்தம் பெற்ற பின்னரே மலநிவிர்த்தி வருமென்றலின் அஃததனை நிவிர்த்திக்க வல்லதென்பதூஉம், ஆன்மானந்தமாயின், அது செய்யா தென்பதூஉம் கண்டுகொள்க. இவ் வின்பமே சிவபோக மென்பது.

"மலம்போக முத்தியென்பவன்" எனச் சங்கற்பிக்கப் பட்டவன் பிறிதோராற்றாற் கூறுதலேயன்றி, இவ்வா* றானந்தாபிவியத்தி கூறுமையின், இவன் அவனன்றாம் பிறவெனின், இதனானேயன்றே முன்னர் இவன் ஒரு மதப்பிரவேசமுங் கிடையாதவன் என்றதூஉம் என்க.

அதனானே நீயும் மலம்போக முத்தி யென்பவன்; எனவே, அவன்போல ஒருவனென்றே பெறக் கிடத்தலின், அவனன்மை யியல்பேயாமென்க.

---

* ஆனந்தாபி வியத்தி—ஆனந்தம் வெளிப்படுதல். ஆனந்தம்—சுகம். அபிவியத்தி—வெளிப்படுதல்.

அங்ஙனமாயின் *வேறொன்றன்பாற் படுத்தாது, இதன் பாற்படுத்த வேண்டியதென்னை யெனின், முன்னர்க் கூறுஞ் சில நியாயங்களான், இருவருக்கும் மலம் போக முத்தி யென்பது, வெளிப்பட நிற்றலின், இதன்பாற் படுத்திய தென்றறிக.

அவன் ஒருவாற்றான் அறிவுடைமை கூறி மல நிவிர்த்தி முத்தி யென்பவன். இவன் ஒருவாற்றான் அறிவுடைமையும் ஆனந்தமுங் கூறி மல நிவிர்த்தி முத்தி யென்பவன். இவை தம்முள் வேற்றுமை.

என்றும் என்பதின் உம்மை முற்று. என்றும் பிரியா விருள்—ஆணவம். அருள்—சிவசத்தி. நீங்க என்னுஞ் செய வெனெச்சம் ஏதுப்பொருண்மைக்கண் வந்தது. துன்றுசிவம் வினைத்தொகை. போகம்—அநுபவிக்கப்படுவது. சொல்லா மல் மல்லீற்று வினையெச்சம்.

உன் என்பது தனக்கென ஒன்று மில்லாதவன் என்னும் பொருள்பட நின்றது. தன் சாரியை. நலம் - இன்பம். உரைத்தாய் முற்று. நாம் உயர்வுபற்றி வந்த பன்மைத் தன்மை. நாம் என்றதற்கியைய அறிவோம் என்னும் பன்மை முடிவுகொடுத்தார். நீயும் என்பதில் உம்மை இறந் ததுதழீஇய வெச்சம். என்னை? மலமகல முத்தியென் பவனே யன்றி என நிற்றலான். மலம் ஈண்டு மும்மலங் களுள் வைத்து ஆணவம்.

இஃதென்சொல்லியவாறோ வெனின், ஆன்மானந்தம் என்று ஒன்று சிவானந்தத்திற்கு வேறாயில்லை யென்பது அநுபவத்தான் அறிந்து வைத்தும், அதற்குமாறாக உண்டென்ற

---

* வேறொன்றன்பாற் படுத்தல்—வேறொரு மதத்தின் பகுதி யிற் சேர்த்தல்.

லின், ஆன்மானந்த வாதியை முந்தை நிலையின் வேறு படுத்தி 'மலம் போகமுத்தி' யென்னும் வாதியெனச் சைவத்திற்கு வேறாய்த் தள்ளியவாறும்.

15. When the anava that without beginning had remained inseparably with the soul has left it by God's grace, Siva comes and unites with it in the form of joy. You do not call it Sivabhoga, but call it your own joy. We know who you are. You are the one who says that Mukti consists in the removal of the malas.

---

கசுா. தன்பிரம கீதைவே தாந்தஞ் சிவாகமநூல்
இன்பமுயிர்க் குண்டென் றியம்பியதேல்—இன்பஞ்சீ
வான்மா*விற் குண்டென் றறைந்ததன்று நின்றபர
மான்மா†விற் குண்டென்ற தாம்.

இதனால், அங்ஙனம் நிராகரிக்கப்பட்ட ஆன்மானந்த வாதி தனதுட்கோள் சித்திக்கற்கு ஆகமவசனமிடங் கொடாமையின், தனக்கியைந்தன போலப் பிறநூல் வசனங்களும் சில பிரமாணமாகக் கொண்டா னன்றே; அவையும் அவன் கருத்துக்கியையாது சிவானந்தாநுகூலமாயே முடிந்த துணர்த்தி அவனுட்கோள் சிதைக்கின்றார்.

---

*† சீவான்மா பரமான்மா இரண்டும் உண்டென்பதை, "உன்னுமளவி லுணரு மொருவனைப்—பன்னு மறைகள் பயிலும் பரமனை—யென்னு ளிருக்கு மிளையா விளக்கினை—யன்னமயமென் றறிந்து கொண்டேனே." "அன்ன மிரண்டுள வாற்றங் கரையினிற்—றுன்னி யிரண்டுந் துணைப்பிரியா தன்னந்—தன்னிலை யன்னந் தனியொன்ற தென்றக்கால், பின்ன மடவன்னம் பேறணு காதே." என்னும் திருமந்திரத்தானு முணர்க.

(இ - ள்.) வேத அந்தம் தன் பிரமகீதை சிவ ஆகமம் நூல் உயிர்க்கு இன்பம் உண்டு என்று இயம்பியது எல்— வேதசிரசான உபநிடதமும், அதன் வழித்தாய்த் தோன்றிய சூத சங்கிதையிற் பரமகீதையும், சித்தாந்தமான சிவாகமமுத னூல் வழி நூல்களும் சீவனுக்கானந்த முண்டென்னுவன்றே; (அங்ஙனம் உண்டெனக் கூறுதல் ஒரோவழியுளதாயின்),— இன்பம் சீவ ஆன்மாவிற்கு உண்டு என்று அறைந்தது அன்று நின்ற பரம ஆன்மாவிற்கு உண்டு என்றது ஆம்—சீவான்மா விற்குக் குண ரூபமாயுள்ள வினிய விரத முண்டென்று கூறாது, முக்காலத்து முண்மைப்பொருளாய்ப் பரஞ்சுடராய் நின்ற பரமான்மாவிற்கே அவ்வாறனுபவித்தற் குரிய இரத ரூபமாயுள்ள வானந்த முண்டென்றதாம். எ - று.

தன்பிரமகீதை என்றது அவனுக் கநுகூலமாகாமை குறி த்துப் பரிகாசஞ் செய்தது; தன் என்றது ஆன்மானந்த வாதியை.

இன்பஞ் சீவான்மாவிற் குண்டென்றறைந்த தன்று; நின்ற பரமான்மாவிற் குண்டென்றதாம். எனவே, இத்துணை யும், முன்னர் 'உன்னிலேதான் இல்லதெனவே நீயியம்பு மளை வைமுதற் சொல்லுமதுகேளாய் துணிந்து' என்றவாறே சொல்லியதாயிற்று.

இஃதென்சொல்லியவாறோ வெனின், பிரமகீதையும் வேதமும் உபநிடதமும் சிவாகமமும் உபவிருங்கணங்களும் ஆன்மாவிற்கு இன்பம் உண்டென்று கூறுதல், சீவான்மா விற்கன்று; பரமான்மாவாகிய சிவனுக்கு உண்டென்று கூறி யவாறும்.

பாடபேதமும் அதனுரையும்

* இன்பமுயிர்க் குண்டென்ற தேதோ வுபநிடதம்
துன்பில் பிரமகீதை சொன்னதெனில் — இன்பஞ்சீ
வான்மாவிற் குண்டென்ற றைந்ததன்று நின்றபர
மான்மாவிற் குண்டென்ற தாம்.

இதனால், பன்முறையும் நிராகரிக்கப்பட்ட ஆன்மானந்த வாதி தனதுட்கோள்சித்தித்தற்குப் பிறநூலுஞ் சில பிரமாணமாகக் கொண்டா னன்றே! அவற்றுனு மொவ்வாமை காட்டி அவனதுட்கோள் சிதைக்கின்றார்.

(இ - ள்.) உபநிடதம் பிரமகீதை துன்பு இல் இன்பம் உயிர்க்கு உண்டு என்றது ஏது ஓ என்னில்—வேதசிரசான வுபநிடதமும் (அதனியல்பானே பிறந்த சூத சங்கிதையிற்) பிரமகீதையும் துக்க நிவிர்த்தி முதலிய வற்றூற் பிறக்கு மக மகிழ்ச்சி (யன்றி) உயிருக்கு உண்டென்று கூறும் ஆன்மானந்த வசனம் எவ்வாறு முடியுமோ வெனின்,—இன்பம் சொன்னது சீவ ஆன்மாவிற்கு உண்டு என்று அறைந்தது அன்று நின்ற பரம ஆன்மாவிற்கு உண்டு என்றது ஆம்— அங்ஙனம் இன்பம் உண்டென்று சொன்னது சீவான்மாவிற்குக் கூறியதன்று; (அவன் சீவனை மித்தையாகத் தள்ளி

---

* இயல்பாகவே இன்பம் பரமான்மாவுக் குண்டென்பதும், சீவான்மா அவ்வின்பத்தைச் செயற்கையாகப் பெற்றுக்கொள்வது என்பதும் பின்னர்க்காட்டப்படும் சுருதிகளால் நன்கறிக. "ஆனந்தோபிரம்ம" ஆனந்த குணமுடையது பிரமம். "ஏகோபிரம்மண ஆனந்த:|" அது பிரமத்தின் ஓரானந்தம். "ரசோவைஸ:|" "அவர் ஆனந்தகுணமுடையவர். "அந்தர ஆத்மாநந்தமய:|" அந்தரவான்மா வானவர் ஆனந்த குணமிகுதியுடையர். "ஏஷஹ்யேவ ஆனந்தயாதி" இவர் நிச்சயமாக (ஆன்மாவுக்கு) ஆனந்தத்தை விளைவிக்கின்றார். "ரசம்லப்த்வானந் தீபவதி:" ஆனந்தத்தைச் சீவான்மா அடைந்து ஆனந்தமாயிருக்கின்றான், என்றற்றொடக்கத்தன. இன்னும் பலவுள. அவையெல்லாஞ் சுருதியிற் காண்க.

உண்மையாய் முக்காலத்து) நின்ற பொருள் ஆன்மாவே யெனப் பரமான்மாவாகிய சிவ பரம்பொருளைக் கூறுதலான், அதுவும் சிவானந்தமே கூறியதாம். எ - று.

துன்பில் இன்பம்—துக்க நிவிர்த்தியாற் பிறக்கு மகமகிழ்ச்சிப் பேரானந்தம். மூவகைத் துன்பங்களும் இல்லாமைக்கு ஏதுவாகிய பேரானந்தமுமாம். ஏதோ என்பதில் ஓகாரம் ஒழியிசை.

இஃதென்சொல்லியவாறோ வெனின், உபநிடதமும் பிரமகீதையும் ஆன்மாவுக்கு இன்பமுண்டென்று கூறியது, சீவான்மாவிற்கன்று; பரமான்மாவாகிய சிவனுக் குண்டென்று கூறியவாறும்.

16. If ever the Brahmagita, his own authority, the Upanishada and the Saiva Agamas say that the soul has got joy in it, it does not mean that the joy is inherent in the soul. It means that the joy is of the Supreme Being that stands in advaitic relation with the soul.

---

கஎ. சிவசத்தி யைத்திளைப்பர் *சீவன்முத்த ரென்னும்
அவசத்த மாபா தகமேன்—சிவசத்தி
தன்னைப் புணர்ந்ததன்று சாற்றுவமை யுந்தெரியா
தன்னைமுலைப் பாலென் றறி.

இதனால், இத்துணையும் பிறன்கோள் சிதைத்து இனித் தமதுகோள் காப்பான்புகுந்த வாசிரியர், சிவானந்தாநுபவத்திற்குப் பிறர், குற்றம்போலொன்று கூறியது குற்றமன்றென அதனை நிராகரிக்கின்றார்.

* சீவன்முத்தர்—இதில் னகரவொற்று நீக்கிச் சீர்கொள்க அப்போது கூவிளங்காயாகும்.

(இ - ள்.) சிவ சத்தியைத் திளைப்பர் சீவன் முத்தர் என்னும் அவசத்த மாபாதகம் என்?—(சிவசத்தியை அநுபவித்தலே யுமது கருத்தாகலின்,) சிவசத்தி மாதாவும் சீவர்கள் மைந்தரும் ஆகலான், அச் சத்தியை அவர் திளைத்தல் குற்றமன்றே! அதனால், அச் சொல்லுஞ் சொல்லலாகாது; என்னே? மகாபாதகம் வருதலின், (என்று குற்றம்போ லொன்றை யாரோபித்துக்கூறியது) என்னே?,—சிவசத்தி தன்னைப்புணர்ந்தது அன்று சாற்று உவமையும் தெரியாது அன்னை முலைப் பால் என்று அறி—(அரூபமாய் வாக்குமனாதீத கோசரமாயுள்ள சிற்பரானந்த வெள்ளமன்றே சிவசத்தி! அது, தனுவுடைத்தன்றாகலான்,நீ கூறியவாறே நிகழாமையின்)அங்ஙனங் கூறும் புணர்ச்சி ஒருவரானுங் கூறப்பட்டதன்று; அஃதன்றியும் சிவசத்தியை மாதாவாகவுஞ் சிவனைப் பிதாவாகவுங் கூறுவது உபசாரமன்றியுண்மை யன்றாகலின், அதன்பாற்பட்ட உவமை நிலையும் உனக்குத் தெரியாததாயிற்று; (ஆயின் இவ்வாறு நிகழ்வதெவ்வாறெனின், உலகில்) அன்னை முலைப் பாலைப் புதல்வர் அநுபவிக்குமாறுபோல நிகழுமென் றறிவாயாக. எ - று.

திளைத்தல் — அழுந்தியறிதல்; அநுபவம் என்பதும் அதுவே. சீவன்முத்தர்—அளத்திற்பட்ட புற்போலப் பசுகரணம் பதிகரணமாகப் பெற்று உடம்போடு கூடியிருக்கும் போது சாக்கிரத்தே யதீதத்தைப் புரியுந் தபோதனர்.

திளைப்பர் என்னும் சொற்பொருளியல்பானும் சீவன் முத்தர் என்னும் சொற்பொருளியல்பானும் திளைத்தல் ஆண் பெண் புணர்தலன் றென்பதை உணர்த்தினர்; அதனையறிய வல்லனல்ல னென்னுங் கருத்தாற் 'சிவசத்தி தன்னைப்புணர்ந்ததன்று' என வெளிப்படக் கூறிப் பின்னுமதனை வற்புறுத்

தினர். அவசத்தம்—கெட்ட சொல். மகாபாதகம்—* அதி பாதகம்.

---

* அதிபாதகம் இஃதென்பது கீழுள்ள பிரமாணத்தானறிக.

தாரகன் றன்னைச் சாதத் தடங்கடற் றளர்வார் தம்மைப்
பாரகன் றனையும் பாரும் படைத்தவன் றனையும் பாங்காற்
காரகன் றன்னை வாங்குங் † கடவுளைக் கயந்த நெஞ்சர்
நாரகர் மீளு நாளும் பிறிதிய னவிற்று வாமே.

ஒப்பிலி யநாதி முத்த ஞேதிய வேத மாதிக்
கொப்புயர் புரைப்பார் நிந்தை யுரைப்பவ ருன்னு வாரும்
வெப்பெரி நிரயந் தன்னுள் வீழ்ந்து வெந்துருகி வீயா
ரெப்பொழு தேறு வாமென் றிளைத்திளைத் தேங்கு வாரே.

ஒப்பிலி யநாதிமுத்த ஞேதிய பனுவ லோர்ந்து
தப்பறச் சாற்று மாசான் றன்னையு மிகழ்ந்து சாற்றில்
வெப்பெரி நிரயந் தன்னில் வீழ்ந்துவெந் துருகி வீயா
ரெப்பொழு தேறு வாமென் றிளைத்திளைத் தேங்கு வாரே.

அரன்றிர வியத்தை யாசா னரும்பொரு ளதனை யார்க்கும்
பரம்பரன் பகர்ந்த வாக்கைப் பரித்தபுத் தகத்தைப் பற்றிக்
காந்தவர் முன்னஞ் சொன்ன கரிசர்க ளொருமூ வர்க்கும்
வரும்பல முடையர் பாவ மனைத்தையு மருவி னரே.

அறைந்த விவர்க ளனைவர்களு மதிபாதகரே யெனவறிக
சிறந்த வினையே தீவினையு ளதிபா தகந்தா னெனத்தெளிக
நிறைந்த துயரே நெடுநாளே யதனிற் பலமு மெனநினைக
பிறிந்த வதிபா தகபேதந் தனையு மினியாம் பேசுவமே.

—சிவதருமோத்தரம்.

† கடவுளைக் கயந்த நெஞ்சர் எனச் சத்தனைக்கூறச் சத்தியும் அடங்குதலின் அதனை வேறு கூறிற்றிலர். இதனை அவர் கொண்ட மற்றைய மூர்த்தங்கண் மீதும் வைத்துணர்க.

* "இருவர் மடந்தையருக் கென்பயனின் புண்டாம்
ஒருவ ளொருத்தி யுறின்"

அருட்கு முதலாகிய ஞேயம் வெளிப்படினல்லது இன்பமுண்டாகா தென்பது இதனாற் போந்த கருத்து.

அஃதறியாது உயிரினைப் பெண்ணியல்பினதாகவும் இறைவனை ஆணியல்பினனாகவும் அறிவிலார் கூறுமது பொருளன்று, அன்ன வியற்கை அசேதன வடிவிற்கல்லது சேதன வடிவிற்கின்றாகலான், அதுபோல.

"† பராந்தபரா பரையாதி பரனதிச்சை
பராஞான கிரியைபர போக ரூபந்
தருங்கருணை யுருவாகி விசுத்தாசுத்த
தனுகரண புவனபோ கங்கடாங்க
விரிந்தவுபா தானங்கண் மேவியொன்றாய்
விமலமா யைந்தொழிற்கும் வித்தாய்ஞாலத்
தரந்தைகெட மணிமன்று ளாடல்காணு
மன்னையருட் பாதமலர் சென்னிவைப்பாம்."

என்னு மிச்சித்தாந்தத் திருவிருத்தத்தானே சத்தியதுருவம் பஞ்சபூதபரிணாமமன்றென்பதூஉம், எனவே புணர்ச்சிக் குரித்தாய தன்றென்பதூஉம், அன்னை யென்றல் இன்ன காரணத்தா னென்பதூஉம், ஆகலான் அங்ஙனங் கூறுதல் உபசாரமேயன்றி உண்மையன்றென்பதூஉம் போந்தவாறு காண்க.

‡ "அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்ப ரென்றறிக
அம்மையப்ப ரப்பரிசே வந்தளிப்பர்—அம்மையப்பர்
எல்லா வுலகுக்கு மப்புறத்தா ரிப்புறத்தும்
அல்லார்போ னிற்பா ரவர்."

---

* திருவருட்பயன், இன்புறுநிலை : செ - உ. † சிவப்பிரகாசம், பாயிரம்: செ - உ. ‡ திருக்களிற்றுப்படியார், செ - க. இங்கே, "அஞ்செழுத்து மேயம்மை யப்பர்தமைக் காட்டுதலா லஞ்செழுத்தை யாறாகப் பெற்றறிந்தே—யஞ்செழுத்தை, யோதப்புக் குள்ளமதியுங் கெடினுமை கோன், கேதமற வந்தளிக்குங் கேள்" என்னும் திருக்களிற்றுப்படியாரும் நோக்கற்பாலது.

என்னும் இச்சித்தாந்தத் திருவெண்பாட்டானும் சிவனதுரூபம் பஞ்சபூதபரிணாமரூபமன்றெனபதூஉம், எனவே புணர்ச்சிக் குரித்தாய தன்றென்பதூஉம், பிதாவென்றல் இன்னகாரணத்தானென்பதூஉம், ஆகலான், அங்ஙனங் கூறுதல் உபசாரமே யன்றி உண்மையன் றென்பதூஉம் போந்தவாறு காண்க.

இவ்வியல் பனைத்தும் சித்தாந்தநூல் பற்றிச் சற்குரவனறிவிக்க அறிந்தாலன்றி மற்றெவ்வாற்றானு மறிதலியலாதென்க. இவ்வியல் பறியாதார், * "இமவான் மகட்குத்—தன்னுடைக்கேள்வன் மகன்றகப்பன் றமையன்" எனவும், † "தவளத்த நீறணியுந் தடந்தோளண்ணறன் னொருபா—லவளத்தனு மகனுந்தில்லையான்' எனவும், ‡ "கனகமார் கவின் செய்மன்றி—லனகநாடகற் கெம்மன்னை—மனைவி தாய் தங்கைமகள்" எனவும் வருவனவற்றிற் கெத்துணைக் குற்றங்கள் கூறமாட்டார்; அவையெல்லாஞ் சுத்தாத்துவித சைவசித்தாந்திகள் முன்னிலையிற் பயன்படாவென்பது தெற்றென வுணர்க.

§ "தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ நம்பி யினித்தா னல்குதியே"

என்புழித் தாயாய் முலையைத் தருவானே என்பதற்குத் தாய்போல ஞானாமிர்தத்தைத் தருங் கடவுளே! என்பது பொருளாகலின், அஃதிண்டைக்கு முரணுமையறிக. $ "தாயுடன்சென்று" என்பதுமது. தாய் என்றது அருளை.

* திருவாசகம் திருப் பொற்சுண்ணம். செ. கங. † திருக்கோவையார். செ. ககஉ. ‡ சிதம்பரச் செய்யுட்கோவை. செ. ஙங. §திருவாசகம், ஆனந்தமாலை செ-ரு. $. பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடற்றிரட்டு திருவேகம்பமாலை. செ-கo.

தாயாய் என்புழி ஆயென்னு மாக்கம் உவமப் பொருட்டு; * "ஆள்வா ரிலிமா டாவேனோ" என்புழிப் போல. முலை ஆகுபெயராற் பாலை உணர்த்திற்று; இங்கே ஞானப்பால் அமிர்து—பால்.

† பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்க ளல்லான்
அந்தமு மாதியில்லா னளப்பில னாதலாலே
எந்தைதா னின்னனென்று மின்னதா மின்னதாகி
வந்திடா னென்றுஞ்சொல்ல வழக்கொடு மாற்றமின்றே.

என்றபடி பன்றிக்குட்டிகளுக்குப் பால் கொடுக்கத் தாய்ப் பன்றிபோல வருதல் முதலியன வெல்லாம் அவ்வப்போது ஆன்மாநுக்கிரகத்தின் பொருட்டுக் காட்டி மறைக்கும் தடத்த வடிவங்களின் பாலதாகக் கருதப்படும். பரமுத்தியாகிய அவனது சொரூபவடிவம் அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தமாகலின், அவ்வடிவமே முத்திநிலை குறித்துப் பேசப்படுதலினால், அவ்வடிவங்கள் ஈண்டெடுத்துப் பேசுதற்கு யாது மியைபின் றெனவுணர்க.

‡ "மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி மயானத்தான்
வார்சடையா னென்னி னல்லான்
ஒப்புடைய னல்ல னொருவனல்ல னோரூ
னல்ல னொருவம னில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு
மவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே"

என்னும் அநுபவநிலைபற்றி யெழுந்த தேவாரத்தானும் அவன் சொரூபவடிவம் பசுஞான பாசஞானங்களால் எவ்வாற்றானு மறியப்படாத வியாபக சொரூப மென்பதூஉம் பதிஞானமாகிய அருட்கண்ணாற் கண்டறியப்படுவ தொன்றென்பதூஉங் கண்டுகொள்க.

---

* திருவாசகம் கோயின்மூத்த திருப்பதிகம் செ-எ. † சிவஞானசித்தியார் சுபக்கம்: கஉம் சூ-ம் செ-சச. ‡ திருநாவுக்கரசு நாயனார் தேவாரம், பொது, வினாத்திருத்தாண்டகம், செ-கO.

முத்திநிலைக்கண் முதல்வனொடு திளைத்தலே பரமுத்தியாகலான், முதல்வனும் சத்தியும் மணியும் ஒளியும், மாமும் காழ்ப்பும், நெருப்புஞ் சூடும், தண்ணீரும் தட்பமும் போலக் குணகுணி பாவத்தாற் பிரிப்பின்றி நிற்றலின், குணியைத் திளைக்கும்போது குணத்தினையும் திளைத்தலான், அவ் வொப்புமை நோக்கிச் சத்தியைத் திளைத்தலும் அமையக்கிடத்தலின்; சிவசத்தியைத் திளைத்தல், என்றல் அதனோடு மத்துவிதமாய்க் கலத்தல் என்றலுமாம். இருந்த வாற்றான், அஃதறியார் கூறுமக் குற்றம் முத்தான்மாவைப் பற்றாதென்பது கடைப்பிடிக்க.

கலத்தலாவது இறைவன் வியாபகத்துள் முத்தான்மாத் தான் வியாப்பியமா யடங்கி வேறாய்த் தோன்றாது அதுவாய் அத்துவிதமாய் நிற்றலன்றிப் பிறிதன்றாகலான், அஃதுணராது, * நிக்கிரக யோக்கியமல்லாத சிந்தாந்த நிலையை நிக்கிரகித்தலின், † "நிரநுயோச்சியம்" என்னும் நிக்கிரகத் தானத்தாற் றோற்ற வாறன்றி ‡ பிரகிருதமல்லாத மாதா பிதா விசாரம் பண்ணுதலான், § "அர்த்தாந்தரம்" $ "நிரர்த்தகம்" என்னும் நிக்கிரகத்தானங்களுமாம்.

இஃதென் சொல்லியவாறோவெனின், சிவசத்தியும் சிவமும் பஞ்சபூத பரிணாம தேகமுடையரல்லர்; அவ்வுடம்புகளுக்கே புணர்தல் பிரிதல் முதலிய விவகாரங்களுண்டு;

---

* நிக்கிரகயோக்கிய மல்லாதது—கண்டிக்கத்தகாதது. † நிரநுயோச்சியம்—தோல்வித்தானம் அடையாதவனைத் தோல்வி எய்தினாய் என்று வினாவிக் கூறுதல். நிரநுயோச்சியம்—வினாவற்பாலதல்லாதது. நிர்—இன்மை. அநுயோகம்— வினா. ‡ பிரகிருதமல்லாதது—உண்டாக்கப்படாதது. § அர்த்தாந்தரம்—தன்பால் வரும் தோல்வியை மறைக்கும் பொருட்டு, முன்னே சொன்ன பொருளுக்கியைபில்லாத வேறு பொருளைச் சொல்லுதல், அர்த்தம்—பொருள். அந்தரம்—வேறு. $. நிரர்த்தகம்—பொருளில்லாத வார்த்தைகளை எடுத்துச் சொல்லுதல். நிர்—இன்மை. அர்த்தகம்—பொருளுடையது.

சத்தி சிவன்கள் சச்சிதானந்த வுருவினர் ; அவர்க்கு அவ் விவகாரமின்று ; திளைத்தல் என்பது சிவவியாபகத்துள் ஆன்மா வியாப்பியமா யடங்கிப் பிரிப்பின்றி நிற்றல் ; ஆண் பெண் புணர்ச்சி போன்றதன்று. அவரைப் பிதாமாதா நிலை யில் வைத்துப்பேசுதல் உலகத்தைத் தோற்றுவித்தன் முறை பற்றி உபசாரமன்றி உண்மையன்று ; ஆகலான், ஆன் மானந்த வாதியாகிய நீ "ஒன்றுவிட்டொன்று பற்ற"லென் னும் குற்றம்பற்ற மேற்கொண்ட விடயத்தை விடுத்துப் பல வேறு பேசினமையின், மேலே எடுத்துக் காட்டிய தோல் வித்தானங்கள் உன்னைப் பற்றுதலான், நின்கோள் எவ்வாற் றானு நிராகரிக்கப்பட்டதென அவனுக் குணர்த்தியவாறும்.

17. That the Jivanmuktas enjoy Sivasakti, sounds so wicked; it is a great sin, you say. You know not the use of a figure of speech. It is like the child enjoying milk from the mother's breast.

---

கஎ. சிவசத்தி யைத்திளைப்பர்* சீவன்முத்த ரென்னும்
அவசத்த மாபா தகமேன்— சிவசத்தி
தன்னைக்கண் டாங்கருளாற் சச்சிதா நந்தமெனும்
மன்னைத் திளைத்துவாழ் வார்.

இதனால், சீவன்முத்தர் சிவசத்தியைத் திளைத்தல் குற்ற மென்பதனைப் பிறிதோ ராற்றானு நிராகரிக்கின்றார்.

(இ - ள்.) சிவசத்தியைத் திளைப்பர் சீவன் முத்தர் என் னும் அவசத்தம் மாபாதகம் என்—சிவசத்தியைத் திளைப்பர் சீவன் முத்தரென்று சொல்லுவது குற்றமுடைய சொல்லாக லான், (அச்சொல்லைச் சொல்லலாகாதெனின், பொருள்

---

* திளைப்பராதி முத்தர் என்றும் பாடங்கொள்வர் ; மோனை யில்லை. இல்லாமலும் பாட விதியுள்ளது. அநாதிமுத்தர் சிவபிரான் ஆகலான் சீவன்முத்தர் ஆதிமுத்தர் எனப்பட்டார்.

குற்றமுடையதென்பது தானே போதாலின், அந்நிலைகொள்ளற்க வென்பது) என்னை ?, — சிவசத்தி தன்னைக்கண்டு ஆங்கு அருளால் சத்துச் சித்து ஆனந்தம் என்னும் மன்னைத் திளைத்து வாழ்வார்—சிவசத்தி தன்னை முன்னர்த் தரிசித்து, (ஞானம் அருள் இவற்றின் நிலைகளிலே அழுந்தி நிற்கப் பெற்றால், மேல்நிகழும்) ஞேயத்தோடழுந்தி ஒன்றுமிரண்டு மற நின்று வாழ்வார். (ஆகலின், அதற்கு நீ கூறும் குற்றமின்றாகலான், அது கொள்ளத்தக்கது.) எ-று.

வருவித்தன குறிப்பெச்சம். சச்சிதானந்த மென்னும் மன்—ஞேயம். சீவன்முத்தர் இயல்பு மேலைச் செய்யுளின் உரையிடை உரைத்தாம், ஆண்டுக் காண்க. அவசத்தம் என்பதன் பொருளும் அங்ஙனமே.

சத்தியைக்காணல்—அருளைத் தரிசித்தல். தன் சாரியை. ஆங்கு—அப்பொழுதே. அருளால்—அச் சத்தியாகிய அருளால். சச்சிதானந்தம்—உண்மை யறிவானந்தம். என்னும் எனும் எனத் தொகுத்தல். மன் அரசன் ; இங்கே எல்லாவுலகிற்கு மரசராகிய நடராசர் ; தியாகராசர் என்க ; தலைவனுமாம் ; இது பசுபதி என்றவாறு. திளைத்தல் மேலே கூறினும். வாழ்வார் திளைத்தவண்ணமே இருப்பார் ; அஃதாவது பின் பிறப்பிறப்பிற் பட்டுழலார் என்றபடி. * "தாயுடன்சென்று பின்றாதையைக் கூடிப் பின்றாயைமறந்—தேயுமதே நிட்டை யென்றா னெழிற்கச்சியே கம்பனே" என்பது மது.

இஃதென் சொல்லியவாறோவெனின், சிவசத்தியைத் திளைத்தல் என்பது சிவனதருளைத் தரிசித்தல் ; ஆகலான், அவ் வருட்சத்தியாகிய தாய், தன்னைத் தரிசித்த சீவன்முத்தராகிய புதல்வர்க்குத் தந்தையாகிய சிவத்தை முந்தாறுத்துத்

* இதனை கoக-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க.

தெரிவிக்கத் தெரிந்த சீவன்முத்தர் தெரிவித்த தாயையும் மறந்து தந்தையை அத்துவிதமாகப் பற்றிநின்று சுட்டுணர் வின்றி யெல்லாஞ் சிவமாகக் கண்டு சிவானந்தப் பெருவாழ் வுறுவர் என்றவாறும்.

18. That the Jnanamuktas enjoy Sivasakti, sounds so wicked ; it is a great sin, you say. They realise Sivasakti first and then by grace dwell enjoying the Lord who is sat chit and ananda.

---

கஃ. அன்றியுயிர் சற்சித்தே யானந்த மில்லையதற்
கென்றுபல வாற்று னெய்துவிக்க—நின்ற
முறையானு மீசனொடு முற்றுஞ் சமதை
அறையாமை கூறியதூஉ மாம்.

இதனால், முன்னர் நிராகரிக்கப்பட்ட ஆன்மானந்த மத வாதத்தாற் போந்த பொருள், பொருளன்றெனவுணர்த்தி, நிராகரிக்கு முகத்தாற், சிவசமவாத நிராகரணமுங் கூறு கின்றார்.

(இ - ள்.) அன்றி—(ஆன்மானந்தவாதியை மேலே,) பல பிரமாணங்களானும் (நிராகரித்த) தன்றி,—உயிர்சற் சித்தே ஆனந்தம் அதற்கு இல்லை என்று பல ஆற்றானும் எய்துவிக்க நின்ற முறையானும்—ஆன்மாச் சத்துச்சித்து ரூபமே; அதற்கு இனிய விதகுணமாயுள்ளதோர் ஆனந்த மில்லை யென்று பலபிரமாணங்களானும் உடன்படுத்த (இனி மேற்கூறுமாறில்லாது உடன்பட்டு)நின்ற முறைமையினா னும்,—ஈசனொடு முற்றும் சமதை கூறிய தூஉம் அறியாமை ஆம்—(சச்சிதானந்த ரூபனை) பரமசிவனோடு (சற்சித்து ரூபியான சீவான்மாவிற்கு முழுதுஞ்) சமதை கூறியதும் அறியாமைப்பாலதாம். எ-று.

எனவே ஆன்மாநந்தவாதி நிராகரணத்தான், ஆன்மாச் சத்சித்ரூபியே என்பதும், சிவசமவாதி எல்லாவற்றானுஞ் சமத்துவங் கூறுங்கால், ஆன்மாவுக்கானந்த முண்டெனவுங் கூறல் வேண்டுமன்றே! அதற்கஃதின்மையின், சத்சித்தென்னுந் தரும மாத்திரமே ஒத்தலின், ஒருபுடை யொப்புமையன்றி முழுவதும் சமதை கூறமுடியாதென்பதும் பெற்றாம்.

அஃதற்றாக, ஆன்மாநந்த வாதியைப் பலவாற்றானு நிராகரித்த தென்னையெனின், சுவாநுபவப் பிரமாணம் இருவர்க்கு மொத்தலின், அவனைப் பலவாற்றானு நிராகரித்தொழிக்கவே, சிவசமவாதியும் நிராகரிக்கப்பட்டொழிவன்; வேறுபிரமாணம் எடுத்துக்காட்டி நிராகரிக்கவேண்டா என்னுங் கருத்தானென்றறிக.

பிரத்தியட்சப் பிரமாணத்தா னிராகரித்த தென்னை? முத்தியிற் சிவனையும் ஆன்மாவையும் காண வேண்டுதலிற் சிவனை யானந்த தருமத்தானும், ஆன்மாவை அதனை யறிகின்றது இதுவாக வேண்டுமென்னும் ஊகத்தானும் அறிதலே நியாயமாகலிற், றோன்றிய வானந்தம் சிவமேயாம்; அவனின்பந் தோன்றிற்றெனின், தன்னின்பந் தனக்குத் தோன்றுதல் கிரியா விரோதமாகலானும், பேரின்பத்தை இரண்டாக வேதாகமங்கள் ஓதாமையானும், அச்சிவவின்பமும் தன்னின்பமும் வேறுபட்ட தருமத்தாற் றோன்றாமையானும் அவன் கூற்றுப் பொருந்தாதென்க.

சீவான்மா இரச ரூபனன்று, ஒருவருக்கும் அனுபவமாகாமையின்; யாதொன்று இரச ரூபமாக அநுபவிக்கப்படுவதில்லையோ, அது இரச ரூபமன்று, தீபாலோகம்போல; யாதொன்று இரச ரூபமுடையது, அது ஒருவானனுபவிக்கப்படும், பால்போல என்றலின், அந்வயவெதிரேகி யநுமானம், சீவான்மா இரசரூபனன்மையிற் பட்சதருமபட்சத்

தில் உண்டாயிற்று. அதனானே அசித்தி யென்னும் ஏத்து வாபாசமின்று, நிபாலோகத்தின் இனிய விரதமின்மை காண் டலிற் சபக்ஷத்துவம் நிபாலோகத்திலுண்டாயிற்று. அத னானே, விருத்த வேத்துவா பாசமின்று. பாலிலே அநுபவ மாதலிருக்கையால், விபட்சத்தினின்றும் வியாவிர்த்தி உண் டாயிற்று. அதனானே, அநேகாந்த வேத்துவா பாசமின்று. ஆன்மா இரச ரூபனன்றென்பது, பிறிதோர் பிரமாணத் தான் வாதிக்கப்படாமையின், நவரதீதவிடயத்துவ முண் டாயிற்று. அதனானே, காலாத்தியாபதிட்ட வேத்துவா பாச மின்று. ஆகமங்களில் ஆன்மாநந்தம் உண்டெனக் கூறப்படு மெனின், அது, ஆன்ம விலக்கணம் கூறும்வழி முத்திநிலை யில் ஓரானந்தம் உண்டென்றலானும், அவ்வானந்த மென்பது மகிழ்ச்சிப் பொருள்பட நிற்றலானும், "சிவாசய்" என்றாற் போல ஆன்மரசம் உண்டென யாண்டும் உபசாரமல்லாத வுண்மைமொழியாற் கூறாமையானும் பொருந்தாமையின், ஆகமப் பிரமாணமின்றென்க.

ஆன்மா ஆனந்த ரூபனாயிற் றன்னாலனுபவிக்கப்படுதல் கிரியா விரோதமாகலின், அது கூடாமையானும், பாசம் சட மாகலானும், சிவனுக்கு ஊகஞானமன்றி அநுபவஞானமின் மையிற் கூடாமையானும்; கூடிற் பெத்தான்மாக்களுடைய சுகதுக்கங்களும் அநுபவமா மென்கையானும், முத்தான் மாக்கள் அனுபவிப்பரென்றால், அவர்கள் சிவபோகமன்றி மற்றொன்றை அநுபவியார்களாகலானும் அவ்வாறு வசனப் பிரமாண மின்மையானும், பிறவாற்றானும் ஆனந்த முண் டென்பது கூடாமையின், அசற்பிரதி பட்சமுண்டாகலான், பிரகாண சமவேத்துவா பாசமின்று. சிற்சத்தி சத்தா ஞாப கத்தானுண்டென்றது குற்றப்படுதலின் ஈண்டியலாதாம்; ஆகவே, நல்லதோ ரேதுவுடையதாயிற்று. ஆகவே, அநு

மானப் பிரமாணத்தான் ஆன்மாவிற்கு ஆனந்தமின் றென்ப தூஉம் பொருந்திற்று.

* "அந்தமொன்றில்லா வானந்தம்பெற்றே னியாதுநீ பெற்றதொன் றென்பால்" என்றற் றொடக்கத்த மணிவா சகப் பிரமாணத்தானும் பிறவாற்றானும் அஃதின்மையுணர்ந் துடன்பட்ட ஆன்மாநந்தவாதி † பிரதிஞ்ஞாசந்நியாசம் என்றற் றொடக்கத்துத் தோல்வித்தானங்களான் நிக்கிரகிக் கப்பட்டமை முற்கூறியவற்றாற் காணப்படும். இதனானே யன்றே! பலவாற்றானு மென்றதூஉம் என்க.

இதனாற் சிவசமவாதி நிராகரணங்கூறிய தெங்ஙனமெ னிற், சிவன் சச்சிதானந்த ரூபனாகலின், அவனைப்போல, ஆன்மாவுஞ் சச்சிதானந்த ரூபனென்றே சிவசமவாதிகூற வேண்டும்; அங்ஙனங் கூறுதற்கு எவ்வகைப் பிரமாணமு மின்மையான் அஃதுண்டென்றல் சாலாதாகலானும், உண் டாயிற் சச்சிதானந்த தருமம் சிவனுக்குஞ் சீவனுக்கு மொத் தலிற் றரும பேதமின்றாகலான், ஒருபொருளாதல் வேண்டு மாற்றான் மாயாவாதப்பிரவேசமா மாகலானும், சிவனுக்கு ஆன்மா சமதையென்று சிவசமவாதி கூறுங் கூற்று நிரா கரிக்கப்பட்டமை கண்டுகொள்க.

சத்து முக்காலத்து முள்ளது. சித்து அறிவுடையது. ஆனந்தம்—நித்தியானந்தம். பலவாற்றானும்—பல பிரமாண வாயில்களானும். எய்துவிக்க—உடன்படுத்த. நின்றமுறை— உடன்பட்டுநின்ற நீதி. முறையானும் என்பதில் உம்மை எதிரது தழீஇய வெச்சம். ஒடுவை நான்கனுருபாகக் கொள்

---

* திருவாசகம், கோயிற்றிருப்பதிகம். செ- சo. †. பிரதிஞ்ஞா சந்நியாசம்—தன்னாற் சொல்லப்பட்ட பிரதிஞ்ஞை மறுக்கப்பட் டுழி, அதனை முற்றும் விட்டுவிடுதல். சந்நியாசம்—விடுதல்.

ளினு மிழுக்காது. முற்றுஞ் சமதை யறையாமை—சச்சிதா னந்த ரூபன் என்று கூறுமை. கூறியதூஉம் என்பதில் உம்மை இறந்தது தழீ இயிற்று.

இஃதென்சொல்லியவாறோ வெனின், ஆன்மானந்தவாதிக்கும் சிவசமவாதிக்கும் ஆன்மாச் சத்சித் ரூபியன்றிச் சச்சிதானந்த ரூபியன்றென்ப தறிவித்து அம் மூன்று ரூபமுமொருங்குடையவன் முதல்வனாகலான், அவ் வானந்தத்தையே ஆன்மாப்பெற்று அநுபவிக்குமென்றும் ஆநந்த ரூபியான முதல்வனுக்கு அவ்வுரூபமில்லாத ஆன்மா எவ்வாற்றானுஞ் சமதையாகா தென்றும் தெரித்தவாறும்.

19. It has been established till now in many ways that the soul is only sat and chit, and its quality is not ananda. And hereby is refuted Sivasamavada as well which asserts complete equality of the soul which is only sat and chit with the Sivam which is sat, chit and ananda.

---

உ௦. ஆனந்த மின்றி யரன்சமதை முத்தியெனிற்
றானந்த வேதா கமஞ்சாற்று—ஊனம்
படுமே தசகா ரியத்திற் பலவுங்
கெடுமேயோன் றுமெனலுங் கேள்.

இதனால் இந்நூலின் வைத்துக் கூறும் ஆன்மாநந்தவாதம் சிவசமவாதம் இரண்டனுள், முன்னர் ஆன்மாநந்தவாதம் நிராகரிக்கப்பட்டமையின், எஞ்சிநின்ற சிவசமவாத நிராகரணஞ் செய்யத் தொடங்கிய வாசிரியர், சிவசமவாதி மேலைச் செய்யுளாற் கூறப்பட்ட நியாயத்தை அங்கீகரித்துப் பிறிதோராற்றாற் சிவசமதை கூறுதலை மறுக்கின்றார்.

(இ - ள்.) ஆனந்தம் இன்றி அரன்சமதை முத்தி என்னில் தான் அந்த வேதம் ஆகமம் சாற்று—(முன்னர்க் கூறிய

வாறே ஆனந்தமில்லாத துண்மைதானே!) அவ்வானந்த மன்றிப் (பிறிதோராற்றுற் சமதை சொல்லப்படும்; அஃ தென்னெனிற் சிவன் சச்சிதானந்த சொரூபனன்று; சத் துச் சித்து ரூபிதானே; அதனுனே, ஆன்மாவுஞ் சத்துச் சித்து ரூபியாகலின்,) சிவனுக வேண்டுமாற்றுற் கூறுவே னென்னில், அவ்வாறு சிவன் ஆனந்தரூபியன்றென அந்த வேதாகமங்கள் கூறு; (அஃதன்றியும்—), தசகாரியத்தில் பலவும் ஊனப்படும் ஒன்று ஆம் எனலும் கெடும் கேள்— தசகாரியத்திற் பலகாரியங்களும் வேண்டப்படா! சாயுச்சிய முத்தி கூறலும் இல்லையாய் முடியும்; (ஆகலான், இவ்வாறளவிறந்த விரோதங்கட்குப் பெரிது மிடனுகிய இந்த வார்த் தையை யாண்டுக் கற்றுய்! அஃதொழிந்து சற்குருவை யடைந்து உண்மையைக்) கேட்டறிவாயாக எ-று.

இன்றி என்பதைப் பெயராக்கிப் பொருள் கோடலு மொன்று. முத்திசமதை என்னில் எனமாறுக. தான் அசை நிலை. அந்த என்பது உலகறிசுட்டு. வேதாகமம் வடநூன் முடிபு. ஊனம்—கேடு. ஏகாரமிரண்டுந்தேற்றம். தசகாரி யம்—தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்ம ரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பன. இவற்றின் விரிவை உண்மை நெறிவிளக்க * முதலிய சித்தாந்த சாத்திரங்களிற் காண்க.

பலவும் என்பதில் உம்மை அசை. பலவாவன:—தச காரியம் பத்துள் சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவ போகம் என்பன. கெடுமாறு என்னையெனின், ஆன்ம சுத்திவரை மேற்போந்த ஆன்மாச்சிவன் ஆனந்த ரூபியாயி னன்றே! அவ்வின்பத்தைத் தானுமடைய விரும்பிச்

---

* முதலிய என்றதனுலே தசகாரிய நூல்கள் பலவுள. அவற்றை யும் நோக்குக என்றவாறும்.

சிவரூப முதலியவற்றை நாடி மேற்செல்லும்; அவன் ஆனந்த ரூபியன்றெனின், அவனுற் றானடைவதொரு பயனுமின்மையின், மேற்சேறலொழிதலின் மேனிலைக்கணுள்ள பலவுங் கெடுமென்றோர்க.

கெடுதல்—கைவிடப் படுதலான் வழக்கற்றொழிதல். ஒன்று—ஏகம்; * "ஏகமே வீடுபேறும்" என்றமையின், ஒன்று முத்தி யெனப்பட்டது; இங்கே சாயுச்சியமுத்தி. ஒன்று என்பதனைப் பகுதியாகக் கொண்டு முதனிலைத் தொழிற்பெயராக்கிச் சிவத்தோடு அத்துவிதமாக ஒன்றுதலையுடைய பரமுத்தி யென்றலுமாம்.

> † "சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் றன்வசன
> மாத்திரத்தே வாய்தநலம் வந்துறுமோ—ஆர்த்தகடற்
> றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தவிர்ந்திடுமோ
> தெண்ணீர்மை யாயிதனைச் செப்பு."

எனத் திருக்களிற்றுக் கைந்நிமிர்த்துக் கூத்தப்பிரான் சீர்த்த சேவடியிற் சேர்த்த ஈடு மெடுப்பு மில்லாச் சாத்திரம் இயம்புதலான், தசகாரியம் குருவருளா லறியற்பாலன வென்பார், கேள் என்றார்.

இனி, யாம் கூறுவதைப் பொருளாகக்கொள், என்றலுமாம்; கேட்டல் பொருளாகக்கோடல்; அது ‡ "கேளாரும் வேட்ப மொழிவதாம்" எனவும் § "கேளாம்புறன்" எனவும் வருவனவற்றா னறிக.

இஃதென் சொல்லியவாறோ வெனின், சிவனுக்கு ஆனந்தமின்றெனின், வேதாகமம் அங்ஙனம் கூறாமையின், பிரமாணம் இன்மையானும், அவற்றாற் கூறப்படும் தசகாரி

---

*நிகண்டு பன்னிரண்டாவது மோட்சம் செ. க. † திருக்களிற்றுப்படியார், செ-கூ ‡ திருக்குறள், கூ௩-ம் அதி: சொல்வன்மை, செ-௩. § சிவஞானபோதம் அவையடக்கம், தம்மை யுணர்ந்து என்னும் வெண்பா.

யங்கள் பல கெடுதலானும், அதனால் சாயுச்சிய முத்தியொன் றில்லையாய் முடிதலானும் சிவன் சச்சிதானந்த ரூபியே; தச காரியத்தையும், சாயுச்சிய முத்தியையும் சற்குருவினிடம் கேட்குமுறையாற் கேட்டுணர்வை யாயின், அவ்வுண்மை யறிந்துய்வையெனப் போதித்தவாறும்.

20. Admitting that the soul has no quality of ananda in it, Sivam also has no ananda; it is only sat and chit, hence Siva and the soul are completely equal in mukti—you say. But the Vedas and the Agamas do not admit that Sivam is not ananda. And there can be then no meaning in many stages of the Dasakaryam; there can be no talk of Mukti or union.

---

உக. சிவசமமே முத்தியெனிற் சித்தாந்த மன்றாம்
சிவசமய பேதமெனச் செப்பும் — அவைகளிலே
ஒன்றென்பர் வேறெனினு மோரேக தேசமதம்
அன்றெனின்மற் றோர்க்கு மது.

இதனால், முன்னர்க் கூறியவாறே பிரமாணவிரோதங் கண்டும் உடன்படாதாரைச் சுத்தாத்துவித சைவசித்தாந்தத் திற்குப் புறம்பாகத் தள்ளுகின்றார்.

(இ - ள்.) சிவசமம் ஏ முத்தி என்னில் சித்தாந்தம் அன்று ஆம் - (முன்னர்க் கூறிய பிரமாண விரோதங் கண்டும் வாசனையான் உடன்படாது பின்னும்) சிவசமவாதத்தை ஒழியேனெனக் கருதிக் கூறியது சைவசித்தாந்த முத்தியன் றாம். (யாதினாலெனின்),—சிவசமயபேதம் எனச் செப்பும் அவைகளிலே ஒன்று என்பர்—சைவசமய பேதமாகக் கூறப் படும் பலவற்றுள்ளும் இதுவு மொன்றெனக் கூறுவ (ராக லான், நீயும் அவருள் ஒருவனேயாம்.),—வேறுஎனினும் ஏக

தேசமதம்—(தொன்று தொட்டுச் *சிவசமவாதியெனத் தள்ளுமவர்கள் போல யாங்கூறுமையின்,) வேறென்று சொன்னாலும், (சிவசமவாதம் எவ்வாற்றானும் ஒத்தலின், ஒருசாதியாகலான், நீயும் அவருள், ஒரேகதேசமதவாதியே யாம்; (அவ்வாறாகவும்),—அன்று எனின் மற்றோர்க்கும் அது - சித்தாந்தியென்று பெயரிட்டுக் கொள்வையேல், மற்றச்சிவசமவாதிகளும் அவ்வாறே சித்தாந்திகளாதல் வேண்டும்; (அது கூடாமையின், நீயும் சித்தாந்தியன்று) எ-று.

சைவசமயபேதம்:--அகச்சமயம், அகப்புறச்சமயம் என இருவகைப்படும். அவற்றுள், ஈண்டு அகச்சமயமே கொள்ளப்படும். அவையாவன:—பாடாணவாத சைவம், பேதவாத சைவம், சிவசமவாத சைவம், சிவசங்கிராந்தவாத சைவம், ஈசுவரவவிகாரவாத சைவம், சிவாத்துவித சைவம் என்பன.

சிவசமமே, ஏகாரம் தேற்றம். மற்றையது அசைநிலை. ஆம் உடன்பாட்டை உணர்த்தும் வடமொழியவ்வியயம்; அஃதிடைச்சொல். ஆகும் ஆம் என நின்றது; போகும் போமென நின்றாற்போல என்றலுமாம். எனினும், உம்மை எதிர்மறை. ஏகதேசமதம்—ஒருமருங்கொத்த மதம். மதம் ஆகுபெயர். மற்றோர்—சிவசமவாத சைவர்; மற்றோர்க்கும், உம்மை எச்சம். அது அவ்வாறு கொள்ளுதல்.

---

* சிவசமவாதி:—பதிஞானம் பசுஞானம் பாசஞானம் என்னும் மூன்றும் அநாதியே உள்ளன; பாச ஞானமாகிய இந்திரியங்கள் விடயங்களை விளக்கப் பசுஞானம் அவற்றைப் புசிக்கும்; இவ் விரு ஞானங்களும் நீங்கியவழி ஆன்மாச் சுவாலையின்றிக் கிடக்குந் தழல் போல ஒன்றையுஞ் சுட்டியறியாது அறிவு மாத்திரையாயிருக்கும்; அப்பொழுது, வேட்டுவன் புழுவை எடுத்துக் கொள்வதுபோலப் பதிஞானம் ஆன்மாவை எடுத்துக்கொள்ளும், புழு வேட்டுவனை நினைத்து அதன் வடிவாதன்மேலும் அதன் றொழிலையும் இயற்றி நிற்றல் போல, ஆன்மாவும் அப்பதியை நினைந்து அதன் வடிவாதன்மேலும் அதன் றொழிலையும் இயற்றிநிற்குமென்று கூறுவோன்.

இஃதென் சொல்லியவாறோவெனின், சிவசமம் முத்தி யெனின், சித்தாந்த முத்தியன்று, சிவசமய பேதத்துள் ஒன்றென்பர் ; அங்ஙனமன்று ; சித்தாந்தமென்று நீ கூறின், ஒருபுடை யொத்த மதமாவதல்ல தஃதாகாதாம் ; பயிற்சி வயத்தான் மீண்டும் அங்ஙன முரைப்பின், சிவசமவாதிக ளெல்லோர்க்கு மஃதொக்கு மாகலான், அதனான் உனக்கு விசேடமின்மையின், பயனின்றெனா வுணர்த்தியவாறும்.

*21.* If you still hold that Mukti is equality of the soul and Sivam, it is not Mukti according to Suddha Advaita Saiva Siddhanta. It may be one of the several forms of Saiva religion, which are true only up to a certain extent which are found in other religions.

---

உஉ. உள்ள மலநீங்கி யோங்கு சிவானந்த
வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே—கள்ளவிழ்பூங்
கோத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு.

இதனால், சித்தாந்த முத்தி யிஃதெனக் கூறுது பிறர் கோள் சிதைத்தவாறே விடுப்பின், சிதைத்துஞ் சிதையாத தனோடொக்கு மாகலானும், அதனாற் " குன்றக்கூறல் " என் னுங் குற்றம் பற்றுமாகலானும், முதற்கண் அந்த முத்திநிச் சயிப்பாம் என்றது பொய்யாய், * " பொய்படுமொன்றோ புனைபூணுங் கையறியாப்--பேதை வினைமேற் கொளின்" என் னுமிலக்கியத்தைப் புதுக்குவித்ததாய் முடியுமாகலானும் தமதுட்கோளாகிய சித்தாந்த முத்தி இஃதெனக் கூறுகின் ரூர்.

---

* திருக்குறள்-அச-ம்-அதி.—பேதைமை—செ-சு.

(இ - ள்). உள்ளம் மலம் நீங்கி ஓங்கு சிவ ஆனந்த வெள்ளம் திளைத்து அதுவாய் மேவுதல்ஏ—ஆன்மாத் தனது * சத்திநிரோதமான ஆணவமல முதலானவற்றை நீங்கி, ஒருகாலத்துங் குறைவில்லாத சிவானந்தப் பெருங்கடலிற் றிளைத்து, அச்சிவனும் (ஆன்மாவும்: ஒன்றென்றும் இரண்டென்றும் பிரித்தறிய வாராத) அத்துவித நிலையைப் பெறுதலே,—கள் அவிழ் பூம் கொத்து ஆர் விரிசடையார் கூறு சிவ ஆகமத்தில் சித்தாந்த முத்தி எனத் தேறு—மதுவொழுகும் ஆத்திப்பூ மாலையை யணிந்த விரிசடைக் கடவுளாகிய பரம சிவன் திருவாய் மலர்ந்தருளிய சிவாகமத்திற் கூறப்படும் சித்தாந்த முத்தியெனத் தெளிவாயாக. எ-று.

உள்ளம்—ஆன்மா. நீங்கல்—திருவருளா னீங்குதல். ஓங்குதல்—அநுபவிக்க அநுபவிக்க ஒருகாலைக் கொருகால் சிற்றின்பம் போலக் குறையாது என்று மொருபெற்றித் தாய்ப் பெரிதாதல்.

சிவானந்தத்தை வெள்ளமாக வுருவகஞ் செய்ததற்கியையத் திளைத்தென்றார்; என்றாரேனும் மிகவும் அழுந்தி யறிதல் என்பது கருத்தாகக் கொள்க. † "நின்னருட்பெருங்கடலிற் றிளைத்துந் தேக்கியும்" என்பதும் ‡ "உலகிலரசு வீற்றிருந்து திளைப்பதுஞ் சிவனருட்கடலே" என்பதும் அது.

ஈண்டுச் 'சிவாகமத்திற் சித்தாந்தமுத்தி' என்றது, முன்னர்ச் "சந்தான நற்குரவர்" என்னும் வெள்ளைப்பாட்டில்,

"எந்தமுத்தி சித்தாந்த மென்றார்கள் சைவத்தின்
அந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம்."

---

*சத்திநிரோதம்—சத்தியைத் தடுத்தல். சத்தி, ஈண்டு ஆன்மசிற்சத்தி. † திருவாசகம், செத்திலாப்பத்து செ—கo. ‡ கருவூர்த் தேவர் திருவிசைப்பா கங்கைகொண்ட சோளேச்சரம், செ—கக.

என்ற சித்தாந்த சிவபோக முத்தியையேயாம் என்றுணர்க. அது,

* "நிலவுல காயதாதி நீள்சிவாத் துவிதாந் தத்துக்
குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகிவேதத்
தலைவரு பொருளா யின்பாய்த் தாவில்சற் காரியத்தாய்
மலைவரு முணர்வாற் பெத்தமுத்திகண் மதித்தா மன்றே"

என்பதனானு முணர்க.

சிவரசசாகர வெள்ளம் ஒருகாலத்துங் குன்றவு நிறைவு மின்றி ஒருதன்மைத்தாய் நிகழும் பெருந்தன்மைத் தென்பது தெரிப்பார் சிவானந்த வெள்ளம் என்றார்; எனவே, சிவானந்தாநுபவமே சைவசித்தாந்தமுத்தி யென்றவாறாயிற்று; என்னை? திளைத்தல் என்பது அநுபவப்பொருளே பயந்து நிற்றலின்.

சிவானந்தம், சிவானந்தாநுபவம், பிரமரசம், பிரமரசாநுபவம், நிரதிசயானந்தம், சிவதரிசனம், சிவஞானம், திருவருள், சிவசத்தி, சிவயோகம், சிவபோகம், பரமானந்த போகம், பரமபதம், சிவத்துவப்பேறு, சிவசாயுச்சியம், ஆன்மானந்தம், நிசானந்தம், ஆன்மசுத்தி, ஆன்மலாபம், ஆன்மஞானம், தடையிலாஞானம், தத்துவஞானம், திருவடிஞானம், மெய்ஞ்ஞானம், உண்மைஞானம் என்றற் றொடக்கத்தன ஒருபொருட் கிளவிகள் என்க.

அதுவாய் மேவுதல்—அத்துவிதமாய்க் கலத்தல்; அஃதாவது பொருட்டன்மையால் இரண்டாயினும் கலப்பு விசேடத்தால் ஒன்றாந் தன்மை. ஏகாரம் தேற்றம். கள் அவிழ் ஆர்பூம் கொத்தென மாறுக. ஆர்சடை யென்பதை வினைத்தொகையாகக் கொள்ளின், பூங்கொத்தெனப் பொதுப்படக்

---

* சிவப்பிரகாசம்—கஉ-ம் சூ-ம், செ-உ.

கூறினுரேனும் கொன்றைப்பூங் கொத்தாலாய திருவடையாளமாலையென்பது எற்புழிக்கோடலாற் பெறுக.

கள்ளவிழ்பூங்கொத்துச்சடையார் என்ற அடை விசேடத்தானும் சிவபிரான் ஆனந்த சொரூபியென்பது பெற்ரும் ஆகலான், அதனுனும் அவரைத் திளைத்தலே அத்துவித முத்தியாக சித்தாந்தமுத்தி யென்பதூஉம், ஆன்மாவிற்குத் தனக்கென ஓரின்பம் இயற்கையாயின் றென்பதூஉம், அதனுனே 'ஆன்மானந்தவாதம்' பொய்யென்பதூஉம் விளக்கிஞர் என்பது தெளிக.

கள்ளாகியதேன் தன்னையுட் கொண்டார்க்கு இன்பம் பயத்தல்போல, கள்ளவிழ்பூங் கொத்தார் சடையாரும் தம்மை உட்கொண்டார்க்குப் பேரின்பம் பயப்பர் என்பது குறிப்பிற் போந்த கருத்தாகக் கொள்க. இஃது* உள்ளுறை.

வேதாகமங்கள் பசுநூலன் றென்பார், சடையார் கூறு சிவாகமம் என்ருர். கூறு என்பதை இடைநிலை விளக்கெனக் கொண்டு ஆகமத்திற் கூறு சித்தாந்தமுத்தி என்றும் பொருள் கொள்க.

தேறு என்பது ஆய் என்னும் ஏவல் விகுதி குன்றிவந்த முற்றுவினை.

இஃதென்சொல்லியவாருேவெனின், "வல்லான் கமலையின் ஞானப்ரகாசன் வசன முணர்ந்தெல்லாம் வெறுமித்தை யென்று கண்டே னின்பவாரி யுள்ளே—செல்லாமற் சென்றதைத் தேக்காமற்றேக்கித் தினந்தினமும் — நில்லாமனின்றுகொண்டே னிதுவே முத்தி நிச்சயமே" என்றபடி முத்திநிச்சயம் கூறியவாரும்.

---

*உள்ளுறை—பொருள் வெளிப்படாது மறைந்து கிடத்தல்.

22. Know this clearly, that Siddhanta Mukti is the condition of the soul, when, with its impurity removed, it experiences the swelling flood of Sivananda and becomes united and identified with the Supreme according to the Saiva Agamas revealed by Him, with the spreading matted hair, adorned with clusters of blossoms from which the nectar flows.

முத்திநிச்சயச் சிற்றுரை முற்றிற்று

திருச்சிற்றம்பலம்

## GLOSSARY

**Mukti** : Bliss, Liberation.

**Sat** : Reality, That which exists through all times.

**Chit** : Intelligence.

**Ananda** : Supreme felicity.

**Sakti** : Energy, Grace.

**Mala** : Bond.

**Anava** : Matter which is externally encasting the soul and lasting till its final liberation.

**Jivan Mukti** : Perfected souls who have attained final deliverance whilst yet in this life.

**Dasa-Karya** The ten spritual experiences of the soul in its path towards final deliverance.

## இவ்வுரையிற் காட்டிய மேற்கோள் நூல்கள்

---

க. வெண்பாப் பாட்டியல்
உ. சீவக சிந்தாமணி
ங. சிலப்பதிகாரம்
ச. தண்டியலங்காரம்
ரு. பிரசிநோபநிடதம்
சு. நீலகண்டபாஷியம்
எ. ஸ்ரீமந்திரம்
அ. சாந்தோக்கியம்
கூ. சிவாக்கிரயோகிகள் கிரியா தீபிகை
கO. திருவாய்மொழி
கக. கொன்றைவேந்தன்
கஉ. நீதிநெறி விளக்கம்
கங. நன்னூல்
கச. திருக்குறள்
கரு. தொல்காப்பியம்
கசு. தேவாரம்
கஎ. வாக்குண்டாம்
கஅ. கந்தபுராணம்
ககூ. சித்தியார்
உO. தக்கயாகப்பரணி
உக. பெரிய புராணம்
உஉ. கந்தர் கலி வெண்பா

உங. சிவதருமோத்தரம்

உச. திருவாசகம்

உரு. ஞானசித்தி

உசு. வேதம்

உஎ. ஆகமம்

உஅ. சர்வஞானோத்தரம்

உகூ. பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம்

ஙO. கம்பராமாயணம்

ஙக. தாயுமானசுவாமி பாடல்

ஙஉ. சிதம்பர மும்மணிக் கோவை

ஙங. திருமுருகாற்றுப்படை

ஙச. அருணகிரியந்தாதி

ஙரு. திருவுந்தியார்

ஙசு. சிவஞானபோதம்

ஙஎ. அரதத்தாசாரியார் சுலோக மொழிபெயர்ப்பு

ஙஅ. திருக்களிற்றுப்படியார்

ஙகூ. சிவப்பிரகாசம்

சO. சங்கற்ப நிராகரணம்

சக. தருக்கசங்கிரகம்

சஉ. திருவருட்பயன்

சங. சிதம்பரச் செய்யுட் கோவை

சச. பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடற் றிரட்டு

சரு. திருவிசைப்பா.

## ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக மகாசந்நிதானத்
## தால் இதுவரை அச்சிற் பதிப்பிக்கப்பட்ட
## நூலுரைகள்

---

௧. திருமுல்லைவாயிற்புராணம்

௨. திரிபதார்த்த ரூபாதிதசகாரிய வகவல்

௩. நித்தியகன்ம நெறி

௪. சித்தாந்த நிச்சயம்

௫. சம்பிரதாய தீபம்

௬. திருவையாற்றுப் புராணம் I

௭. தசமணிமாலை

௮. வர்ணாச்சிரம சந்திரிகை

௯. சிதம்பரநாத முனிவர் அருளிச்செய்த திருப்பதிகமும் அந்தகக்கவி வீரராகவ முதலியார் இயற்றிய பஞ்சரத்தினமும்

௧௦. சோடசகலாப் பிராசாத சட்கமூலமு முரையும்

௧௧. சிவாநந்தபோதசார மூலமு முரையும்

௧௨. சிவப்பிரகாசக் கட்டளை

௧௩. சிவபோகசாரம்

௧௪. சைவசந்நியாச பத்ததி

---

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக மகாசந்நிதானத்தால் அச்சிற்
## பதிப்பிக்கப்பட்ட நூலுரைகள்

முத்திநிச்சய மூலமும் சிற்றுரையும்

---

## அச்சிலிருக்கும் நூலுரைகள்

---

க. ஞானதீக்ஷை

உ. ஞானபூசை

ந. ஞானபூசா காரணம்

ச. ஞானேந்திரியேட்டி

ரு. போசன விதி

---

## இனி அச்சிற் பதிப்பிக்கப்படும் நூலுரைகள்

க. சிவஞான சித்தியார் மூலமும் ஞானாவரணவிளக்க மாபாஷியமும்

உ. முத்திநிச்சய மூலமும் மாபாஷியமும்

ந. உமாபதிசிவம் திருமுறைத்திரட்டு

ச. சோமசம்பு பத்ததி (வடமொழி) தென்மொழி வியாக்யானம்

ரு. திருவையாற்றுப் புராணம் II

சு. வர்ணாச்சிரம சந்திரிகை (தென்மொழி வியாக்யானம்)

எ. மிருகேந்திரம்.

---

## தருமையாதீனத்துப் பண்டார சாத்திரங்கள்

---

க. சதமணிக் கோவை

உ. ஞான தீக்ஷாத்திரயம்

ங. துகளறு போதம்

ச. ஞானப்பிரகாசர் திருச்செந்தூரகவல்

ரு. தத்துவப்பிரகாசம்

சு. ஞானப்பிரகாசர் தசகாரியம்

எ. சிவபோகசாரம்

அ. பேரானந்த சித்தியார்

கூ. திரிபதார்த்த ரூபாதி தசகாரியம்

க0. பதிபசுபாசப் பனுவல்

கக. சிவாநந்தமாலை

கஉ. சம்பிரதாய தீபம்

கங. ஞானுபரண விளக்கக் குறள்

கச. பண்டார மும்மணிக் கோவை

கரு. சித்தாந்த நிச்சயம்

கசு. சிவானுபோகசாரம்

கஎ. பரமத திமிர பானு

கஅ. பரமத சங்கற்ப நிராகரணம்

ககூ. பரமோபதேசம்

உ0. ஐக்கிய வியல்

உக. வர்ணாச்சிரம சந்திரிகை
உஉ. சைவசந்நியாசம்

---

(இவற்றுள் சிவபோகசாரம், திரிபதார்த்த ரூபாதிதசகாரியம், சம்பிரதாய தீபம், சித்தாந்த நிச்சயம், வர்ணாச்சிரம சந்திரிகை, சைவ சந்நியாசம் என்பன அச்சிடப் பட்டன.

எஞ்சியவற்றுள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பிரதிதான் இருத்தலானும் ஒவ்வொன்றும் முறிதல், நெரிதல் இராமபாணம் துளைத்தல், செல்லரித்தல் முதலிய சிதைவுகளானும், அச்சிலேற்றக் காலந் தாழ்க்கின்றது. இவற்றை வைத்திருக்கும் அன்பர்கள் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக சுவாமிகளிடம் சேர்ப்பித்தால் உலோகோபகாரமா யிருக்கும். பொருள்பெற விரும்பினும் கொடுக்கப்படும்.)

---

# பிழை திருத்தம்

| பக்கம் எண் | வரி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 18 | 14 | செய்தும் | செய்வித்தும் |
| 24 | 13 | மௌனவற்றை | மௌனவவற்றை |
| ௪௯ | 27 | மருஉ முடிபின் | மரூஉ-முடிபின் |
| ௪௫ | 26 | பாசத்தார் | பாசத்தாள் |
| ௯௪ | 6 | யோயென | யோவென |
| ,, | 25 | Wordly | Worldly |
| ௮௯ | 3 | நீக்கமன்றி | னீக்கமின்றி |
| ௯௫ | 5 | பரமகீதை | பிரமகீதை |
| ௧௧௮ | 7 | முத்தியாக | முத்தியாய |